உ

# குணசுந்தரன்

## 1-வது அத்தியாயம்

**இரண்டு நண்பர்கள்—தையநாயகம்—சதியாலோசனைக்கு ஆரம்பம்—யாத்திரைக்கு யோசனை.**

பொற்சிகரங்கள் மேகமண்டலத்தை யளாவியுள்ள மாடமாளிகைகள் நிறைந்த இரத்னபுரி யென்னும் நகரம் ஒருகாலத்தில் உலகிலுள்ள எல்லா நகரங்களிலும் அளவிலும் செல்வத்திலும் பெருமையிலும் முதன்மை பெற்றதா யிருந்தது. அந்நகரத்தின் மிக்க அழகான வீதியாகிய சொக்கட்டான் வீதியிலுள்ள ஒரு ஹோட்டலில் ஒருநாள் பகல் இரண்டு வாலிபர்கள் போஜனம் செய்துகொண் டிருந்தார்கள். இருவரும் ஏறக் குறைய ஒரே வயதும் அழகுமுடையவர்கள். சுமார் இருபத்தைந்து வயதிருக்கும். உயரத்தில் மட்டும் சற்று தாரதம்மியமுடையவர்கள். இருவரில் சற்று உயரமாயிருப்பவன் பெயர் குணசுந்தரன்; மற்றவன் பெயர் பஞ்சநாதன். இருவரும் தங்கள் வாசிப்பு முடிந்தபின் சித்திரமெழுதுவதைத் தங்கள் தொழிலாகக் கொண்டார்கள். இருவரும் பாடசாலையில் வாசிக்குங் காலமுதல் நண்பரா யிருக்கிறார்கள்.

குணசுந்தரன் உயர்ந்த குடியிற் பிறந்தவன். அவன்

தாய்மட்டு மிருக்கிறாள். தந்தையில்லை. தந்தை பிரபல வர்த்தகரா யிருந்து கடைசியில் மிக்க நஷ்டமடைந்து அத் துயரமே வியாதியாய்ப் படுத்துவிட்டார். அதிலிருந்து எழுந்திருக்கவே யில்லை. மீதியாயிருந்த சொல்ப சொத் தைக் கொண்டு தாய் தன் புத்திரன் புத்திரி இருவரையும் காப்பாற்றி வந்தாள். இவனுடைய பெரியதந்தை தேசூர் வட்டத்திற்கு மிட்டாதார். அவரால் இவர்களுக்கு உதவி யுண்டு. அவருக்குச் சந்ததியில்லை. அவர் குணசுந்தரன் தன்வீட்டில் வந்திருந்து மிட்டா வேலையைப் பார்க்கும் படி எவ்வளவு கூறியும் இவன் தான் கஷ்டப்பட்டே ஜீவ னம் செய்யவேண்டுமென்ற எண்ணமுடையவனா யிருந் தான். இவன் குணத்திற்காக அவர் இவன்மேல் அதிக அன்பு வைத்திருந்தார். ஆனால் அதை வெளிக்குக் காட் டாமலே யிருந்தார். ஆகையால் கடைசிவரையில் அவ ரால் சாசுவிதமான ஒரு உதவியும் கிடைக்காதென்றே இவர்கள் எண்ணியிருந்தார்கள். அவரோ இவனுடைய செய்கைகளைத்தும் இடைவிடாமல் தன் ஆட்கள் மூல மாய் கவனித்துக்கொண்டே யிருந்தார். குணசுந்தரன் தாயிடம் தெய்வபக்தியும் தங்கையிடம் நிறைந்த அன்பு உடையவன். தீயநடக்கையே கனவிலும் நினையாதவன் ஈசுரபக்தியும் பெரியோரிடம் பயபக்தியும் உடையவன் சாது சேவையில் மிக்க அவாவுடையவன்.

பஞ்சநாதன் சாதாரண குடும்பத்தில் பிறந்தவன் கொஞ்சம் சொத்துடையவன். அவனுக்குத் தாய் தந்தை, சுற்றம் யாருமில்லை. அதற்குமேல் அவனைப்பற்றிய வி ஷம் வெளியாகவில்லை.

இரண்டு நண்பர்களும் ஹோட்டலில் போஜன செய்தபின் சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள்.

பஞ்சநாதன்:—உனக்கு எப்போதும் ஹோட்டல்களில் சாப்பிடுவது மிக்க பிரியமென்று தெரிகிறது.

குணசுந்தரன்:—ஆம். ஆயினும் நீ இன்று முக்கியமாய் இந்த ஹோட்டலுக்கே அழைத்துவந்த காரணம் என்னமோ தெரியவில்லை.

பஞ்சநாதன்:—அதற்கு ஏதோ பிரத்தியேகமான காரணம் இருக்கவேண்டுமென்று தோன்றுகிறதோ ?

குணசுந்தரன்:—இங்கே போஜனத்தில் ஒரு விசேஷமுமில்லாததால் வேறே ஏதோ காரணமிருப்பதாகவே அனுமானிக்கிறேன்.

பஞ்சநாதன்:—அனுமானிக்கிறாயா !

குணசுந்தரன்:—ஆம். புகையைக் கண்டு எப்படி நெருப்புண்டென்று நினைக்கிறோமோ, அவ்வாறே அனுமானப் பிரமாணத்தால் ஆகாரத்தில் விசேஷமில்லாததால் வேறு காரணம் உண்டென்றே நினைக்கவேண்டியிருக்கிறது.

பஞ்சநாதன்:—அப்படியானால் அனுமானப்பிரமாணத்தைப் பிரத்யட்சப் பிரமாணமாக்கிவிடுகிறேன். ஒரு சுண்டெலியும் ஒரு சமயத்தில் சிங்கத்திற்கு உதவி செய்யக் கூடுமல்லவா ?

குணசுந்தரன்:—இந்த விடுகதை வேண்டாம். சங்கதியென்ன கூறு.

பஞ்சநாதன்:—கண்பனே! நீ சித்திரப்படங்கள் எழுதுவதில் மகா நுட்பமான அறிவுடையவனெனினும், வனப்பின் வித்தியாசங்களை நன்கு விளக்கிக் காட்டுவதற்காக பூரண அழகு வாய்ந்த ஒரு உருவம் வேண்டும். அப்படிப் பட்ட ஆள் கிடைப்பது அருமையாயிருக்கிறதென்று பலதரம் முறையிட்டுக்கொண்டிருக்கிறாயல்லவா ?

குணசுந்தரன்:—ஆம். அதற்கும் இதற்கும் என்ன

சம்பாதமே? அப்படிப்பட்ட ஆள் கிடைப்பதுதான் அசாத்தியமா யிருக்கிறது. ஆள் அகப்பட்டாலும் அவர் கள் சம்மதித்து நம் எதிரில் உட்காரவேண்டுமே அது பின் னும் அசாத்தியமா யிருக்கிறது.

பஞ்சநாதன்:—ஒன் அந்த ஆள் ஏழையா யிருந்தால் கொஞ்ச நாளைக்கு தினம் இரண்டொரு மணிநேரம் உன் எதிரில் மௌனமா யுட்கார்ந்திருந்து பணம் சம்பாதித்துக் கொள்ள கஷ்டமொன்றுமில்லையே?

குணசுந்தரன்:—கஷ்டமில்லைதான். ஆனால் ஆள் அகப் படுவதுதான் அசாத்தியம்.

பஞ்சநாதன்:—அசாத்தியததை நான் சாத்தியமாக்கி விட்ட படியால்தான் உன்னை இங்கே யழைத்து வந்தேன்.

குணசுந்தரன் துள்ளியெழுந்து சந்தோஷத்தால் ஆர வாரித்து "நண்பனே, சங்கதி என்ன? உண்மையைத் தெரியப்படுத்திவிடு. இன்னமும் என் மனதை வாதிக் காதே" என்றான்.

பஞ்சநாதன்:—"பொறு, நான் உன் எண்ணத்திற்குத் தக்க ஆளைக் கண்டு பிடித்துவிட்டேன். அந்த ஆளை இங்கு வரும்படி ஏற்பாடு செய்திருக்கின்றேன்" என்று தன் கெடியாரத்தைப்பார்த்து, "ஆச்சு, இப்போது மூன்றடிக் கக் கால்மணியே யிருக்கிறது. கால்மணிக்குள் அந்த ஆள் இங்கே வந்துவிடும்" என்றான்.

குணசுந்தரன்:—அந்த ஆள் பூரணமான வனப்பு வாய்ந்தவள் என்று உனக்கு நன்றாய்த் தெரிகிறதா?

பஞ்சநாதன்:—எனக்கு எப்படித் தெரிந்திருந்தாலும் சற்று நேரத்தில் உனக்கே யெல்லாம் தெரிந்துவிடப் போகிறது. ஒன்றுமட்டும் கூறுகிறேன். கண்டபின் அவள் மேல் காதல்மட்டும் கொண்டு விடாதே.

குணசுந்தரன்:—அதற்குச் சற்றும் பயப்பட வேண்டியதே யில்லை.

இவர்கள் போஜனம் முடிந்து ஒரு விசாலமான அறையிற் சென்று உட்கார்ந்தார்கள். ஐந்து நிமிடத்திற்குள் அறையின் கதவு திறக்கப்பட்டதும் இரண்டு மாதர்கள் உள்ளே வந்தார்கள்.

பஞ்சநாதன் அவர்களைக் கண்டதும் ஆவலோடெழுந்து எதிர் சென்று, "ஆ! வந்துவிட்டீர்களா! வாருங்கள் வாருங்கள். இவர்தான் என் நண்பரென்று நான் கூறிய குணசுந்தரம் பிள்ளை" என்று சுட்டிக் காட்டிவிட்டு தன் நண்பனை நோக்கி இதோ இக்கன்னிகைதான் தையநாயகம் என்று நான் உனக்கு முன்கூறியது. கூட இருப்பது தையநாயகத்தின் தாயார்" என்றான்.

குணசுந்தரன் அக்கன்னிகையைக் கண்டதே பிரமித்து நின்றுவிட்டான். அப்படிப்பட்ட பூரண வனப்புடைய கன்னிகை யுலகில் கிடைப்பாளென்று அவன் நம்பி யிருக்கவே யில்லை. அவள் பசுமையான அபரஞ்சியால் உருக்கி வார்க்கப்பட்ட தங்கச் சிலைபோலவே யிருந்தாள்.

"ஆகா! நான்முகன் இத்தகைய வனப்பையும் சிருஷ்டிக்க வல்லவனோ? இது அழகென்பதே திரண்டு ஒரு உருவமாய் வந்ததோ? விண்ணுலகமாதோ அல்லது மாயாத் தோற்றமோ? சட்டென்று மறைந்துவிடுமோ! இத்தகைய வனப்பை யெழுத நம்மாலியலுமோ? நமது சாமர்த்தியத்தைச் சோதிக்கவே மலரோன் இவளைப் படைத்தானோ?" என்று பலவாறு சிந்தித்துக்கொண்டே குணசுந்தரன் கடைசியில் மெதுவாய், "வாருங்கள், உட்காருங்கள்" என்றான். பஞ்சநாதன் தன் நண்பன் அடைந்த பிரமிப்பைக் கண்டு புன்னகை புரிந்து, "பூரண

அழகு வாய்ந்த ஆளைக் கண்டுபிடிக்க என்னால் முடியா தென்று நினைத்தனையோ, இப்போது என்ன சொல்லு கிறாய்" என்று கேட்பதற்குப் பதிலாக குறிப்பாய்க் குண சுந்தரனை நோக்கினான்.

அதன் பிறகு தையல்நாயகம் பிரதி தினம் இரண்டு மணி நேரம் குணசுந்தரனுடைய சித்திரமெழுதும் அறையில் வந்து உட்காரவேண்டும்; அதற்காக இவ்வளவு தொகை அவன் கொடுக்க வேண்டியதென்று ஏற்பாடு செய்யப்பட்டது. மறுநாளே சித்திரம் எழுத ஆரம்பிப்ப தென்று ஏற்பாடாயிற்று. கன்னிகையின் தாயார் அவ் வாறே யொப்புக்கொண்டபின் இரண்டு மாதர்களும் தாங் கள் தங்கியிருக்கும் இடத்திற்குச் சென்றார்கள்.

நண்பர்கள் இருவரும் ஹோட்டலை விட்டுப் புறப் பட்டு சென்றுகொண்டே யிருக்கையில் குணசுந்தரன் தன் சிநேகனை நோக்கி "உண்மையாகவே இப்படிப்பட்ட ஆளை எனக்காகக் கண்டு பிடிப்பாயென்று நான் நினைத் திருக்கவே யில்லை. நான் இந்த உபகாரம் நீ செய்ததை யென்றும் மறவேன். இவர்களை யெங்கே கண்டுபிடித் தாய்?" என்று வினவினான்.

பஞ்சநாதன் :—"ஒரு ஹோட்டலில் கண்டேன். பிறகு மெதுவாய் விசாரித்தபோது, இவர்கள் நவீனபுரி யென்றும், நல்ல குடியிற் பிறந்தவர்களென்றும், ஏழ்மை ஸ்திதியிலிருப்பதால் இவ்வாறு பொருள் சம்பாதித்து ஜீவனம் செய்யச் சம்மதிப்பார்களென்றும் தெரிந்து கொண்டு இப்படி ஏற்பாடு செய்தேன்" என்றான்.

குணசுந்தரன்:—அன்றிரவு தன் வீட்டில் சயனித்துக் கொண்டபோது, "ஆகா, பஞ்சநாதன் இவ்வளவு சிரத்தை நம் விஷயத்தில் எடுத்துக்கொள்வானென்று நாம் கருதி யிருக்கவே யில்லை.

"உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு."

என்பதுபோல், சிநேகவாஞ்சை இப்படியல்லவோ யிருக்கவேண்டும்" என்று தனக்குத்தானே சிந்தித்துக் கொண்டான்

மறுநாள்முதல் தையநாயகத்தைப் பார்த்து சித்திரம் எழுத ஆரம்பமாயிற்று. அது, முடிந்தவுடனே, அச்சமயம் நடந்த சித்திரக்காட்சிக்கு அனுப்பப்பட்டு முதல் பரிசு பெற்றது. யாவராலும் அது சிலாகித்துக் கூறப்பட்டது. படம் முடிந்தவுடன் மறுநாள் காலை பஞ்சநாதன் குண சுந்தரனை நோக்கி, "நண்பனே, உனக்கு முன்னே கற் பாறை யிருக்கிறது. நீ கண் மூடிச்சென்று அதில் சிரசை மோதிக்கொள்ளப் போகிறாய் என்று அஞ்சுகிறேன்" என்றான்.

குணசுந்தரன் அப்படத்தில் சிரம் அமைந்திருக்கிற மாதிரி சற்று மாற்றப்படவேண்டுமென்று எனக்குத் தெரி யும். நாளைக்கு அதைச் சரிப்படுத்தி விடுகிறேன் என்று முன்னமே கூறினேனே. தையநாயகம் நல்ல உயர்தரமான மாதிரி. மிக்க பொறுமையாய் உட்கார்ந்து கொண்டிருக் கிறாள்" என்றான்.

பஞ்சநாதன்:—அதற்காகத்தான் இப்போது நான் இவ்வளவுதூரம் பேசவந்தது. அவள் மிக்க அழகுடைய வளா யிரா விட்டால் இவ்வளவு சிரத்தை எடுத்துக்கொள்ள மாட்டேன். அவளுடைய சுகதுக்கத்திற்கு நான் ஒரு விஷயத்தில் பொறுப்பாளி யல்லவா. என்னாலல்லவா அவள் இங்கே வந்து சேர்ந்தாள்.

குணசுந்தரன் சற்று முகவாட்ட மடைந்து, "நீ கூறு வதன் கருத்து எனக்கு விளங்கவில்லை. நான் அக்கன்னிகை

மேல் காதல்கொண்டிருக்கிறேனென்று நினைக்கிறயோ?'' என்றான்.

பஞ்சநாதன்:—நீ காதல் கொள்ளவில்லை யென்று எனக்கு நன்றாய்த் தெரியும். அப்படி யிருந்தால் ஒரு விஷயத்திற்குப் பரவாயில்லையே. நண்பனே! விவகாரம் இருக்கிற நிலைமையை நீயே நன்றாய்க் கவனித்துப் பார். என் மூலமாய் இக்கன்னிகையை நீ மாதிரிக்கு அமர்த்திக் கொண்டாய். ஏழையாயிருந்த அவளுக்கு மேலான நிலைமை யின்னதென்று தெரியும்படி செய்துவிட்டாய். தாராளமாய்ப் பணம் கொடுத்து நல்ல சுகத்தை யனுபவிப்பதில் உணர்ச்சி யுண்டாக்கி விட்டாய். அவள் தினம் உன் எதிரில் உட்கார்ந்துகொண்டு உன்னிடம் தாராள மாய்ச்சம்பாஷித்துக் கொண்டிருக்கிறாள். அவள்உன்மேல் காதல்கொள்வதற்கு எவ்வளவு இடங் கொடுக்கக்கூடுமோ அவ்வளவு இடமும் கொடுத்திருக்கிறாய். இம்மாதிரி யவள் தன்னை யறியாமலே உன் விஷயத்தில் ஏமாந்து போகும்படி விட்டிருப்பது நியாயம் என்று நினைக்கிறாயா?

குணசுந்தரன்:—உனக்கென்ன பைத்தியமா? நான் அம்மாதிரி செய்பவனென்று நீ நினைக்கிறாயா! நான் இது வரையில் என்னிடம் மாதிரிக்காகவந்து உட்கார்ந்த மற்ற கன்னிகைகளிடம் எவ்வாறு நடந்துகொண்டேனோ, அப் படித்தான் இக்கன்னிகை யிடத்திலும் நடந்துகொள் கிறேன். நான் அப்படிப்பட்ட துரோகி என்று நீ நினைப்ப தானால் ஒரேவார்த்தையாய் அப்படிக் கூறிவிடு.

பஞ்சநாதன்:—“ நண்பனே! நான் அப்படி நினைப் பேனா? ஆனால் நான் கூறுவது உன் நன்மைக்கென்று நினை. நீ அறியாமல் இக்கட்டில் சிக்கிக்கொள்வதானால் எச்சரிக்கை செய்யவேண்டியது என்போன்ற சிநேகனது கடமை.

"நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு"

என்று தெய்வப்புலமை வாய்ந்த நாயனார் கூறியதை யறியாயா!

அப்பெண் கண்மூடித்தனமாய் உன்மேல் காதல் கொண்டிருக்கிறாள். அக்காதல் தினம்தினம் வளர்ந்து கொண்டே வருகிறது. அவ்விஷயம் என்மனதிற் படுவது போல் உன்மனதிற் படவில்லையா? அவள் உன்னைக் காணும்போதெல்லாம் உன்மேலுள்ள காதல் அவள் நேத்திரங்களில் பிரகாசிக்கிறது. இதன்முடிவு என்னாகும்? நீ அவளை மணம்புரிந்து கொள்வதாய் உத்தேசித்திருக்கவில்லையென்று நினைக்கிறேன்" என்றான்.

இதைக்கேட்ட குணசுந்தரன் திடுக்கிட்டு, "என்ன? என்ன? நான் மணம் செய்துகொள்வதா? நீ பேசுவதைப் பார்த்தால் கேலிசெய்கிறாயென்று நினைக்கிறேன்" என்றான்.

பஞ்சநாதன்:—நீ அக்கன்னிகையோடு ஏளனம் செய்வதா யிராவிட்டால் நான் கூறுவதும் ஏளனமல்ல. அவள் உன்மேல் காதல்கொண் டிருக்கிறாளென்று நீ அறியவேண்டும். ஆயினும் காரியம் மிஞ்சிவிடவில்லை. அவளை வேலையிலிருந்து நீக்கிவிடவேண்டுமென்பது என் கருத்தல்ல. நீ சாக்கிரதையாய் நடந்துகொள்ள முயலவேண்டும். அதாவது அவள் உன்மேல் நம்பிக்கை வைக்கும்படி இடந்தரலாகாது.

குணசுந்தரன்:—அதைப்பற்றி நீ பூரணமாய் நம்பலாம். இவ்வாறு நேரிட்டதற்கே நான் மிக்க வியாகுலப் படுகிறேன். அவள் என் தங்கைமாதிரி. என்னால் அவளுக்கு எள்ளளவு துயரமும் உண்டாகக்கூடாதென்பதே

என் எண்ணம். சரி, இனி நான் சயனத்திற்குச் செல்ல வேண்டும்.

குணசுந்தரன் கூறியபடியே மறுநாள்முதல் தையநாயகத்தினிடம் அவன் நடக்கை மாறுதலடைந்தது: அக்கன்னிகை யதனால் மனவருத்தமடைந்து, தான் ஏதோ குற்றம் செய்துவிட்டதால் குணசுந்தரன் இவ்வாறு மாறுதலடைந்தானென்று எண்ணிக்கொண்டு தன்னால் கூடியவரையில் அவனுக்குத் தன்மேல் பழைய அன்புண்டாகும் வண்ணம் நடந்துகொள்ள முயன்றாள். ஆனால் குணசுந்தரனோ வரவர அவள்விஷயத்தில் பட்டுப்படாமலே நடந்துகொண்டான். இவ்வாறு இரண்டுவாரங்கள் கழிந்தன. தையநாயகியின் மனோவியாகுலம் நாளுக்கு நாள் விர்த்தியடைந்துகொண்டே வந்தது.

ஒருநாள் மாலை பஞ்சநாதனைக்கண்டு குணசுந்தரன் "ஆகா! எனக்குப் போதுமான பணம் அகப்பட்டால் நிம்மதியாய் ஆறுமாதம் நூதனதேசங்களில் சஞ்சாரம் செய்துவருவேன்" என்றான்.

குணசுந்தரன் ஏன் இப்படிக்கூறினானென்று பஞ்சநாதன் அறிவான். அவன் குணசுந்தரன் கூறியதற்கு விடையாய் "நான் இப்போது உன்போலவே கஷ்டதசையிலிருப்பதால் என்னால் உனக்கு உதவி செய்யமுடியாது. ஆயினும் அந்தப் பெரியபடம் நல்ல விலைக்கு விற்றது" என்றான்.

குணசுந்தரன்:—"ஆம் அது உண்மையே, ஆனால் மறுநாளே அதில் பெரும்பாகம் செலவாய்விட்டது" என்றான்.

ஆனால் தன் ஏழை மைத்துனிக்கு அனுப்பியதாய்க் கூறவில்லை. சற்றுநேரம் இருவரும் மௌனமாயிருந்தார்கள். அதன்பிறகு பஞ்சநாதன் "உன்னிடம் பணம் இருந்தால் என்னசெய்வாய்?" என்று கேட்டான்.

குணசுந்தரன்:—"ஒரு ஆயிரம்ரூபாய் இருந்தால் இரு வரும் உடனே இதைவிட்டுத் தேசசஞ்சாரம் செய்யப் புறப்படலாம். குறைந்தது ஆறுமாதம் மறுபடி இங்கு வரமாட்டோம். அதற்குள் எல்லாவிஷயங்களும் சரியான நிலைமைக்கு வந்துவிடும்" என்றான்.

தையநாயகிக்கோ தான் காதல்கொண் டிருக்கும் வாலிபனுக்குத் தன்மேல் காதல் இல்லையென்றும் தன் காதலை யவன் அலட்சியம் செய்துவிட்டா னென்றும் மனதில் துயரமாகியவியாதி வேரூன்றிக்கொண்டு நாளுக்கு நாள் விர்த்தியடைந்து கொண்டிருந்தது.

அந்தோ, ஸ்திரீகள் புருடரைத் தாங்களே நேசித்து மணம் புரிந்துகொள்ளப் பூரணசுயாதீனமுள்ள தேசங் களில் எத்தனை கன்னிகைகள் இத்தகைய மனோவியாதிக் குள்ளாகி அகால மரணத்திற்கு ஆளாகிறார்கள். இது வன்றி பலவித இக்கட்டுகளிலும் சிக்கிக்கொண்டு படாத பாடுபடுகிறார்கள். இவை யாவு முணர்ந்தே நமது முன் னோர் நமது மாதர்க்குக் கொடுத்திருக்கும் சுயாதீனத் திற்கு ஒருவரம்பு ஏற்படுத்தியிருக்கிறார்கள். நமது முன் னோர் நம்மாதர்களுடைய ஆன்மார்த்த க்ஷேமத்தை யனு சரித்தே அவ்வாறு செய்திருக்கிறார்கள். அற்பகால சுக மாகிய இம்மண்ணுலக சுகத்தை யவர்கள் இஷ்டப்படி யனுபவிக்கட்டுமென்று விட்டுவிட்டால், மறுமையில் அவர் கள் மீளாநரகிற் காளாகிறார்கள். அந்தோ! இதை யுண ராமலே நம்மவரிற் சிலர் நமது ஸ்திரீகளுக்கு வரம்பின்றிய பூரணசுயாதீனம் கொடுத்துவிட வேண்டுமென்றும், அப் படிச்செய்வதே பூரண நாகரீகமடைந்ததின் அத்தாட்சி யென்றும் கூறுகிறார்கள். அதனால் நேரிடும் தீமைகளைக் கவனித்தால் அவர்கள் அம்மார்க்கத் தவறாய் நினைக்கவே மாட்டார்கள்.

## 2-வது அத்தியாயம்

**நல்லதிர்ஷ்டம்—தேச யாத்திரை—காதலின் சோகம்—யாத்திரையில் பிரிவினை—குணசுந்தரனும் தையல்நாயகியும் சந்தித்தல்—காதலும் கொலையும் நெருங்கிய உறவினர்—தேசூர் மிட்டா—திருமண ஏற்பாடு—இன்னொரு நண்பன்.**

முன் அத்தியாயத்தில் கூறிய சம்பவங்கள் நடந்த ஒரு வாரங்கழித்து குணசுந்தரனிடம் தபாற்காரன் ஒரு நாட்காலை ஒரு நீண்ட நீலநிறக் கடிதம் கொண்டுவந்து கொடுத்தான். அது யாரோ உத்தியோக முறைமையாய் எழுதினதுபோல் தோன்றியது. மேல்விலாசத்தை நோக்கிய போது அது தனக்குத் தெரிந்தவர் யாரும் எழுதியதல்லவென்று தெரிந்தது. உடனே கவலையோடு குணசுந்தரன் அதைப் பிரித்துப்பார்த்தான். ஒருதரம் வாசித்ததே திடுக்கிட்டு வியப்படைந்து மறுபடி வாசித்தான். உடனே யவன் முகத்தில் மிக்க ஆச்சரியமும் சந்தோஷமுமாகிய குறி பிரகாசித்தது. இதைப்பார்த்துக்கொண்டேயிருந்த பஞ்சநாதன், "நண்பனே! என்ன விசேஷம்? இக் கடிதம் யாரிடமிருந்து வந்தது? என்ன சமாசாரம்?" என்றான்.

குணசுந்தரன்:—மிக்க வியப்பான விஷயம். என் பெரியதகப்பன் ஒருவர் தேசூர் மிட்டாதாரா யிருக்கிறாரென்று கூறியிருக்கிறேனே நினைவிலிருக்கிறதா?

பஞ்சநாதன்:—ஆம், ஆம். செல்வவந்தன், உங்களுக்கு அவ்வளவாயுதவியில்லை தெரியும்; என்ன அதைப்பற்றி?

குணசுந்தரன்:—"அவர் மரணமடைந்தார். இக்கடிதம் அவருடைய லாயர் எழுதியது. இதை வாசித்துப் பார்" என்று கடிதத்தைப் பஞ்சநாதனிடம் தந்தான்.

அக்கடிதத்தில் பின்வருமாறு வரைந்திருந்தது:—

ம-ா-ா-ஸ்ரீ, குணசுந்தரம் பிள்ளையவர்கள் சமூகத்திற்கு, லாயர் கிருஷ்ணராய தத்தர் தெரிவித்துக்கொண்டது :—

தங்கள் பெரிய தந்தையும் தேசூர் மிட்டாதாரரு மாகிய ம-ா-ா-ஸ்ரீ, செல்வகேசவப் பிரபு, இம்மாதம் 12வ பரலோகப் பிராப்தி யடைந்தனர்.

அவருக்குச் சந்ததியில்லை யாதலால் அவர் எழுதிவைத் திருக்கும் மரணசாதனத்தின்படி தங்களையே தன்முழு ஆஸ் திக்கும் பூரண வாரிசுதாராக நியமித்திருக்கிறார். இதனால் தேசூர் மிட்டாவும், பாங்கிகளிலுள்ள ரொக்கத் தொகை களும் தேசூரிலிருக்கும் மாளிகையும் தோட்டமும், நக ரத்திலுள்ள மாளிகையும், ஆக மொத்தத்தில் வருடம் ஒன் றுக்கு ஒன்றரை இலட்சம் ரூபாய் வருமானம் தரக்கூடிய சொத்து அவர் இறந்ததினம் முதல் தங்களுக்குச் சொந்த மாய் விட்டிருக்கிறது. தாங்கள் தயவுசெய்து நேரில் எங் கள் ஆபீசுக்கு வந்தால் சொத்தையும் அதைச்சேர்ந்த பத் திரங்கள் முதலியவைகளையும் தங்கள் சுவாதீனத்தில் ஒப் பித்துவிடச் சித்தமாயிருக்கிறோம்.

தங்கள் முன்னோர் வழக்கப்படி தாங்களும் எங்க ளையே தங்கள் காரியஸ்தராக ஏற்றுக்கொள்வீர்க ளென்று பூரணமாய் நம்பி அதற்காக நன்றியுள்ளவர்களா யிருக்கி றோம்.

இப்படிக்கு,
கிருஷ்ணராயதத்தர் அண்டு கம்பெனி,
சொலிஸிடர்கள்.

15--10--08
இரத்னபுரி

பஞ்சநாதன் இதை வாசித்ததும் குணசுந்தரனை நோக்கி "நண்பனே, உனக்குச் செல்வம் கிடைத்ததற் காக நானே முதல்முதல் சந்தோஷங் கொண்டாடுகிறேன்.

இனி நீ ஜீவனத்திற்காகப் படம் எழுதவேண்டியதில்லை; சந்தோஷத்திற்காக உன் இஷ்டம்போல் எழுதலாம். உன்னிஷ்டம்போல் தேசயாத்திரை செய்யலாம். உன் கஷ்டகாலமெல்லாம் போய்விட்டது" என்றான்.

அன்று மாலையே குணசுந்தரன் லாயர் ஆபீசுக்குச் சென்றான். அவர் இவனை மிக்க மரியாதையாய் வரவேற்றுக்கொண்டு, இறந்துபோன செல்வகேசவப் பிரபுவின் சொத்து முழுதும் அவன் சுவாதீனப படுத்திவிட்டார். அன்றையதினமே அவனும் பஞ்சநாதனும் சீக்கிரத்தில் புறப்பட்டு தேசயாத்திரை செல்வதென்று தீர்மானிக்கப் பட்டது.

மறுநாள் குணசுந்தரன் தையநாயகத்திற்கு ஒரு தங்க ஆபரணமும், ஆறுமாதச் சம்பளத்திற்குச் சமமான தொகையும் கொடுத்து, "குழந்தாய்! என்னை மறந்துவிடாதே, உன் க்ஷேமத்தைப் பற்றி எனக்குத் தெரிவித்துக் கொண்டேயிரு. உனக்கு எப்போது உதவி வேண்டுமாயினும் நான் ஒரு சகோதரன் இருக்கிறேன் என்று நம்பியிரு. உனக்கு உதவிசெய்வது எனக்கு எப்போதும் சந்தோஷமே" என்றான்.

அச்சமயம் வெளியில் வண்டியில் உட்கார்ந்திருக்கும் பஞ்சநாதன் "சீக்கிரம்வா! இரயில் தப்பிப்போம். சீக்கிரம். சீக்கிரம்" என்றான்.

உடனே குணசுந்தரனும் வந்து வண்டியில் ஏறிக்கொள்ள, இருவரும் துரிதமாய் இரயில் ஸ்டேஷனுக்குச் சென்றார்கள். தையநாயகியோ பாபம் சித்திரம் எழுதும் அறையிலேயே மூர்ச்சையாய் விழுந்துவிட்டாள்.

குணசுந்தரனும் பஞ்சநாதனும் இரத்னபுரியை விட்டுப் புறப்பட்டபின் பல நகரங்களைப் பார்த்துக் கொண்டு, டிசம்பர்மாத மத்தியில் இங்கிலீஷ் தேசத்தில் நீலகிரிக்களையி

னுள்ள லக்னௌ என்னும் நகரத்தை யடைந்தார்கள். அந்த அதிசயமான தேசத்தை யப்போதுதான் அவர்கள் முதல் முதல்பார்த்தது. குணசுந்தரன் சூரியாஸ்தமானக் காட்சியைக் கண்டு மிக்க வியப்படைந்தான். அப்போது பஞ்சநாதன் அவனை நோக்கி,

"நண்பனே, இன்று உனக்கு ஒரு கடிதம் வந்ததே எங்கிருந்து வந்தது?" என்றான்.

குணசுந்தரன்:—"அது தையநாயகம் எழுதியது" என்றான்.

பஞ்சநாதன் வியப்படைந்தவன் போல் தையநாயகமா? என்றான்.

குணசுந்தரன்:—"ஆம். நாம் இரத்னபுரியை விட்டுப் புறப்படும்போது தான் எங்கு சென்றாலும் அந்த விலாசத்தை எனக்குத் தெரிவிக்கும்படி தையநாயகத்திற்குக் கூறியிருந்தேன். இதோபார் அவள் எழுதிய கடிதத்தை" என்று அதைப் பஞ்சநாதன் கையிலளித்தான்.

பஞ்சநாதன் அதை வாங்கி வாசித்துவிட்டு மறுபடி குணசுந்தர னிடமே யளித்துவிட்டான். அக்கடிதத்தில் சுருக்கமாய் அவள் அப்போதிருக்கும் விலாசம் எழுதப் பட்டிருந்ததோடு, சீக்கிரத்தில் மறுபடி யும்மிடம் எனக்கு வேலை கிடைக்கும்படி கடவுள் அநுக்கிரகம் செய்வா ரென்று பிரார்த்திக்கிறேன் என்று எழுதியிருந்தது.

இரண்டு நாள் கழித்து இருவரும் கெய்ரோ நகரத்திற்குச் சென்றார்கள். அங்கிருக்கும் விசித்திரமான காக்ஷிகளைப்பார்த்து பலபடங்கள் எழுதினார்கள். இவர்கள் கெய்ரோவிற்கு வந்த நான்காவது நாள் இரத்னபுரியி லிருந்து குணசுந்தரனுக்கு ஒரு தந்திசமாசாரம் வந்தது. அதில் அவன் தயார் அதிக வியாதியுற்றிருப்பதாய்க் கண்டிருந்தது. இதைக் கண்டதும் குணசுந்தரன் மிக்க வியாகுல

மடைந்து, உடனே பஞ்சநாதனை நோக்கி, "நண்பனே! நான் இன்றைக்குப் புறப்பட்டு புகைப்படகு மார்க்கமாய் நவீனபுரிக்குச்சென்று அங்கிருந்து கரைவழியாய் இரத்ன புரிக்குப் போகிறேன். நீ என் விருந்தாக என்னோடு திரும்பி விடவேண்டும். நீ தனியேசென்று துருக்கி பலஸ்தீனம் முதலிய நாடுகளையும் பார்த்துக்கொண்டு ஊருக்கு வர லாம்" என்றான்.

பஞ்சநாதன் "அந்தோ, நீ பிரிந்துவிடுவதைப பற்றி மிக்க வியாகுலப் படுகிறேன். நான் தனியே சென்று யாவற்றையும் பார்த்துவரலாமே. ஆனால் என்னிடம்—"

குணசுந்தரன்:—"ஆனால் என்பதே வேண்டாம். எல் லாம் ஏற்பாடாய் விட்டது. வழிச்செலவிற்கு இதோ பணம்" என்று ஒரு பைநிறைந்த பணத்தைக் கொடுத் தான்.

பஞ்சநாதன் "ஆ! உதார குணமுடைய செல்வவந் தனது சிநேகம் இருப்பது எப்போதும் நல்லதே" என்று மனதில் எண்ணிக்கொண்டான்.

அதேப்படி அன்று குணசுந்தரன் நவீன புரிக்கும் பஞ்சநாதன் பலஸ்தீனுக்கும் புறப்பட்டார்கள். குணசுந் தரனுக்குத் தையநாயகம் எழுதியகடிதத்தில் அவள் நவீன புரியிலிருப்பதாய்த்தான் குறித்திருந்தது. ஆகவே அவன் நவீனபுரி சேர்ந்த தினம் மாலை தான் இறங்கியிருக்கும் ஹோட்டலைவிட்டுப் புறப்பட்டு தையநாயகம் வசிக்கும் வீதியை நோக்கி நடந்தான். அவள் எழுதிய கடிதத்தில் குறித்திருக்கும் வீட்டிற்குச் சென்று விசாரித்தபோது அவள் கால்மணிக்கு முன்தான் எங்கோ வெளியிற்சென்றா ளென்று தெரியவந்தது. அவன் திரும்பி வீதிக்கு வந்த போது தையநாயகம் வருவதைக்கண்டு நின்றான்.

கன்னிகை யவனைக்கண்டதே மிக்க வியப்போடு "ஆ

தாங்களா! இங்கெப்படி வந்தீர்? நீர் வந்திருப்பதே எனக்குத் தெரியாதே" என்றாள்.

குணசுந்தரன்.—"நான் இன்றுதான் வந்தேன். இரத்னபுரிக்குப் போகிறேன்" என்றான்.

தையநாயகி:—"ஆ! இரத்னபுரிக்குப் போகிறீர்களா! அங்கு இப்போ அதிக குளிராயிருக்கும். முன் இருந்த விடத்தில்தானே இருப்பீர்" என்றாள்.

குணசுந்தரன்:—இல்லை அதை விட்டுவிட்டுத் தேரூரில் சென்று வாசம் செய்வேன். உனக்கு சௌக்கியத் தாழ்வு போல் காண்கிறது.

தையநாயகம்:—இல்லை. நான் பூரண சுகமாகவே யிருக்கிறேன்.

குணசுந்தரன்:—உன் தாயார் சுகந்தானா? அந்தம்மாளைக் காணவேண்டும்.

தையநாயகம்:—அம்மாளும் சுகமே அடிக்கடி யும்மைப்பற்றியே பேசிக்கொண்டிருப்பார்கள். கிராமத்திற்குச் சென்றிருக்கிறார்கள். ஒவ்வொரு நிமிஷமும் வருவார்களென்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆ! அம்மாள் உம்மைக்கண்டால் எவ்வளவோ சந்தோஷப்படுவார்கள். எங்களுக்குத் தாங்கள் செய்திருக்கும் பேருபகாரத்திற்கு என்ன கைம்மாறு செய்யப்போகிறோம்.

குணசுந்தரன்:—அப்படியல்ல. உன்னால் நான் சித்திரம் எழுதுவதில் நல்ல கீர்த்திபெற்றேன். நீ செய்த உதவிக்கு நான் நன்றியுள்ளவனா யிருக்கவேண்டும். அதைப்போன்ற அழகானபடம் நான் எழுதியதேயில்லை. அனேகம் பேட்டிகள் அதன் வனப்பைக் கண்டு பொறாமைப்படுகிறார்கள்" என்றான்.

இவ்வாறு இவர்கள் இருவரும் சம்பாஷித்துக்கொண்டிருக்கையில் ஒருவாலிபன் இவர்களை யறியாமலே இவர்

கள் அருகில் வந்துநின்றான். அவன் உயரமாய் மெலிந்த தேகமுடையவன். அவன் அங்குவந்து நின்றதும் குண சுந்தரனை மிக்க கோபப் பார்வையாய்ப் பார்த்தான். நையநாயகம் அவனைக் கண்டதும் மனத் தாங்கலடைந் தாள். குணசுந்தரன் அவன் நிலைமையைக் கண்டதும் நையநாயகத்தை நோக்கி "இம்மனிதன் உன் நண்பர்க ளில் ஒருவனா? எதற்காகவோ மிக்க கோபமாயிருப்ப வன்போல் காண்கிறது" என்று தன் தேசபாஷையில் கேட்டான். கன்னிகைக்கு மட்டும் அப்பாஷை பழக்கத் தால் தெரியும்.

அக்கன்னிகை:—"இவன் தம்புசாமி. கொஞ்சம் ஆத் திரக்காரன். ஆனால் கெடுதி நினைக்கிறவனல்ல" என்றாள்.

குணசுந்தரன்:—அப்படியானால் இவன் போய்விடுவது நலமென்று நினைக்கிறேன். இவன் பார்க்கிற பார்வை யைப் பார்த்தால் என்னை மென்று தின்றுவிட எண்ணுகிற வன்போல் இருக்கிறது.

நையநாயகம்:—"இவன் ஒரு பெருமுரடன், ஜாக்கிர தையாயிராவிட்டால் இவன் ஒரு நாளைக்குச் சங்கடத்தில் சிக்கிக்கொள்வான்" என்று சற்று கோபத்தோடு கூறி னாள்

குணசுந்தரன்:—"அது அவ்வளவு அதிசயமான விஷயமல்லவென்றே நினைக்கிறேன்" என்றான்.

பிறகு கன்னிகை அவ்வாலிபனை நோக்கி உன் வேலையைப் பார்த்துக்கொண்டு நீபோவென்று கையாற் காட்டினாள். அதற்குத் தம்புசாமியென்பவன் முதலில் ஏதோ மறுத்துக் கூறுபவன்போல் தோன்றினும், உடனே நிதானித்து வீதி யின் வழியே திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே சென்றான்.

தம்புசாமி சென்றபின் குணசுந்தரன் நையநாயகியை

நோக்கி, "இப்போது நான் ஒரு ஏற்பாடு கூறுகிறேன். அதாவது, நான் முன்கூறியபடி இரத்னபுரிக்குப்போகிறே னாதலால் இன்றுமட்டுமே இங்கு தங்கியிருப்பேன். நீயும் உன் தாயும் மாலை யென்னோடு போஜனமருந்தினபின் மூவ ரும் இரவிற்கு நடக்கும் கள்வர்தலைவன் என்னும் நாடகத் தைப்போய் பார்க்கலாம் என்பதே. கொஞ்சநேரமாவது பழைய சங்கதிகளைப் பற்றி பேசலாம். உனக்கு ஒரு ஆக்ஷேபணையுமில்லை யென்று நம்புகிறேன்" என்றான்.

தையநாயகத்திற்கு நாடகத்தில் மிக்க பிரியம் ஆத லால் சந்தோஷத்தோடு மேற்படி ஏற்பாட்டிற்குச் சம்ம தித்தாள். அதேப்படி இராத்திரிக்கு மூவரும் ஒரு விடத் தில் சந்திப்பதென்றும், அங்கிருந்து போஜனம் செய்து விட்டு நாடகத்திற்குச் செல்வதென்றும் முடிவுசெய்து கொண்டபின், குணசுந்தரன் தான் தங்கியிருக்கும் ஹோட் டலுக்குச்சென்று குறித்தகாலத்தில் மூவரும் சந்திக்க வேண்டிய விடத்திற்குச்சென்றான். அந்தவிடம் ஒருசிறிய ஹோட்டல் போன்றதே. இவன் அங்குசேர்ந்த கால்மணி நேரத்தில், தையநாயகமும் அவள் தாயாரும் மிக்க நாணய மான உடைகளை யணிந்துகொண்டு உள்ளே வருவதைக் கண்டான். உடனே மூவரும் போஜனத்திற்கு உட்கார்ந் தார்கள். மூவரும் நல்ல உயர்தரமான ஆகாரங்களை யருந் திக்கொண்டிருக்கையில் மூதாட்டி குணசுந்தரனைநோக்கி, " அப்படியானால் நீ இரத்னபுரிக்குச் செல்கின்றாய். கூடு மானால் நாங்களும் வருவதானால் எனக்கு விருப்பமே யென்று நம்புகிறேன் " என்றாள்.

குணசுந்தரன்:—" அப்படிப் பிரியமிருந்தால் ஏன் அப்படியே செய்யக்கூடாது? உன் குமாரத்திக்கும் போது மான தொழில் எப்படியும் கிடைக்கும் என்பது நிச்சயம் என்னால்கூடிய உதவிசெய்ய நான் எப்போதும் சித்தமா

யிருக்கிறேன். என்வரையில் நீங்கள் இவ்வளவு துரிதமாய் என் அதைவிட்டு வந்து விட்டீர்களென்பது எனக்கு விளங்கவில்லை" என்றான்.

அதன்பிற்கு இதர விஷயங்களைப்பற்றி சம்பாஷிக்க ஆரம்பித்து, அவர்களுடைய தற்காலக்ஷேமத்தைப் பற்றியும் பஞ்சநாதனைப்பற்றியும் சம்பாஷித்தார்கள். தையநாயகத்திற்குக் குணசுந்தரனிடமிருந்த வேலை நின்றுவிட்டதற்கும், தாங்கள் இரத்னபுரியிலிருந்து வந்துவிட நேர்ந்ததற்கும், பஞ்சநாதனே காரணமென்று மாதர்கள் மனதில் தோன்றியிருந்தது. ஆயினும் அதைப்பற்றி குணசுந்தரனிடம் அவர்கள் ஒன்றும் பிரஸ்தாபிக்கவில்லை. இரண்டு வாலிபர்களுக்குள்ளும் இருக்கும் நட்பையவர்களறிவார்கள்.

கடைசியில் அம்மூதாட்டி குணசுந்தரனை நோக்கி, " நாங்கள் இரத்னபுரிக்கு வருவதைப்பற்றி சிந்திக்கவேண்டும். எங்கள் விவகாரங்களில் அது பெரியமாறுதலையுண்டாக்கும்; ஆனால் தையநாயகம் இன்னம் இளமையாயிருக்கிறாள். நவீனபுரியில் எங்களுக்கு ஒருவேலையுமில்லை. அவள் மணம்புரிந்து கொண்டால் நலமென்பது என் எண்ணம். அவளோ அதைச்செவியில் போட்டுக்கொள்வதேயில்லை. இக்காலத்தில் மூத்தோர் வார்த்தையைச் சிறுவர்கள் கேட்பதில்லை" என்றாள்.

அச்சமயம் தையநாயகியின் முகம்வெளுத்து விட்டதைக் குணசுந்தரன் கவனித்தான். உடனேயவன் வேறு விஷயத்தைப்பற்றி சம்பாஷிக்க ஆரம்பித்தான். அதன்பிறகு போஜனம் முடிந்துவிட, மூவரும் அங்கிருந்து நாடகசாலைக்குப் புறப்பட்டார்கள்.

இவர்கள் புறப்படும்போது இரவு இருட்டாயிருந்தபடியால், வீதியில் எதிர்வாடையில் நின்று ஒருமனிதன்

தங்களைப்பார்த்துக் கொண்டிருப்பதை யிவர்கள் காண வில்லை. குணசுந்தரன்மட்டும் பார்த்தான். ஆனால் ஆள் இன்னவனென்று தெரியவில்லை. ஆயினும் அவன் தம்பு சாமியாகவே யிருக்குமென்று நினைத்துக்கொண்டான். நாம் காலையில் இவ்வூரை விட்டுப்போய் விடப்போகிறோம். இவனுக்குப் பொறாமையாயிருந்தால் நாளைக்கு அது நீங்கி விடும். ஆகையால் இதைப்பற்றி நாமேன் குழப்பம் செய்ய வேண்டுமென்றும் ஒன்றும் கூறாமல் சென்றான்.

நாடகசாலைக்குச்சென்று மூவரும் நாடகம் பார்த்த பின் குணசுந்தரன் இருவரையும் அழைத்துக்கொண்டு போய் அவர்கள்வீட்டு வாயிற்படியண்டை விட்டு விட்டு, தனியே தன்வாசஸ்தலத்தைநோக்கி நடந்தான். அவன் அவர்களைவிட்டுப் பிரியும்போது, "நான் சீக்கிரத்திலேயே யுங்களை இரத்னபுரியில் சந்திப்பேனென்று நம்புகிறேன்." என்று கூறிவிட்டுச் சென்றான்.

குணசுந்தரன் அவர்களை விட்டுவிட்டுத் தான் இறங்கி யிருக்கும் ஹோட்டலுக்குப் புறப்பட்டபோது. அன்று பகல்கண்ட ஒரு குறுக்குவழியே நடந்தான். அது ஒரு இருண்ட சந்து. அதின் வழியேசென்று கோடியில் திரும் பும்போது யாரோ பின்னால் சமீபத்தில் வருவதுபோல் காலடிச் சத்தம் கேட்கவே சட்டென்று திரும்பிப் பார்த் தான். வந்தமனிதன் சமீபத்தில் வந்துவிடவே அவன் தம்புசாமியென்று தெரிந்துகொண்டான். தம்புசாமி தன் வலதுகையையோங்கியதையும் அக்கையில் ஒருகூர்மை யான ஈட்டி பிடித்திருப்பதையும்கண்ட குணசுந்தரன் சட் டென்று இலகுவாய்ப்பாய்ந்து தன் இடதுகரத்தால் அவன் ஈட்டிபிடித்தோங்கிய வலதுகையை மணிக்கட் டண்டை பிடித்துக்கொண்டு, தன் வலதுகையால் ஓங்கி யொரு குத்துவிட்டான். அக்குத்து தம்புசாமியின் முக

வாய்க்கட்டையின்கீழ் தாக்க அவன் அப்படியே மல்லாந்த
படி பூமியில்விழுந்தான். கையிலிருந்த கட்டி தரையில்
எகிறிவிழுந்தது. குணசுந்தரன் அந்த கட்டியைக் கையி
லெடுத்துக்கொண்டு, "நண்பனே! இந்தக்கட்டி யுன் அடை
யாளத்திற்காக என்னிடத்திலேயே யிருக்கட்டும்" என்று
கூறிவிட்டு, அதைத் தன் மடியில் வைத்துக்கொண்டு
ஹோட்டலுக்குச் சென்றான்.

தேரூர்மிட்டா நல்ல நீர்வளமும் நிலவளமும் மலைவள
மும் உள்ளசெழிப்பான பூமி. அக்கிராமத்திலுள்ள செல்வ
சேசவப்பிரபுவின் மாளிகை ஒரு அழகான நந்தவனத்தின்
மத்தியிலுள்ள ஒருவிசாலமான அழகிய கட்டிடம். இறந்து
போன மிட்டாதாருக்குக் குணசுந்தரன்மேல் உள்ளத்தில்
எப்போதும் விசுவாசம் இருந்ததென்று முன்னமே கூறி
யிருக்கிறோம். தன் ஆஸ்தி அவனவசத்தில் சேர்ந்தால்
நன்மையையே யுண்டாக்குமென்று அவருக்குத்தெரியும்
அவன் இதை யனுபவிக்கும்போது நாம் கண்ணால் பார்த்
துக் களிக்கவேண்டு மென்பது அவருடைய எண்ணம்.
ஆனால் அது கைகூடவில்லை. "நாமொன்றுநினைக்கத் தெய்
வம் தாமொன்று நினைக்கும்" என்பது பொய்யோ ?

குணசுந்தரன் தேரூருக்குப் போய்ச் சேர்ந்ததே,
அங்குள்ள அனைவரும் அவன்மேல் மிக்க விசுவாசம்
கொண்டார்கள். குணசுந்தரன் இயற்கையாகவே காரு
ண்யகுணமுடையவனானதால் தன்கையில் பொருள் வந்
ததே ஏழைகளுக்கு மிக்க அனுகூலமானவனாய் விளங்கி
னான். இதனால் யாவர்க்கும் இவனிடம் மிக்க அன்பு உண்
டாய்விட்டது.

தேரூரில் தேவராஜப்பிரபு என்னும் உயர்குலச்
சீமான் குற்றங்களை விசாரிக்கும் மாஜிஸ்ட்ரேட் அதிகாரம்
வகித்திருந்தார். அவர் குணசுந்தரனைப் பாலியமுதலறிந்

தவர். அவன் தந்தைக்கும் பெரியதந்தைக்கும் பாலிய நேசர். அவருடைய மனைவி மகா உத்தமி. அவர்களுக்கு மங்களவல்லி அல்லது மங்களாம்பாள் என்ற ஒரே ஒரு புதல்வியுண்டு. அவளுக்குப் பதினெட்டு வயதிருக்கும். மேகத்தையும் பழிக்கும் கறிய அளகபாரத்தையும், பூரண சந்திரனைப்போன்ற குளிர்ச்சி பொருந்திய முகாரவிந்தத்தையும், வலம்புரிபோன்ற கழுத்தையும், மின்னற்கொடி போன்ற இடையையும், அன்னத்தைப்போன்ற நடையையும் உடைய அக்கன்னிகை எவ்விஷயத்திலும் குறைவில்லாத பூரணவனப்புடையவள். அவளுடைய குணமோ வனப்பிற்குத் தோற்றதல்ல. ஸ்திரீகளுக்கு வேண்டிய அச்சம், மடம், நாணம், பயிற்புமுதலிய குணங்களையும், கெம்பீரமும் பெருந்தன்மையுமான நடைநொடி பாவனைகளையுமுடையவள். மங்களவல்லியும் குணசுந்தரனும் பாலியத்தில் ஒன்றாய் விளையாடிக்கொண்டிருந்தவர்கள்.

குணசுந்தரன் இரத்னபுரிவந்து சேர்வதற்குள் அவன் தாயார் பூரணசுகமடைந்து விட்டாள். அவளும் அவனுடைய தங்கை கிருஷ்ணாபாயும் அவனைமிக்க சந்தோஷமாய் வரவேற்றுக்கொண்டார்கள். குணசுந்தரன் ஊருக்குத்திரும்பிவந்து மூன்றுமாதமாய்விட்டது. இப்போது குணசுந்தரன்மேல் அன்புடையவர்கள் யாவரும் அவன் விஷயத்தில் ஒரே குறையிருப்பதாய்ச் சிந்திக்கலானார்கள். அதாவது, அவனுக்கு மணமுடிந்தால் அவனுடையசுகம் பூரணமாகுமென்பது எல்லாருடைய கருத்தும்.

குணசுந்தரன் மாளிகையும் தேவராஜப்பிரபுவின் வாசஸ்தலமும் சமீபத்திலேயே யிருப்பதால், கிருஷ்ணாபாயும் மங்களாம்பாளும் எப்போதும் பிரியாமலே யிருப்பார்கள். ஆகையால் குணசுந்தரன் வீட்டிற்கு வந்தபிறகு மங்களாம்பாளை யடிக்கடி பார்க்க நேரிட்டது. ஆகவே

நாளடைவில் இவனுக்கு அவள்மேல் பாலியமுதலிருந்த சினேகவாஞ்சையானது மெதுவாய் விர்த்தியடைந்து காதலாய் மாறியது. மங்களவல்லியின் பெற்றோர்க்கு எந்கெனவே தம்புதல்வி ஒருநாளைக்கு தேசூர் பிட்டாவிற்குச் சொந்தக்காரியாக வேண்டுமென்ற அவாவுண்டு. குணசுந்தரன் தாய்க்கும் தங்கைக்கும் மங்களாம்பாள் தங்கள் குடும்பத்தில் வந்துசேர்ந்துவிடவேண்டுமென்கிற அவா அதிகமாயுண்டு. இக்காரணங்களால் குணசுந்தரனுக்கு மங்களாம்பாளை மணம்புரிவிப்பதென்று இரண்டு குடும்பத்திலுமுள்ள முதியோர்களும் தீர்மானம் செய்தார்கள் என்பதைக் கேட்க நேயர்கள் அதிசயப்படமாட்டார்களென்று நம்புகிறோம். மங்களாம்பாளும் அவனை மணம் புரிந்துகொள்ளப் பூரணதிருப்தி யுடையவளாயிருந்தாள் என்று நன்குவிளங்கியது.

குணசுந்தரனுக்குப் பெரியராஜு என்ற ஒரு பாலிய நண்பனிருந்தான். ஒருநாள் அவனிடமிருந்து குணசுந்தரனுக்கு ஒரு கடிதம்வந்தது. அதில் ஒருவருடகாலமாய் தூரதேச யாத்திரை சென்றிருந்த பெரியராஜு மறுநாள் காலை இரத்னபுரிக்கு வருவதாயும் குணசுந்தரனை யங்கு சந்திக்க அதிக ஆவலாயிருப்பதாயும் எழுதியிருந்தது. இக்கடிதத்தை வாசித்துப்பார்த்த குணசுந்தரன் தன் தாயிடமும் தங்கையிடமும் விடைபெற்றுக்கொண்டு, அன்றுமாலை இரயிலிலேறி இரத்னபுரிக்குச்சென்றான்.

மறுநாள் காலை 10-30-மணிவண்டிக்கு நகரத்திலுள்ள கோட்டை ஸ்டேஷனில் இரயில்வந்துநின்றதே, ஒருவாலிபன் ஒருகையில் ஒருபையைப் பிடித்துக்கொண்டு மேடைமேல்நின்று நாற்புறமும் யாரையோ தேடுகிறவன்போல் சுற்றிச்சுற்றிப்பார்த்தான். குணசுந்தரன் அவனைக்கண்டதும் ஓடிப்போய் "ஆ! பெரியராஜு!" என்றான். உடனே

இரண்டு நண்பர்களும் மார்போடு மார்புசேர ஆலிங்கனம் செய்துகொண்டார்கள்.

---

## 3-வது அத்தியாயம

**வேட்டை—அதிசயமான புள்ளிமான்—பெரியோர் தரிசனமும், அரிய ஞான சம்பாஷணையும்—**

குணசுந்தரமும் பெரிய ராஜனும் ஸ்டேஷனில் சந்தித்த பிறகு ஒருவண்டியில் ஏறிக்கொண்டு ஹோட்டலுக்குச் சென்றார்கள். குணசுந்தரனுக்கு தேசூர் மிட்டா சொந்தமாய் விட்ட சங்கதியைப் பத்திரிகைகளின் வாயிலாகப் பெரியராஜன் முன்னமே யறிந்திருந்தான். யாத்திரையிலிருந்து திரும்பி வந்தவனுடைய ஆயாசந்தீர்வதற்காக அன்று நகரத்திலேயே தங்கி இருவரும் க்ஷேமலாபங்களைப் பேசிக்கொண்டிருந்தார்கள். குணசுந்தரன் பெரியராஜன் தன் மிட்டாவிற்குவந்து இரண்டொரு நாளாவது தன்னோடுகூட இருந்து விட்டுச் செல்லவேண்டுமென்று வற்புறுத்தியபடியால் பெரியராஜன் அவ்வாறே சம்மதித்தான்.

மறுநாள் காலை இரயிலேறி இருவரும் தேசூர் வந்து குணசுந்தரனுடைய மாளிகையில் இறங்கினார்கள். மிட்டாவைச் சேர்ந்த பெரிய காட்டில் நல்ல வேட்டையுண்டு. குணசுந்தரன் முன்னோர்கள் வேட்டையாடுவதில் மிக்க பிரியமுடையவர்கள். இப்போது தன் பிரிய நண்பன் வந்திருப்பதால் குணசுந்தரனும் அவனை யழைத்துக்கொண்டு வேட்டைக்குச் செல்வதென்று ஏற்பாடு செய்யப்பட்டது. மறுநாள் காலையில் வேட்டை நாய்களும், வேடர்களும், வில்லியர்களும் புடைசூழ, காட்டுமிருகங்களை விரட்டப்பலவிதமான ஓசைக் கருவிகளோடு இரண்டு நண்பர்

களும் புரவிகள்மேல் வேட்டைக்குப் புறப்பட்டார்கள். காலை எட்டுமணி சுமாருக்கு வானத்தை யளாவிய உயர்ந்த விருக்ஷங்களும், அடர்ந்த புதர்களும், சலசலவென்று சதா கோஷ்டிக்கும் காட்டாறுகளும் நிறைந்துள்ள அடர்ந்த கானகத்தில் நுழைந்தார்கள். தக்கவிடத்தில் போய்ச் சேர்ந்ததே, ஒரு ஆற்றோரத்தில் வசதியான மேட்டுப் பூமியில் ஒரு பெரிய கூடாரம் நாட்டப் பட்டது. இவர்கள் கொண்டுவந்த உணவுப் பொருள்கள் முதலிய வனைத்தும் தக்க காவலர்வசம் அங்குவைக்கப்பட்டன. அதன் பிறகு ஆயுதபாணிகளான அனைவரும் இருண்ட அவ்வடவியில் நுழைந்து வேட்டையாட ஆரம்பித்தார்கள்.

சில ஆட்கள் நான்கு திக்குகளிலும் பிறிந்து சக்ராகாரமாய் வளைந்துநின்று கொம்பு, தப்பட்டை முதலிய கருவிகளைக்கொண்டு காட்டுமிருகங்களை அவைகள் பதுங்கியிருக்கும் மறைவிடங்களிலிருந்து வெருண்டு வெளிகிளம்பி சிதறியோடும்படி செய்தார்கள்.

சற்று நேரத்திற்குள் கரடிகள், புலிகள், புள்ளிமான் கலைமான்கள், கடம்பைகள், காட்டுப்பன்றிகள் முதலிய மிருகங்கள் நான்கு திக்கிலும் கண் மண் தெரியாமல் சிதறுண்டு ஓடத்தலைப்பட்டன. அவைகளில் ஆயுள் முடிந்தவைகள் எல்லாம் வேட்டையாட்களின் கண்களுக்குப்புலப்பட்டு மாண்டன. சில வேட்டை நாய்களிடம் சிக்குண்டு சின்னாபின்னப்பட்டு மாண்டன. வேட்டையின் உற்சாகத்தால் காட்டிற்குள் நெடுந்தூரம் போய்விட்டார்கள்.

வேட்டைக்காரரெல்லாம் ஒரு விடத்தில் சேர்ந்து கொல்லப்பட்ட மிருகங்களை யெல்லாம் சேகரித்தார்கள். அச்சமயம் பெரியராஜா தன் நண்பனை குணசுந்தரனைப் பார்க்க அவன் அங்கில்லை. உடனே ஆட்கள் நாற்புறமும் பார்வை யிட்டார்கள். அவன் எங்கும் காணப்படவில்லை.

அவனுடைய குதிரை யொருசமயம் ஓய்ந்து போயிருக்கும், பின்னால் வந்து சேருவான் என்று நிதானித்தார்கள். சுமார் ஒருமணி நேரம் பார்த்தும் குணசுந்தரன் வராததால் யாவர்க்கும் கலவர முண்டாய்விட்டது.

பெரியராஜா உடனே ஆட்களைப்பிரித்து நான்கு திக்கிலும் தேடும்படியனுப்பினான். நெடுந்தூரம்போய்த்தேடியும் அவன் அகப்படவேயில்லை. மாலை பொழுதமருந்தனிலும் தேடித் தேடிப்பார்த்துவிட்டு ஒருவேளை நகரத்திற்கே போய்விட்டானோ பார்ப்போமென்று யாவரும் நகரத்திற்குத் திரும்பினார்கள்.

குணசுந்தரன் வேட்டையாடிக்கொண்டே செல்லும் போது ஒரு பன்றியைத் துரத்திக்கொண்டு மற்றவர்களை விட்டுப் பிரிந்துவிடவேண்டியதாய் நேரிட்டது. அப்பன்றியோ இரண்டுநேரம் அடிபட்டும் நிற்காமல் ஓடியது. அது இன்னும் சற்றுநேரத்தில் ஓய்ந்துவிழுந்துவிடுமென்றெண்ணி அதைப்பின்பற்றி நெடுந்தூரம் போய்விட்டான். கடைசியில் பன்றி பூமியில் விழுந்து விட்டது. அதே சமயம் குணசுந்தரன் எதிரில் சுமார் நூறுகெஜதூரத்தில் மிக்க அழகான ஒரு புள்ளிமான் நிற்பதைக்கண்டான். அந்தமான் சற்றுவது பயப்படாமல் குணசுந்தரனையே யுற்று நோக்கிக்கொண்டிருந்தது. அது பார்ப்பதற்கு மிக்க வனப்பாயிருந்ததோடு இன்னொரு அதிசயம் அதனிடம் புலப்பட்டது. அதாவது இவன் அதையுற்று நோக்கிய போது அதன் கழுத்தில் மஞ்சள் நிறமான ஒரு சங்கிலியிருந்ததுபோல் இவன் கண்களுக்குத் தோன்றியது.

குணசுந்தரனுக்கு மிக்க வியப்புண்டாய் விட்டது. "அது சங்கிலிதானா? அப்படியாயின் பொன் சங்கிலியாயிருக்கவேண்டும், காட்டிலிருக்கும் மிருகமாயிருந்தால்

கழுத்தில் சங்கிலியேது? இதுமிக்க அழகுள்ள மானா யிருக்கிறது! இதை யெப்படியாவது பிடிக்கவேண்டும்" என்று தீர்மானம் செய்துகொண்டான். இக் கலவரத் தில் தான்வந்த திக்கை மறந்துவிட்டான். மானோ இவன் துரத்தினால் கொஞ்சதூரம் வேகமாய் ஓடுவதும், இவன் ஓய்ந்துநின்றால் தானும் நிற்பதுமாய், இவனை நெடுந்தூரம் இழுத்துக்கொண்டு போய்விட்டது.

குணசுந்தரன் திடீரென்று நினைவுவந்து பார்த்த போது, காட்டில்தான் வந்துவிட்டிருப்பதும் நகரம் எத் திக்கில் இருப்பதும் ஒன்றும் தோன்றவில்லை. மான்மட்டும் இன்னும் பார்வையிலேயே யிருக்கிறது. பொழுதோ அம ரும் சமயமாய்விட்டது. இன்னும் பார்ப்போமென்று மானைத் துரத்திச் சென்றான். அது ஒரு ஆற்றின் ஓரமே செல்ல ஆரம்பித்தது. சூரியன் இன்னும் பூரணமாய் மறையாவிட்டாலும் அடவிக்குள் பூரணமாய் இருள் சூழ்ந்து கொண்டது. நெடுந்தூரத்தில் ஏதோ ஒரு தீபம் எரிவதுபோல் மினுக்கு மினுக்கென்று ஒரு சிறுவொளி தோன்றியது. மான்செல்லும் திக்கைநோக்க அந்த வொளி யிருக்கும் இடத்தைநோக்கியே செல்வதாய்த் தெரிந்தது.

போகப் போக அவ்வொளி சமீபத்தில் நெருங்கியது. அது ஒரு தீபமென்றே நன்றாய்த் தெரிந்தது. மான் திரும் பித் திரும்பி இவனைப் பார்த்துக்கொண்டே அத்தீபத்தின் திக்காகவே சென்று கொண்டிருந்தது. குணசுந்தரனுக் குத்தான் காட்டில் வழிதப்பித் தனியாய்த் தியங்குவது தெரிந்தாலும் அவன் தைரியத்தை விடவில்லை. தீபம் இருக்கு மிடத்தில் மனிதர் இருப்பார்கள் பார்ப்போம் என்று மனதைத் தைரியம் செய்துகொண்டான். சுமார் அரைமணி நேரத்தில் தீபமிருக்கு மிடத்திற்குச் சமீபமாய்

வந்துவிட்டான். பொழுது போய்விட்டபடியால் மான் எங்கிருப்பதும் புலப்படவில்லை.

குணசுந்தரன் தன் குதிரையை ஒரு மரத்தடியில் கட்டிவிட்டு மெதுவாய்த் தீபமெரியும் இடத்தை நெருங்கினான். அது ஒரு சுந்தரமான சிறுகுடிசை வீடாயிருந்தது. அதிலிருந்த சாளரத்தின் வழியாய்த் தீபம் தெரிந்தது. குடிசையைச்சுற்றி நறுமணம் வீசும் மலர்களையுடைய நந்தவனம் இருந்தது. அதைச்சுற்றி ஒரு சிறு வேலியிருந்தது. குணசுந்தரன் பசியாலும் களைப்பாலும் ஆயாசத்தோடும் மெதுவாய் வேலியைத்தாண்டி, புஷ்பச் செடிகளினிடையில் நுழைந்து சாளரத்தி னருகிற்சென்றான். குடிசைக்குள்ளிருந்து ஒருவித நறுமணம் வீசிக்கொண்டிருந்தது. இவன் மெதுவாய்ச் சாளரத்தி னருகில் சென்று உள்ளே யெட்டிப் பார்த்தான். அங்கிவன் கண்டகாக்ஷியால் பசி ஆயாசம் ஒன்றும் தோன்றாமல் மனம் ஒடுங்கி அப்படியே மரம்போல் நின்றுவிட்டான்.

குடிசைவீட்டில் ஒருபக்கம் சுவரோரம் சுமார் ஒரு கெஜம் சதுரமும் ஒரு அடி உயரமுமான ஒரு கல்மேடையிருந்தது. அதன்மேல் சுமார் அரையடி உயரமுள்ள ஒரு ஸ்படிக இலிங்கம் இருந்தது. இலிங்கத்தின்மேல் ஒழுங்காய்க்கோர்த்த மலர்மாலைகள் சூட்டப்பட்டிருந்தன. இருபுறமும் நல்ல மணம்வீசும் ஊதுவத்திகள் எரிந்துகொண்டிருந்தன. அதன் எதிரில் ஒரு வெள்ளித்தட்டில் பலவிதக் கனிவர்க்கங்கள் வைக்கப்பட்டிருந்தன. மற்றொரு தட்டில் சூடன் தாம்பூலம் தேங்காய் முதலியனவை வைக்கப்பட்டிருந்தன. இவையாவும் கிழக்குதிக்கை நோக்கியிருந்தன இருபக்கமும் உயரமான இரண்டு குத்துவிளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. இவைகளில் ஒன்றுதான் சாளரத்தின் வழியாய்த் தூரத்தில் தெரிந்தது.

மேடையாயி னெதிரில் ஒரு பெரிய மான்தோல் ஆசனத்தின்மேல் தட்சணாபிமுகமாய் (தெற்குநோக்கி) ஒருவர் பத்மாசனத்தில் வீற்றிருந்தார். அவர் சுமார் ஆறடிக்கு மேல் உயரமும் நல்ல கெம்பீரத் தோற்றமும் பொருந்திய தேகத்தை யுடையவர். விசாலமாய் பளபளப்பான நெற்றியும், பறந்தகண்களும், சடைமுடியும், மார்பின் கீழ்த்தொங்கும் வெள்ளிக்கம்பிகள் போன்ற தாடியும், கண்டத்திலணிந்த உருத்திராக்க மணிமாலையும், சின்முத்திரையைக் காட்டும் கரங்களையும் உடையாராய், பத்மாசனத்தில் அசைவற்று மரம்போல் உட்கார்ந்திருந்தார். அவர் எதிரில் சற்று தூரத்தில் இரண்டு வாலிப புருடர்கள் தரையில் விரிக்கப்பட்ட வெள்ளை வஸ்திரத்தின்மேல் உட்கார்ந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் நல்ல அழகும் பிரகாசமும் பொருந்திய வதன முடையவர்கள். அவர்கள் மௌனமாய் உட்கார்ந்துகொண் டிருந்தார்கள். அறையின் ஒரு மூலையில் ஒருபெரிய அலமாரி மூடப்பட்டிருந்தது.

இவையாவுங்கண்ட குணசுந்தரன் மெய்மறந்து தன்னை உள்ளே யிருப்பவர்களில் யாராவது பார்த்து விடுவார்கள் என்று எச்சரிக்கையோ டிருப்பதையும் மறந்து, கண்சிமிட்டாமல் நோக்கிக் கொண்டே யிருந்தான். அச் சமயம் அறைக்குள் என்னமோ வருகிறசத்தம்கேட்டு சாளரத்தில் சற்று தலையை நீட்டிப்பார்த்தான். இவன் காட்டில்கண்டு துறத்திவந்த மான் மெதுவாய் அறைக்குள்வந்து இரண்டு புருடர்கள் இருக்குமிடம் சென்று அவர்கள் பக்கத்தில் படுத்தது. அப்போது அதன் கழுத்திலிருந்த பொன்சங்கிலியும் அதில் இருந்த ஒரு சிறுமணியும் தீபவொளியால் குணசுந்தரன் கண்களுக்கு நன்றாய்த் தெரிந்தது. இருவரும் திரும்பி அம்மானை நோக்கியபோது சாளரத்தில் நீட்டப்பட்ட குணசுந்தரன் முகத்தைப் பார்த்துவிட்டார்கள்.

இருவரும் திடுக்கிட்டு சட்டென் றெழுந்து அவனிருக்கு மிடத்திற்குவந்து சற்றும் பயமடையாமல் மெதுவாய், சைகைகாட்டி அவனைச்சற்றுதூரத்தில் அழைத்துக்கொண்டுபோய் "நீயார்? இந்தக் கொடிய கானகத்தில் இந்நேரத்தில் தனியே யெப்படிவந்தாய்? பயப்படாமற் கூறு" என்றார்கள்.

குணசுந்தரன் தான் வேட்டைக்கு வந்தது முதல் மானால் அங்குவந்து சேர்ந்த வரையில் நடந்தபடி கூறிவிட்டு, "சுவாமிகளே! என் நற்காலமோ பூர்வம் செய்த புண்ணிய பலனோ வழி தப்பித் துஷ்டர்கையில் சிக்கிக் கொள்ளாமல் பெரியோர் தரிசனம் கிடைக்கப் பெற்றேன். இங்கு இருக்கும் சுவாமிகள் யார்? இம்மான் நீங்கள் வளர்க்கிறமானே யென்று நம்புகிறேன்" என்றான்.

அதற்கு அவர்கள் "இது நித்தியானந்த சுவாமிகள் ஆசிரமம். சுவாமிகள் ஞானநிஷ்டையி லிருக்கிறார். மற்ற சங்கதிகள் பிறகு பேசிக்கொள்ளலாம் நீ பசியால் களைத்திருக்கிறாய் இங்குவா" என்று குணசுந்தரனை முன்கூறப்பட்ட குடிசை வீட்டிற்குப் பின்னே யிருக்கும் வேறொரு அறைக்கு அழைத்துச் சென்றார்கள். அது செடிகளில் மறைந்திருப்பதால் முன் குணசுந்தரன் கண்களுக்குப் புலப்படவில்லை. அதற்கு இரண்டு வழிகளிருக்கின்றன. வெளிப்பக்க மிருந்துவர ஒருவழி. சுவாமிகளிருக்கும் அறையிலிருந்துவர ஒருவழி அங்கு ஒரு சிறுதீபம் எரிந்து கொண்டிருந்தது. அந்த இரண்டு புருடர்களும் சயனித்துக்கொள்ளும் புல்லால் நெய்யப்பட்ட பாய் தலையணைகளும் மரப்பீடங்களும் இரண்டொரு பாத்திரங்களும் ஒரு அலமாரியில் பழவர்க்கங்களும், ஒரு பெரிய பாத்திரத்தில் பாலும், ஒரு பாண்டம் நிறைய கோதுமைமாவும் மற்றொரு பாண்

டத்தில் 'சர்க்கரையும், அனேக ஓலைச் சுவடிகளும் இருந்தன.

குணசுந்தரனுக்கு அப்பம், பழவர்க்கங்கள், பால், இவைகள் அன்போடு அளிக்கப்பட்டன. அவன் பசிநோய் தணிந்து ஆயாசம் நீர்ந்தது. அவர்கள் அவனை நோக்கி "நீ நித்திரை செய். சுவாமிகள் எப்போது கண்விழிப்பாரென்று தெரியாது. கண்விழித்தபின் விடை பெற்றுக்கொண்டு உனக்கு தரிசனஞ் செய்துவைக்கிறோம்" என்றார்கள். குணசுந்தரன் தன்புரவி யிருப்பதைக்கூற, அவர்களில் ஒருவன் இவனோடு கூடச் சென்று குதிரைக்கு நீர் குடிப்பித்து நல்ல புல்லுள்ள விடத்தில்கட்டி மேயும்படி விட்டுவந்தபின், குணசுந்தரன் நித்திரைக்குச் சென்றான். காட்டில் அலைந்த ஆயாசத்தால் சயனித்தவுடனே சுக நித்திரை யடைந்தான்.

அவன் நித்திரைதெளிந்து கண்விழித்தபோது சூரியன் உதையமாய் இரண்டு நாழிகையாயிற்று. முதல் தான் இருக்கும் சிறு குடிசையை கண்டதே திடுக்கிட்டான். பிறகு முன்னாள் நடந்த சங்கதிகள்யாவும் நினைவிற்குவர, சுவாமிகளைத் தரிசித்துக்கொண்டு, "துரிதமாய் நமது வீட்டிற்குச் செல்லவேண்டும், அந்தோ! நம்மைக்காணமல் நமது நண்பன் முதலிய அனைவரும் என்ன வருத்தப்படுகிறார்களோ" என்று சிந்தனை யுண்டாய்விட்டது. உடனேயெழுந்து வெளியில் செல்லப்புறப்பட்டான். அச்சமயம் சீடர்கள் இருவரில் ஒருவன் உள்ளேவந்து குணசுந்தரனைக் கண்டு "ஆ! எழுந்துகொண்டாயா, சுவாமிகள் பூசையிலிருக்கிறார். இன்னும் அரைமணிநேரத்தில் உனக்குத் தரிசனம் கொடுப்பார். என்னோடுகூட ஆற்றுக்கு வந்தால் ஸ்னானம் செய்துவிட்டு வரலாம்" என்றான்.

உடனே இருவரும்சென்று ஸ்னானம் செய்துவிட்டு

வந்தபின், குருவினிடம் பணிவிடை செய்துகொண்டிருந்த மற்றொரு சீடன்வந்து குணசுந்தரனைநோக்கி, "சுவாமிகள் உன்னை யழைத்துவரச் சொன்னார்கள். நீ மகா நற்குணமுடைய உத்தமனென்று தெரிகிறது. இன்றேல் சுவாமிகள் தரிசனம் தரமாட்டார்" என்றான். சுவாமிகள் இரவு குணசுந்தரன் கண்டபோதிருந்த ஆசனத்திலேயே யுட்கார்ந்திருந்தார். குணசுந்தரன் அவர் எதிரிற்சென்றதும் மார்பு பூமியிற்படியும்படி சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்து எழுந்துநின்றான். சுவாமிகள் அவனுக்கு ஆசீர்வாதம்செய்து உட்காரும்படி கூறினார். குணசுந்தரன் அவ்வாறே யுட்கார்ந்து மௌனமாயிருந்தான். அவன் வாய்மட்டுமே மௌனமாயிருந்ததன்றி மனம் மௌனமாயில்லை. ஆன்மார்த்தமான பலவிஷயங்களைப்பற்றி தெரிந்துகொள்ளவேண்டுமென்று அவனுக்கு நெடுநாட்களாய் மிக்க அவாவுண்டு. ஆனால் தக்க மகான்கள் கிடைக்கவில்லை. இப்போது தக்கமகான் கிடைத்திருக்கையில் அச்சந்நிதானத்தில் பேசவே அவனுக்கு நாவெழவில்லை.

இச்சமயத்தில் சுவாமிகளே யவனைநோக்கி, "குழந்தாய், உனக்கு இரவுநேர்ந்த இடுக்கணைப்பற்றி நமது சீடர்கள் கூறக்கேட்டோம், நீ நற்குணவானானதால் நமதுமான் உனக்கு இவ்விடத்திற்கு வழிகாட்டிற்று. நீ சிலவிஷயங்களைப்பற்றி நம்மைக் கேட்டறிந்துகொள்ள வேண்டுமென்று மனதில் வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறாய். நீ கேட்க விரும்புகிறவைகளைக் கேள். கடவுள் தயவால் உன் சந்தேகங்களெல்லாம் நிவர்த்தியாய்விடும்" என்றார்.

சுவாமிகள் அருளிய இவ்வாசகங்களைக் கேட்டதே குணசுந்தரன் மிக்கசந்தோஷமடைந்து, "சுவாமீ ஆன்மார்த்தமாய்ச் சிலவிஷயங்களைக் கேட்டறிய வேண்டுமென்று அடியேனுக்கு நெடுநாளாய் அவாவுண்டு. ஆனால்

இதுகாறும் தக்கபெரியோர் வாய்க்கவில்லை. சுவாமிகளைக் கேட்க அஞ்சி மௌனமாயிருந்தேன். எல்லார் உள்ளத்தையுமுணர்ந்த தேவரீரே கேட்கும்படி ஆக்ஞை யருளியதால் கூறுகிறேன்" என்று அடியிற்கண்டபடி ஒவ்வொரு வினாவாய்க்கேட்க ஆரம்பித்தான்.

குணசுந்தரன்.—சுவாமிகாள்! கடவுள் ஒருவரே யென்று வேதமும் பெரியோர்களும் கூறியிருக்க, உலகில் பலமதத்தினர் பலவிதமான இலக்ஷணங்களால் கடவுளை விவகரிக்கிறார்களே. இவற்றில் கடவுளுக்கு எது சம்மதம் எது அசம்மதம்?

சுவாமிகள்.—குழந்தாய்! பலகுருடர்கள் யானை யெவ்வண்ணமா யிருக்கிறதென்றறிய விரும்பி அதைத் தொட்டுப்பார்த்தபோது, தலையைத்தொட்டவன் யானை குடம் போலிருக்கிறதென்றும், வாலைத் தொட்டவன் யானை விளக்குமாறுபோ லிருக்கிறதென்றும், காலைத்தொட்டவன் யானை உரல்போலிருக்கிறதென்றும், காதைத் தடவி பார்த்தவன் யானை முறம்போலிருக்கிறதென்றும் கூறியதுபோல், அஞ்ஞான வயத்தராகிய பலபேரும் பல மாதிரி கூறுகிறார்கள்: கடவுளுக்கு யாவும் சம்மதமே. உலகிலுள்ள ஆறுகள் பலவும் வெவ்வே றிடங்களில் உற்பத்தியாகி வெவ்வேறு வழிகளாய் வெவ்வேறு திக்கை நோக்கி யோடினாலும், முடிவில் எல்லா ஆறுகளும் எப்படி கடலையேபோய்ச் சேருகின்றனவோ, அவ்வாறே யாரார் எப்படி எப்படி நினைத்து கடவுளை வழிபடினும், எல்லார் வழிபாட்டையும் அவர் ஏற்றுக்கொள்வார். நாம் எந்த உருவமாய் அவரைப்பாவித்து வழிபடினும் அவர் அதை யேற்றுக்கொள்வார். அவருக்கு இன்ன உருவமென்பதில்லை. இன்னபெயரென்பதில்லை. இன்னவிதமா யிருக்கிறாரென்று யாராலும் கூறமுடியாது. ஒரு உருவமுமில்

லாதபடியால் எல்லா உருவங்களுமவருடைய உருவங்களே. ஒரு பெயருமில்லாதவ ரானதால் எல்லா நாமங்களும் அவருடைய நாமங்களே. அவர் சர்வசக்தி யுள்ளவரானதால் யார் எந்த உருவமாய்ப் பாவித்தாலும அந்த உருவமாய்க் காக்ஷிதரவல்லவர்.

குணசுந்தரன்.—அப்படியானால் எந்த மதத்திலிருந்தாலும் மோக்ஷத்தை யடையலாமல்லவா ?

சுவாமிகள்.—தடையின்றி யடையலாம். மோக்ஷத்திற்குவேண்டிய சாதனங்களை யடைந்தால் எவனும் மோக்ஷமடையலாம். மதம் என்கிற பற்றேவேண்டுவதில்லை.

குணசுந்தரன்.—தயவுசெய்து மோக்ஷத்திற்கு வேண்டிய சாதனங்களை யருள்செய்யப் பிரார்த்திக்கிறேன்.

சுவாமிகள்.—மோக்ஷத்திற்கு வேண்டிய சாதனங்கள் நான்கு.

1. ஜீவகாருண்யம். அதாவது பிறர் துயரப்படுவதைக்கண்டு மனம் சகியாமை.
2. ஈசுரபக்தி. அதாவது கடவுளிடத்தில் சுயலாபம் கருதாமல் இடைவிடா அன்பு வைத்தல்.
3. பாசவைராக்கியம். அதாவது இவ்வுலக போக பாக்யங்களும், தெய்வலோகம் முதலிய பரலோக போக பாக்கியங்களும் நிலையல்லவாதலால் அவற்றில் ஆசை வைக்காதிருத்தல்.
4. பிரம்மக்கியானம். அதாவது ஆன்மாவாகிய தான் இன்னசுபாவ மென்றறிதல். இது கடவுள் சுபாவத்தை யுறியச்செய்யும்.

குணசுந்தரன்.—மாயை யென்பதென்ன ?

சுவாமிகள்.—உலகவாழ்வு அநித்தியமென்று நன்ருய்த் தெரிந்திருந்தும் அதைமறந்து உலகவிவகாரம் சாசுவதம்போல் அதில் பாடுபடச்செய்கிறதே மாயை.

அனுபவத்தில் மனமே மாயை "மனமாயையேயன்றி மற்ெறொன்றுமில்லை."

குணசுந்தரன்.—மாயையை யெப்படி வெல்வது ?

சுவாமிகள்.—மனதைத் தன்வயப்படுத்தி சத்துவகுணமாத்திரமாய்ச் செய்துகொண்டால், அச்சத்துவகுணமாகிய மனம் மாயையை வெல்லும்.

குணசுந்தரன்.—சுவாமி! மனதை யடக்குவதே மிக்க கஷ்டமான காரியமென்று கேள்விப்பட் டிருக்கிறேன். தயவுசெய்து அடியேனுக்கு ஒருவழிகூறப் பிரார்த்திக்கிறேன

சுவாமிகள்.—மனம் நெடுங்காலமாய் தன் இஷ்டப்படி அலைந்துகொண்டிருந்ததால் அது சுலபத்தில் வசப்படாது. அதாவது ஏககாலத்தில் நம்வயப்படாது. ஆயினும் அது அசாத்தியமான செய்கையல்ல. நாம் ஒரு தொழிலைச் செய்யும்போது மனம் அத்தொழிலில் மட்டும் நில்லாது வேறுவேறு விஷயங்களில் அலைந்துதிரியும். முதலில் இப்பழக்கத்தை சாக்கிரதையாய் நிறுத்தவேண்டும். எப்படியெனில் நாம் சாப்பிடுவதாய் வைத்துக்கொள்வோம். அப்போது சாப்பிடுந்தொழிலும், நம் எதிரிலுள்ள ஆகாரமும் தவிர வேறெதிலும் மனதைச் செல்லவொட்டாமல் தடுக்கப் பழகவேண்டும். பலதரம் அது நம்மைமீறி வேறு விஷயங்களில் பிரவேசித்துவிடும். அப்படிப் போகும்போது உடனே அதைத் திருப்பி பிரத்யக்ஷ விஷயத்தில் மட்டுமே நிற்கச் செய்யவேண்டும். இப்படி தினம் விடாது பழகினல் எத்தொழில் செய்கிருேமோ அத்தொழிலில்

மட்டுமே மனம்நிற்கிற பழக்கத்திற்கு வந்துவிடும். பிறகு ஒருதொழிலு மில்லாதபோது அசைவற்று நிற்கும் பழக்கத்திற்கு வந்துவிடும். அவ்வாறு மறதியின்றி சாந்தமாய்ச் சிந்தனையின்றி நிற்கும் மனமே சத்துவகுணமனம் என்று கூறப்படும். இதைக்கொண்டே தன்னைத் தானறிய வேண்டும். மனதையடக்கித் தன்வயப்படுத்த அப்பியாசிப்பவர்கள் மனோராஜ்ஜியம் செய்யலாகாது.

குணசுந்தரன்.—சுவாமீ! இல்லறத்தி லிருப்பவர்களுக்கு ஞானம் வரவேண்டுமாயின் அனுசரிக்கவேண்டிய விதிகள் என்னமோ அருளல்வேண்டும்.

சுவாமிகள்.—இல்லறத்திலிருக்க விரும்புகிறவன் கணவனே தெய்வமென்று அவன் சொல்தவறாது நடக்கும் கற்புடைய மகளிரை மணம்புரிந்து கொள்ளவேண்டும். அவள்தவிர மற்ற எல்லாமாதரையும் தாயெனக் கருதல் வேண்டும். பழி பாபம் இல்லாததொழில்செய்து பொருள் தேடவேண்டும். "பழிமலைந்தெய்திய வாக்கத்திற் சான்றோர்-கழிநல்குரவேதலை" என்று நாயனூர் கூறியிருக்கிறார். விருந்தினரை யுபசரிக்கவேண்டும். பிதுர்க்களுக்குச் செய்ய வேண்டிய கடனைச் செய்யவேண்டும். எந்த ஆசிரமத்தி லிருப்பினும் அந்த ஆசிரமவிதிப்படி நடக்கவேண்டும். தன்னுலியன்ற தருமம் செய்யவேண்டும். எத்தருமத்தையும் பிரதிபலன் கருதாமல் செய்யவேண்டும். தினம் ஈசுவரனைப் பக்திசெய்யவேண்டும். சுகதுக்கங்களை வினைப்பயனென்று சமதிருஷ்டியாய் அனுபவிக்கவேண்டும். அதாவது இரண்டும் மனதில் தாக்கும்படி இடந்தரலாகாது. உலக விவகாரம் எப்படி நடப்பினும் மோக்ஷத்திற்குப் பாடுபட வேண்டியதே நமது முக்கியதொழிலாய்க் கொள்ளவேண்டும். தினம் ஈசுவரபக்தி செய்வதோடு தன்னையறியச் சாதகமான மனோலயத்தில் பழகவேண்டும். அதாவது

மனதை வயப்படுத்த தினம் சாதனை செய்யவேண்டும். தத்துவ ஆராய்ச்சிசெய்து ஆன்மா இன்னதென்று சாத்திர ஞான மடைந்தபின் அப்பியாசம் செய்தால் அனுபவ ஞானம் உதிக்கும். ஞானம் உதித்த பிறகு உலகவிவகாரங் கள் நித்திரைசெய்பவன் கைப்பொருள்போல் தாமே நழுவிவிடும்.

குணசுந்தரன்.—சுவாமி! இன்னும் ஒரே சந்தேகம் இருக்கிறது. அதாவது கடவுளை உருவமாய்ப் பாவித்த லால் குற்றமுண்டோ என்பதே.

சுவாமிகள்.—கடவுள் உருவம், அருவம், உருவாருவம் ஆகிய எதிலும் சேர்ந்தவரல்ல. ஆணுமல்ல பெண்ணுமல்ல அலியுமல்ல, எல்லாம் அவரே. அவர் இவ்வுருவ முடையவர், இத்தன்மையர் என்று ஒருவராலும் வரை யறுத்துக் கூறமுடியாது. அத்தகைய வஸ்துவை மனதால் பாவிப்பது அசாத்தியம். கடவுள் பாவனைக்கு எட்டாதவர். ஞானிமாத்திரமே அவரை ஞானக்கண்ணால் காணவல்ல வன். அவனும் அவர் இத்தன்மையரென்று கூறவல்லவ னன்று.

அத்தகைய கடவுளிடம் நாம்வைத்திருக்கும் அன்பை வெளியிடுவது எவ்வண்ணம். மனதை யவரிடம் நிலைக்கச் செய்வது எப்படி? மனமோ நாமரூபத்திலேயே நாட்ட முடையது. ஆகையால் நாமரூபமுடைய வஸ்துவில்தான் மனம் நிலைக்கும். கடவுள் சிருஷ்டித்த ஜீவகோடிகள் யாவற்றிலும் மனிதன் உருவமே சிறந்தது. ஆதலால் அவ்வுருவ மாகவே கடவுளைப் பாவித்து உபாசிப்பதில் ஒரு குற்றமுமில்லை. அதற்காகக் கடவுள் கோபிப்பார் என்று நினைப்பது அறியாத்தன்மையே. அப்படிக் கூறு வது சுருதி யுக்தி யனுபவங்களுக்கு ஒவ்வாதவிஷயம். இப் போது நமது சக்கிரவர்த்தியை நாம் தினம் காணமுடியா

தாதலால் அவரைப்போல் ஒரு கற்சிலைசெய்து பகிரங்கமான விடத்தில் வைத்து அதற்கு மரியாதையும் செய்கிறோம். "நான் நல்ல உடைகளும் ஆபரணங்களு மணிந்து உன்னதமான மாளிகையிலிருக்கிறேன், என்னைக் கல்லால் செய்து வெயில் மழையில் வைத்திருக்கிறீர்கள்" என்று சக்ரவர்த்தி நம்மேல் கோபித்துக் கொள்கிறாரா? இல்லை. அதற்குமாறாக நமது குடிகள் நம்மேல் இவ்வளவு விசுவாசம் வைத்திருக்கிறார்களே யென்று களிப்படைகிறார். நரமனிதருக்கே இவ்வளவு நீதியான யோசனை யிருக்கும் போது கடவுள் எங்கும் நிறைந்ததன்னை ஒரு சிறு உருவமாய் பாவிக்கிறோமென்று கோபிப்பாராஞல் மனிதனிலும் அவர் அறிவு குறைந்தவராக வல்லவோ கருதப்படுவார். நாம் கடவுளை உருவத்தில் பாவித்த போதிலும், நாமரூப மற்ற அகண்டகார சொரூபமான அவருடைய உண்மை இலட்சணங்களைக் கூறியே யவரைத் துதிக்கிறோம்.

---

## 4 - வது அத்தியாயம்

**வனத்திலிருந்து நகரம் சேர்தல்—திருமணப் பிரயத்தனம்—குணசுந்தரன் இரத்னபுரிக்குச் செல்லல்—பஞ்சநாதனைச் சந்தித்தல்—தையநாயகியும் குணசுந்தரனும்—கோரக்கோலை.**

முன் அத்தியாயத்தினிறுதியில் கூறியபடி குணசுந்தரன் தான் கொண்டிருந்த சந்தேகங்களை யெல்லாம் நிவர்த்தி செய்துகொண்ட பின் தன் ஊருக்குச் செல்ல சுவாமியை விடை கேட்டான். சுவாமிகள் அவனை நோக்கி, "பாலனே! நீ கோரிய கன்னிகை நல்ல கற்புடைய உத்தமமாது. அவளை மணந்து நீ சுகஜீவியாய் வாழ்வாய். ஆனால் கூடியசீக்கிரத்தில் ஒரு பெரிய அபாண்டம் உன்மேல் வீணாய்ச் சுமத்தப்பட்டு நீ பிராணபத்தில் சிக்கிக்கொள்வாய். ஆயினும் அஞ்சவேண்டாம். கடவுள்

தயவால் உன் ஆபத்து ஆதித்தனைக் கண்ட நிசிபோல் அழிந்துவிடும். நமது சீடரில் ஒருவன் உன்னையழைத்துச் சென்று நகரத்திற்குச் செல்லும் சரியான பாதையில் விடுவான். நீ சுகமாய்ப் போய்வரலாம்" என்று ஆசிர்வதித்தார்.

உடனே குணசுந்தரன் சீடர்களால் அளிக்கப்பட்ட அப்பம், பழம், பால் முதலியவைகளை யருந்தி ஒருசீடன் வழி காட்டிவர அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டான். சுமார் மூன்றுமணிநேரம் நடந்தபின் முன் தினம் தான் வேட்டை யாடியவிடம் வந்துசேர்ந்தான். அங்கிருந்து நகரத்திற்குச்செல்லும் பாதை தனக்குத் தெரியுமாதலால், சீடரை யனுப்பிவிட்டுத் தனியே நடக்க ஆரம்பித்தான். சுமார் இரண்டு நாழிகை நடந்தபோது, எதிரில் குதிரைகள் வரும் சத்தம்கேட்டுத் தன் புரவியைப் பாதையோரத்தில் நிறுத்தினான். சற்று நேரத்திற்குள் சுமார் பத்துபேர் குதிரைமேல் வருவதைக் கண்டான். முதலில் வருபவன் இவனைக்கண்டதே, ஆ! நண்பனே! என்றான். உடனே இருவரும் குதிரைகளை விட்டிழிந்து ஆலிங்கனம் செய்து கொண்டார்கள்.

குணசுந்தரன்.—"பெரியராஜா! என்னைத் தேடிக் கொண்டா வந்தீர்கள்?" என்றான்.

பெரியராஜா முன்நாள் இவனைப்பிறிந்து வேட்டை முடிந்தபின் தேடித்தேடிக் காணமற் போக ஒருகால் ஊரைநோக்கிச் சென்றிருப்பானென்றெண்ணி யாவரும் ஊருக்குத் திரும்பியதும், பிறகு அங்கும் காணமலிருக்கவே யாவரும் மிக்க துயரமடைந்து காலையில் புறப்பட்டு மறுபடி அடவிமுழுதும் தேடத் தீர்மானித்து வந்ததும் யாவும் விபரமாய்க் கூறினான். உடனே யாவரும் சந்தோஷமாய் வீட்டிற்குத் திரும்பினார்கள். பாதையில்

குணசுந்தரன் தனக்குக் காட்டில் நேர்ந்த விசேஷங்களை யெல்லாம் ஒன்றுவிடாமல் யாவர்க்கும் கூறினான். இவன் க்ஷேமமாய் வந்துசேர்ந்ததைக் கண்டதே இவன் தாயார், தங்கை, மங்களவல்லி, அவள் தந்தை முதலியவர்களுக்கு உண்டான சந்தோஷத்திற்கு அளவில்லை.

மறுநாள்காலை பெரியராஜா விடைபெற்றுக்கொண்டு தன் நண்பனைவிட்டு அரிதிற்பிரிந்து தன் ஊருக்குச்சென்றான். குணசுந்தரத்திற்கும் மங்களாம்பாளுக்கும் திருமணமுடிக்க நாள் நிச்சயித்தாய்விட்டது. இன்னும் பன்னிரண்டு நாட்களே யிருக்கின்றன. மங்களாம்பாளும் அவள் தாயாரும் [illegible] பற்றி ஏற்பாடுசெய்ய இரத்தினபுரிக்குப் போவதென்று தீர்மானித்தார்கள். அவர்கள்புறப்படும் தினம் மங்களாம்பாளை நோக்கி குணசுந்தரன், "நானும் இரண்டு தினங்களில் இரத்தினபுரிக்கு வருகிறேன். நீங்கள் எங்கே தங்கி யிருப்பீர்கள்? என்று வினவினான்.

மங்களாம்பாள்.—என் அத்தைவீடு உமக்குத் தெரியுமல்லவா. அங்கேதான் இருப்போம். கலியாணத்தில் உமக்குத் தோழிப்பிள்ளை யார் என்று சொல்லக்கூடுமோ?

குணசுந்தரன்.—என் நண்பனை பஞ்சநாதன்தான் எனக்குத் தோழிப்பிள்ளை. அவன் தேசயாத்திரை சென்றிருக்கிறான். இந்தவாரம் வந்துவிடுவான்.

மங்களாம்பாள்.—அவர் எப்படிப்பட்டவர்? நான் கண்டதில்லையே.

குணசுந்தரன்.—அவன் என்மேல் மிக்க அன்புள்ளவன். நீ அவனைக் கண்டால் மிக்க சந்தோஷப் படுவா யென்று நம்புகிறேன்.

மங்களாம்பாள்.—தங்கள் சிநேகிதர் யாராயிருந்தா

லும் அவர்களைக்காண எனக்கு மிக்க சந்தோஷமே. பஞ்ச நாதருடையு படம் இருக்கிறதோ ?

உடனே குணசுந்தரன் தன் மேஜையைத்திறந்து அதி லிருந்த பஞ்சநாதன் படத்தை யெடுத்துக் காட்டி, "இப் போது இவனைப்பற்றி யென்ன நினைக்கிருய் ? உன் அபிப் பிராயத்தைக் கூறு பார்க்கலாம்" என்முன்.

மங்களாம்பாள் அப்படத்தை நன்முய்ப் பார்த்து விட்டு, "இது ஒருமாதிரியா யிருக்கிறது. கண்கள் மிக்க நெருக்கமா யிருக்கிறது பாரும். நான் சொல்வதற்கு கோபிக்க வேண்டாம். தாங்கள் கூறுகிறபடி அவ்வளவு சிலாக்யமான குணமுடையவரா யெனக்குத் தோன்ற வில்லை. என் அபிப்பிராயம் தவருயிருந்தாலும் இருக்க லாம்" என்முள்.

குணசுந்தரன்.—உன்மேல் ஏன்கோபம். ஆனல் நீ அவனை நேரில் பார்த்தால் இந்த அபிப்பிராயம் மாறுத லடையும் என்று நம்புகிறேன்" என்று கூறிவிட்டு வேறு விஷயங்களைப்பற்றிச் சம்பாஷிக்க ஆரம்பித்தான்.

மங்களாம்பாளுக்குப் பஞ்சநாதன் படத்தைக் கண் டது முதல் அவன்மேல் சற்று வெறுப்பே உண்டாயிற்று. ஆயினும் தன்மனதை யடக்கிக் கொண்டு அதைப்பற்றி யொன்றும் கூரும லிருந்தாள். அன்றுமாலை அவளும் அவள் தாயும் இரத்னபுரிக்குப் புறப்பட்டார்கள். அவர் கள் புறப்பட்டது திங்கட்கிழமை. வெள்ளிக்கிழமை திரும்பி தேரூர் வருவதென்றும், வியாழக்கிழமை குண சுந்தரன் அவர்களை நகரத்தில் சந்திப்பதென்றும் ஏற் பாடுசெய்து கொண்டார்கள்.

குணசுந்தரன் வியாழக்கிழமை காலை வண்டியேறி இரத்னபுரிக்குப் புறப்பட்டான். அங்கு சென்று தான் வழக்கமா யிறங்கும் ஹோட்டலில் தங்கி தாகத்திற்கு

அருந்திவிட்டு கடைவீதிக்குச் சென்று தனக்கு வேண்டிய உடைகள், நகைகள் முதலிய யாவற்றிற்கும் உத்திரவு செய்துவிட்டு ஹோட்டலுக்குச் சென்றான். அச்சமயம் பகற்போஜனம் அருந்தும் வேளையாதலால் போஜனகூடத்தில் யாவர்க்கும் விடுதிகள் அமைக்கப்பட்டிருந்தன. யாவரும் உட்கார்ந்துகொண் டிருந்தார்கள். குணசுந்தரன் ஒரு விடுதியை நோக்கிச்சென்றான். அச்சமயம், "இதோ யிங்குவந்து உட்காரலாமே" என்று தனக்கு நன்றாய்த் தெரிந்த ஒருவருடைய குரல்தொனி கேட்டதும் சட்டென்று திரும்பிப்பார்த்தான். சமீபத்தில் மூன்று ஆசனங்களுக்கு அப்பால் பஞ்சநாதன் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். இவன் மிக்க வியப்படைந்து, "ஆ! பஞ்சநாதம்! என்ன அதிசயம்! நீ நெடுந் தூரத்திலிருக்கிறாயென்று எண்ணிக்கொண் டிருக்கிறேனே. இங்கு எப்போது வந்தாய்?" என்றான்.

பஞ்சநாதன்.—நான் காலையில்தான் வந்தேன்.

குணசுந்தரன்.—யாத்திரையில் நல்ல சுகந்தானே?

பஞ்சநாதன்.—"ஆகா. நான் மறுபடி காணக்கூடாத எத்தனையோ ஜனங்களைக் கண்டேன். நான் சாப்பிடாத ஹோட்டல் கிடையாது. பிரயாணிகளுக் குபயோகமாக ஒரு நல்ல புத்தகம் எழுதலாமென்று எண்ணியிருக்கிறேன்" என்றான்.

பஞ்சநாதன் முன்னிலும் இப்போது மிக்க நாணயமாய் உடை யணிந்திருந்தான். அவன் தன் நண்பனை நோக்கி, "உன்னை மணம்புரியவிருக்கும் கன்னிகைக்ஷேமந் தானா?" என்று வினவினான்.

குணசுந்தரன்.—க்ஷேமமே.

பஞ்சநாதன்.—நான் அம்மாளைக்காண மிக்க அவாவாயிருக்கிறேன்.

குணசுந்தரன்.—நீ சனிக்கிழமை தேசூருக்கு வருகிறு யல்லவா. அப்போது எப்படியும் பார்க்கப்போகிறுய்.

பஞ்சநாதன்.—ஆகா. இத்தனைநாளாய் அலைந்து திரிந்ததற்கு நாட்டில் கொஞ்சகாலம் நிம்மதியாயிருந்தால் ஆயாசந்தீரும். அங்குவர எனக்கு மிக்க சந்தோஷமே.

குணசுந்தரன்.—நான் நாளைக்கு ஊருக்குப் போகிறேன். ஏன் நீயும் என்கூடவே வந்துவிடலாமே. ஆலசியம் செய்வானேன் ?

பஞ்சநாதன்.—முடியாது. எனக்கு எவ்வளவோ வேலையிருக்கிறது. சனிவாரத்திற்குமுன் அது முடியாது.

குணசுந்தரன்.—"அப்படியாயின் சனிவாரமே வரத் தவறவேண்டாம். அன்று மூன்றுமணி வண்டிக்கு ஸ்டேஷனண்டை வந்து காத்திருப்பேன்" என்றான்.

போஜனம்முடிந்தபின் குணசுந்தரன் கடைவீதிக்குச் சென்று சில சாமான்களை வாங்கிக்கொண்டு ஹோட்டலுக்குவந்து மாலைப்போஜனம் செய்துவிட்டு, மங்களவல்லியும் அவள் தாயாரும் தங்கியிருக்கும் வீட்டிற்குச் சென்றான். அவர்கள் அச்சமயம் நாடகத்திற்குச்செல்ல ஆயத்தமாய் இவனுக்காக காத்துக்கொண்டிருந்தார்கள். ஆதலால் குணசுந்தரன் வந்தவுடனே மூவரும் நாடகத்திற்குச் சென்றார்கள்.

நாடகம் சுமார் பதினொருமணிக்கு முடிந்துவிட்டது. குணசுந்தரன் ஸ்திரீகள் இருவரையும் வண்டியிலேற்றி வீட்டிற் கனுப்பிவிட்டுத் தான் ஹோட்டலைநோக்கிச் சென்றான். அவன் இரண்டு மூன்று வீதிகளைக்கடந்து ஒரு பெரியவீதியில் செல்லும்போது, தன் எதிரில்வரும் தையநாயகத்தைக் கண்டு ஆச்சரியத்தோடு திடுக்கிட்டு நின்றான். "ஆ! தையநாயகம் என்ன ஆச்சரியம். இங்கு வந்து எவ்வளவு காலமாயிற்று ?" என்றான்.

தையநாயகம் அவனைக்காண விரும்பாதவள்போல் முகத்தைத் திருப்பிக்கொண்டு "ஒருமாதமாயிற்று" என்றாள்.

குணசுந்தரன் மிக்க வியப்படைந்து ஆத்திரத்தோடு "நீ வருகிற சங்கதி யேன் எனக்குத் தெரிவிக்கவில்லை? அப்படிச் செய்வதாய் எனக்கு வாக்குத்தத்தம் செய்திருக்கிறதை மறந்துவிட்டிருக்க மாட்டாயென்று நம்புகிறேன்" என்றான்.

தையநாயகம்.—"உமக்குத் தொந்தரவு கொடுக்கப் பிரியமில்லை. நீர் இங்கில்லை, நாட்டில் வேலையிருக்கு மாதலால் எனக்காக இங்குவர சந்தர்ப்பப்படாதென்று நினைத்தேன்" என்றாள்.

குணசுந்தரன்.—அது பொய்யென்று உனக்குத் தெரியும். பழையசினேகத்தை நினைத்து இங்கு வாராவிட்டால் நான் இழிவான மிருகமா யிருக்கவேண்டும். நீ எங்கே வசிக்கிறாய்?

தையநாயகம் பதில்கூறாமல் சற்றுநேரம் சும்மாயிருந்தாள். குணசுந்தரன் அவள் கலவரத்தைப் பார்த்தான். ஆனால் அதன்காரணம் புலப்படவில்லை. அவள் கடைசியில் கலவரத்தோடு, "தச்சுவாடி வீதியில்......அந்தத் தெருவு சொன்னாலும் உமக்குத் தெரியாது." என்றாள்.

குணசுந்தரன்.—"ஆ! உன் தாயார் எப்படி யிருக்கிறார்கள்?" என்றான்.

இவ்வார்த்தையைக்கேட்டதே அக்கன்னிகை துயரத்தோடு கண்களில் நீர்ததும்ப, "என்தாயார் இறந்து இரண்டுமாதமாயிற்று" என்றாள்.

குணசுந்தரன்.—அந்தோ பரிதாபம். நீ உலகில் தன்னந்தனியாய் விடப்பட்டாய். இது உதவாது. நீ என் உதவியை யேற்றுக்கொள்ளவேண்டும்.

தையநாயகம்.—வேண்டாம், வேண்டாம். எனக்கு உதவிவேண்டாம். நான் சமாளித்துக் கொள்வேன்.

குணசுந்தரன்.—அது எனக்கு நிச்சயமாய்த் தெரிய வேண்டும். உன்போல் ஏழையான ஒரு கன்னிகை இந்தப் பெரியநகரில் இப்படித் தனியாய் இருத்தல் சரியல்ல. மேலும் நீ இத்தேசமல்ல.

தையநாயகம்.—நீர் எனக்கு எப்போதும் உதவி செய்தே யிருக்கிறீர். இன்னமும் உமக்குச் சிரமம் கொடுக்கமாட்டேன். மேலும் நீர் கலியாணம் செய்து கொள்ளப்போகிறீர். அது உண்மைதானே?

குணசுந்தரன்.—அது மெய்தான். ஆனால் உனக்கு யார் அதைக்கூறியது?

தையநாயகம்.—சொல்லமுடியாது. விசேஷமாய்ப் பத்திரிகைகளில் கண்டிருக்கலாம். நான் வீட்டிற்குப் போகவேண்டும்.

அச்சமயம் ஒரு காலிவண்டி அவ்வழியே வருவதைக் கண்ட குணசுந்தரன் அதைக்கூப்பிட்டு கன்னிகையை நோக்கி, "இதில் ஏறிக்கொள். நான் உன்னை வீட்டில் கொண்டுபோய் விட்டுவிட்டுச் செல்கிறேன். இந்த வீதிகளில் தனியே செல்வதற்கு இது காலமல்ல" என்றான்.

தையநாயகம்.—ஆத்திரத்தோடு, "வேண்டாம். நான் நடந்துபோய்விடுவேன். வண்டிவேண்டாம். அது அதிக தூரமல்ல" என்று முன்னிலும் சற்று திடமாய்க் கூறினாள்.

குணசுந்தரன் மிக்க தீரத்தோடு, "தையநாயகம்! குழந்தை மருந்து சாப்பிடமாட்டே னென்றால் அதன் நன்மைக்காக கட்டாயப்படுத்தி உண்பிக்கிறோம். அது போல் நீ இப்போது நான் கூறுகிறபடி உன் மேல்விலாசத்தையும் எனக்குக் கூறவேண்டும்" என்றான்.

அக்கன்னிகை சற்றுநேரம் நிதானித்த பிறகு, "தச்சு வாடி வீதி 2-வது குறுக்குத் தெருவில் 16-வது நெம்பர் வீடு" என்றாள்.

வண்டிக்காரனுக்கு மேலபடிவிலாசத்தைக் கூறிவிட்டு குணசுந்தரனும் கன்னிகையோடுகூட வண்டியில் ஏறிக் கொண்டான். வண்டி யுடனே வேகமாகப் புறப்பட்டது. குணசுந்தரனுக்கு அக்கன்னிகை தனக்குத் தென்பட்டது மட்டும் சந்தோஷமே யெனினும், அவள் நிலைமை அவனுக்கு வியாகுலத்தைத்தந்தது. வண்டிபோய்க்கொண்டேயிருக்கையில் அவன் அவள் தற்கால நிலைமையைப்பற்றி விசாரிக்க முயன்றான். அவள் ஏதையோ கூறாமல் மறைக்கிறாள் என்றுமட்டும் நன்றாய்த் தெரிந்தது. இதை நினைக்க நினைக்க அவனுக்கு வியாகுலம் அதிகமாயிற்று. இவள் பேசாமல் தன் ஜென்மதேசம் போய்விடுவதானால் அங்கு சென்று க்ஷேமமாய்ச் சீவித்துக்கொண்டிருக்கப் போதுமான பணம் கொடுத்தனுப்பலாம். ஆனால் இவள் நம்மிடம் எதையும் வாங்கிக்கொள்ள மாட்டேனென்று கூறுகிறாளே யென்று சிந்தித்தான்.

கடைசியில் வண்டி நிற்கவேண்டிய விடத்தில்வந்து நின்றதும் இருவரும் கீழேயிறங்கினார்கள். அச்சமயம் தையநாயகம் தன்கையால் தலைமயிரை விலக்கும்போது வீதியிலிருக்கும் இராந்தல் ஒளியால் அவள் கழுத்தில் மாங்கலியம் தெரிந்தது. கைவிரலில் ஒரு விசித்திர வேலைப் பாடுள்ள மோதிரமும் இருந்தது. குணசுந்தரன் மிக்க வியப்படைந்து "நீ எப்போது மணம்புரிந்து கொண்டாய்? எனக்கு ஏன் கூறவில்லை?" என்றான்.

தையநாயகம் திடுக்கிட்டு மிக்க கலவரத்தோடு, என் புருடன் எங்கோபோய்விட்டான். அதைப்பற்றி விவரம் கேட்கவேண்டாம். எனக்கு இப்போதே சுமக்கமுடியாத

துயரமிருக்கிறது. அதைத் தயவுசெய்து அதிகப்படுத்த வேண்டாம்", என்றாள்.

குணசுந்தரன்:—அந்தோ! புருடன் போய்விட்டான் தாயார் இறந்துவிட்டாள். நீ கூறுவது உண்மைதானோ?

தையநாயகம்:—"உண்மையே. நீர் என் நான் கூறுவதை நம்பவில்லை. நம்பாதிருக்க ஒரு காரணமுமில்லையே," என்றாள்.

குணசுந்தரம்:—நீ எதையோ என்னிடம் கூறாமல் மறைத்து வைத்திருக்கிறா யென்று நம்புகிறேன். உன் கஷ்டங்களை யென்னிடம் தயவுசெய்து கூறு. நான் உன் சகோதரன்போன்ற நண்பன் என்று உனக்குத் தெரிந்தேயிருக்கிறது. என்றால் கூடியவரையில் உனக்கு உதவி செய்வேனென்றும் உனக்குத் தெரியும்.

தையநாயகம்:—நீர் எப்போதும் உதவிசெய்வீரென்று எனக்குத் தெரியும். என்விஷயத்தில் எப்போதும் பட்சமாகவே நடந்துவந்தீர்கள். இப்போது நான் தங்களைக் கேட்டுக்கொள்வதெல்லாம் இச்சமயம் என்னை யொன்றும் கேட்காமல் விட்டுவிடவேண்டு மென்பதே. என் துயரத்தை யதிகப்படுத்த வேண்டாம். பிற்பாடு எல்லாவிபரமும் அறிந்துகொள்வீர்.

குணசுந்தரன்:—அந்தோ உன் துயரத்தை யதிகப்படுத்த எனக்குப் பிரியமில்லையென்று உனக்கே நன்றாய்த் தெரியும். நீ சற்று தைரியத்தோடு உன்துயரத்தை யென்னிடம் கூறினால் எல்லாம் திருப்தியாய் முடியும்.

தையநாயகம்:—நான் இப்போது ஒன்றுமே கூற முடியாது.

இவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில் ஒரு போலீஸ்காரன் அவ்வழியே அவர்களை யுற்றுப்பார்த்துக் கொண்டே சென்றான்.

குணசுந்தரன்:—"கடைசியாய் ஒரு வாக்குத்தத்தமாவது கேட்கிறேன். அதாவது நீ இதைப்பற்றி யோசித்துப்பார்! ஒன்றுமட்டும் கூறு. நீ இதைவிட்டுப் போவதானால், போகுமிடத்தை யெனக்குக் கூறிவிட்டுச் செல்லவேண்டும்" என்றான்.

தையநாயகம் அப்படியே செய்கிறேன் என்றாள்.

குணசுந்தரன்:—இதோ இக்கார்டில் என்விசாலமிருக்கிறது. கடிதமாவது தந்தியாவது அனுப்பினால் எந்தவேளையிலும் வந்துசேரும். நான் போய்வருகிறேன். நீ பத்திரமாய் உள்ளேசெல்" என்று கூறிவிட்டு, அவள் வீட்டிற்குள் நுழைந்ததே, தான் ஹோட்டலை நோக்கிச்சென்றான்.

தையநாயகம் வசிக்கும் வீதி விசேடமாய் அன்னிய நாட்டார் சஞ்சரிக்கும் வீதி. அதிலும் ஏழைகளிருக்கும் பாகம் அவ்வீடு ஒருவிதமான பழையவீடு. இதை யெல்லாம் கண்ட குணசுந்தரனுக்கு மனதில் வியாகுலம் அதிகமாய் விட்டது.

தையநாயகம் துயரத்தால் தேம்பித் தேம்பி யழுது கொண்டே வீட்டில்நுழைந்து படிக்கட்டில் ஏறி, மெத்தை மேலிருக்கும் தன் அறையண்டை சென்று சாவியெடுத்து, கதவைத்திறந்து உள்ளேசென்று, கதவை மூடிக்கொண்ட பின் எதிர் மூலையில் மாடத்திலிருக்கும் நெருப்புக்குச்சியை யெடுத்து விளக்கேற்றுவதற்காக நேராய்ச்சென்றாள். அச்சமயம் இதுவரையில் அறைக்குள் மறைந்திருந்த ஒருமனிதன் அவள் பின்பக்கம்சென்று, அவள் தொண்டையைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு கையிலிருந்த கூர்மையான கத்தியால் அவள்முதுகில் இரண்டு மூன்றுதரம் ஓங்கிக் குத்தினான். உடனே அவள் மெதுவாய் ஒரே சத்தமிட்டுக் கீழே சவமாய் விழுந்து விட்டாள்.

அப்பாதகன் உடனே தன்னிடமிருந்த நெருப்புக்

குச்சியால் ஒரு சிறு இராந்தலையேற்றிக் கீழே வைத்து விட்டு சவத்தின் பக்கத்திலுட்கார்ந்து சற்றுநேரம் என்னமோ செய்துகொண்டிருந்து, பிறகு எழுந்து தான் மேஜை மேல் வைத்திருந்த ஒரு சிறு பெட்டியைத்திறந்து, அதில் என்னமோ வைத்துமூடி அதைப் பத்திரமாய் மடியில் வைத்துக்கொண்டு, தீபத்தை யணைத்துவிட்டு, கதவை மூடித் தன்னிடமிருந்த சாவியால் பூட்டிக்கொண்டு போய் விட்டான்.

---

## 5-வது அத்தியாயம்

**குணசுந்தரன் வீட்டில் பஞ்சநாதன்—வஞ்சநெஞ்சுடைய நடிப்பு—கலியாணப் பரிசுகள்—எதிர்பாராத மிகுந்த அகோரக்காட்சி—குணசுந்தரன் கூறும் விவரங்கள்.**

நாகபட்டணத்தை விட்டு விட்டு மனத் துயரோடு திரும்பிய குணசுந்தரன் ஹோட்டலுக்குச் சென்றதே வேலைக்காரன் இவன் முகம் வெளுத்திருப்பதையும் மிக்க கலவரமடைந்து திகிற்பட்டவன்போ லிருப்பதையும் கண்டு, "என்ன இப்படியிருக்கிறீர்கள்? ஏதாவது ஆபத்து நேர்ந்ததோ?" என்றான்.

குணசுந்தரன்:—"என் மனம் சற்று நிலையிலில்லை. எனக்கு தாகத்திற்கு கொடு. நான் போய்ச் சயனித்துக் கொள்ளவேண்டும்" என்றான்.

அவன் மறுநாள் அதாவது வெள்ளிக்கிழமைகாலை இரயிலேறி தேரூருக்குப் பிரயாணமானான். அவன் தாய் அவனைக் கண்டதே, "உனக்கு தேகத்திற்கென்ன? இப்படி இருக்கிறாயே" என்றாள்.

குணசுந்தரன்.—"இரவு சரியான நித்திரையில்லை. மற்றபடி தேகசுகத்திற்கு யாதொரு தாழ்வில்லை. அதைப்பற்

றித் தாங்கள் கலவரப்படவேண்டாம்." என்று தாயாருக்குச் சமாதானம் கூறினான். பிறகு தான் தன் நண்பனை பஞ்சநாதனைச் சந்தித்ததாகவும் அவன் மறுநாள் அங்கு வருவானென்றும் கூறினான்.

தாயார் அவர்கள் நேசத்தை யறிந்தவளானதால், "குழந்தாய் மிகவும் சந்தோஷம். உன் அறைக்கு அடுத்த அறையை அவனுக்கு ஆயத்தம்செய்து வைக்கிறேன். என்னேரமும் உன் அருகிலிருப்பான். மங்களத்தைக் கண்டாயா, எப்படி யிருக்கிறாள்?" என்றாள்.

குணசுந்தரன்.—பார்த்தேன். அவர்களும் நாளைக்கு வந்து விடுவதாய்க் கூறினார்கள் என்றான்.

அதேப்படி 'அடுத்ததினம் மங்களாம்பாளும் அவள் தாயும் வீடுவந்து சேர்ந்தார்கள். அன்றுமாலை மூன்று மணிக்கு குணசுந்தரன் ரயில்வேஸ்டேஷனுக்குச் சென்று காத்துக்கொண்டிருந்தான். இரத்னபுரியி லிருந்துவரும் இரயில் வந்து நின்றதே பஞ்சநாதன் அதிலிருந்து இறங்கினான். குணசுந்தரன் அவனைக்கண்டதும், ஆனந்தத்தோடு ஆலிங்கனம் செய்துகொண்டு அவன் கொண்டுவந்த பெட்டிகளில் ஒன்றைத் தான் எடுத்துக்கொண்டான். இருவரும் ஸ்டேஷனைவிட்டு வெளியில்வந்ததும் வண்டியிலேறிக்கொண்டு வீட்டிற்குச் சென்றார்கள்.

குணசுந்தரன் தன் நண்பனைநோக்கி நான் உன்னைச் சந்தித்ததுமுதல் அங்கு என்னசெய்தாய் என்றான். பஞ்சநாதன் "இளைப்பாறிக்கொண்டிருந்தேன். மங்களாம்பாள் சுகந்தானா?" என்றான்.

குணசுந்தரன்.—ஆகா, பூரணசுகமே. உன்னைக்காண மிக்க அவாவா யிருக்கிறாள்.

பஞ்சநாதன்.—உன் தாயார் தங்கை முதலியவர்களும் க்ஷேமந்தானே?

குணசுந்தரன்.—க்ஷேமந்தான், அவர்களும் உன்னைக் காண மிக்க சந்தோஷப்படுவார்கள்.

பஞ்சநாதன்.—இது மிக்க நேர்த்தியானவிடம். சுக மான வீடு. உன்பெரியதந்தை யிதை யுனக்களித்ததற்கு நீ மிக்க நன்றியுள்ளவனு யிருக்கவேண்டும்.

குணசுந்தரன்.—"அவர் இல்லாமற் போய்விட்டதே குறை. நான் எவ்வளவு நன்றியுடையேனென்பது என் மனதிற்குத் தெரியும். நான் அவர்கூடவே யிங்கிராமல் போனது அவருக்கு மனக்குறைவு. நீ எப்படி நினைப் பாயோ, என்மனதிற்கு ஒவ்வொரு சமயங்களில் இறந்து போனவர்கள் நம்மருகிலேயே யிருப்பதுபோல் தோன் றக்கூடும் என்று நினைக்கிறேன்" என்றான்.

இதற்குள் குணசுந்தரன் தாயார் அங்குவர ஒருவருக் கொருவர் க்ஷேமங்களை வினவினார்கள். அம்மாது பஞ்ச நாதனை நோக்கி "நீ யாத்திரையில் மிக்க சந்தோஷ மனு பவித்திருப்பாய் என்று நம்புகிறேன்" என்றாள்.

பஞ்சநாதன்.—"அது உமது புதல்வன்செய்த உத வியே" என்றான்.

அதன்பிறகு மங்களாம்பாளும் அங்குவந்து பஞ்ச நாதனைக்கண்டு க்ஷேமம் விசாரித்தாள்.

அதன் பிறகு போஜனம் பரிமாறப்பட்டதும் யாவ ரும் உட்கார்ந்தார்கள். அது முடிந்தபின் நண்பர்கள் இருவரும் பஞ்சநாதனுக்காக ஏற்படுத்தப்பட்ட அறைக் குச் சென்றார்கள். பஞ்சநாதன் அதன் சாளரத்தில் நின்று எதிரிலுள்ள அழகான காக்ஷியைக் கண்டதும், திரும்பி குணசுந்தரனைநோக்கி, "நண்பனே ! உனக்கு மிக்க அழ கான மாளிகை யிருக்கிறது. நல்ல ரூபலாவண்யமுள்ள குணவதியை மணம் செய்துகொள்ளப்போகிறாய். செல்

வமும் இருக்கிறது. ஒரு குறையுமில்லை. நீ பூரண சந்தோஷமா யிருக்கவேண்டும்" என்றான்.

குணசுந்தரன்.—“நான் சந்தோஷமாகவே யிருக்கிறேன். கடவுள் தயவால் என்னைச் சேர்ந்தவர்களையும் அப்படியிருக்கச் செய்யவே எத்தனைப்படுவேன். ஆ, இப்போது கவனம் வந்தது: உன்னிடம் ஒரு சங்கதி பேசவேண்டும். நான் வியாழக்கிழமை இரவு இரத்னபுரியில் தையநாயகத்தைச் சந்தித்தேனே தெரியுமா? என்று வினவினான்.

அச்சமயம் பஞ்சநாதன் சாளரத்தண்டை நின்று தன் தலையைச் சிக்கறுத்துக்கொண்டிருந்தான். சிக்கங்கோல் தடாலென்று கீழே விழுந்துவிடவே, அவன் மெதுவாய் அதை எடுத்துக்கொண்டு நண்பனை நோக்கி, மிக்க வியப்போடு,

“ஆ! 'தையநாயகம் இரத்னபுரியிலா? நீ ஏதோ தவறாய் எண்ணிக்கொண்டாய். அவள் நவீனபுரியிலல்லவோ விருக்கின்றாள்?" என்றான்.

குணசுந்தரன்.—இல்லை. நான் தவறாய் நினைக்கவில்லை. இரத்னபுரியில் அவளைச் சந்தித்துப் பேசினேன்.

பஞ்சநாதன்.—எப்போது பார்த்தாய்?

குணசுந்தரன்.—வியாழக்கிழமை இரவு நான் நாடகத்தைவிட்டு ஹோட்டலுக்குச் செல்லும்போது சுமார் பதினொருமணியிருக்கும். அப்போது பெரிய வீதியில் அவளைக் கண்டேன்.

பஞ்சநாதன்.—அப்படியா! எனக்குத் தெரியாது.

குணசுந்தரன்.—அவள் தாயார் இறந்துபோனதும், அவள் மணம்புரிந்துகொண்டதும் தெரியுமா?

பஞ்சநாதன்.—எனக்கெப்படி தெரியும்? நாம் யாத்திரைக்குப் புறப்படும்போது உன் அறையில் அவளைக் கண்ட

பின் இன்னும் காணவில்லையென்று உனக்குத் தெரியுமே. அப்படியானால் அவளுக்கு கலியாணமாய்விட்டது. இனி மேல் சுகப்படுவாளென்று நினைக்கவேண்டியதே.

குணசுந்தரன்.—ஆனால் அவள் சுகமாயில்லை. மிக்க துயரமாகவேயிருக்கிறாள். புருடன் எங்கோ காணமற் போய்விட்டானாம். தாயாரும் இறந்துவிட்டாள்.

பஞ்சநாதன்.—புருடன் ஒழிந்ததற்கு விசனமடையாத ஸ்திரீகளும் உலகில் சிலர் இருக்கிறார்கள். பாபம் அவள் துக்கமாயிருக்கிறாளென்று எப்படி யறிந்துகொண்டாய்?

குணசுந்தரன்.—அவளே கூறினாள். ஒரு விபரமும் கூறாவிட்டாலும் மிகவும் துயரமாயிருக்கிறாளென்றுமட்டும் தெரிந்தது.

பஞ்சநாதன்.—நீ கொஞ்சம்பணம் கொடுத்தாயென்று நம்புகிறேன். ஒருவருக்குத் துயரத்தை நீக்க அதுதான் சாதாரணமான மார்க்கம். அவள் நன்றி யுள்ளவளா யிருப்பாளென்று நம்புகிறேன்.

குணசுந்தரன்.—அவள் என்னிடம் எவ்வித உதவியும் பெற்றுக்கொள்ளமாட்டேனென்றாள். என்னால் கூடிய வரையில் சொல்லியும் அவள் உடன்படவேயில்லை. அவள் வீட்டண்டைசென்றதே துக்கத்தை யடக்க முடியாமல் அழுதுவிட்டாள்.

பஞ்சநாதன்.—அப்படியானால் அவளை வீட்டுவரையில் கொண்டுபோய்விட்டாயோ? அது புத்திசாலித்தன மென்று நினைக்கிறாயா?

குணசுந்தரன்.—நான் ஏன் அப்படிச் செய்திருக்க லாகாது?

பஞ்சநாதன்.—நீயே பார். உன் சந்தர்ப்பம் முன்போ லில்லை. மங்களாம்பாளுக்கு அச்செய்கை பிரியமாயிருக் குமா?

குணசுந்தரன்.—நமக்குத்தெரிந்த ஒரு ஏழைக்கு நான் உதவிசெய்வதில் அவளுக்கு அதிருப்தி யுண்டாகாது. அவள் அப்படிப்பட்ட முட்டாளல்ல.

பஞ்சநாதன்.—ஆனால் அந்த ஆள் அழகிய வாலிபமான கன்னிகையாயிருக்கும்போது அது பிரியமாயிருக்குமா? அது கிடக்கட்டும் நாம் கீழேபோகலாம் வா.

குணசுந்தரன்.—ஆனால் உனக்கு தையநாயகத்தின் விஷயத்தில் முன் இருந்த சிரத்தை இப்போ தில்லையோ? அவள் விஷயத்தில் என்னைவிட உனக்கு அதிக சிரத்தை யிருக்கிறதென் றல்லவோ நான் எண்ணி யிருந்தேன்.

பஞ்சநாதன்.—அவள் விஷயமாய் நாம் முன்பேசியதை மறந்துவிட்டாயோ. நீ அவளிடம் அன்புகாட்டாவிட்டால் நாம் தேசயாத்திரை யேன்போகிறோம். நான் இத்தனை உன்னதமான விடங்களைப் பார்த்தே யிருக்கமாட்டேன். எப்படியிருந்தாலும் அவளுக்கு ஏதாவது உதவி செய்யக்கூடுமாயின் நான் மிக்க சந்தோஷத்தோடு செய்வேனென்றேனினே.

குணசுந்தரன்.—நீ செய்வாயென்று நான் அறிவேன். நாம் சாவதானமாய்ப் பிறகு அதைப்பற்றி யோசனை செய்து அவள் விஷயத்தில் ஏதாவது செய்யவேண்டும். இப்போது அவள் இருக்கும் ஸ்திதியிலேயே யவளை விட்டு விடுவது மகாபாதகம்.

பஞ்சநாதன்.—அவள் துயரத்திற்கு காரணம் இன்னதென்று உனக்குச் சற்றும் புலப்பட வில்லையோ ?

குணசுந்தரன்.—கொஞ்சங்கூடத்தெரியாது. அவள் சற்றும் கூறமாட்டேனென்று மறுத்துவிட்டாள்.

பஞ்சநாதன்.—அவள் இப்போது எங்கே வசிக்கிறாள்?

குணசுந்தரன்.—தச்சுவாடிவீதி 2-வது குறுக்குத் தெருவில். அவ்வீடு வலதுபக்கம் வாடையிலிருக்கிறது.

அதுமிக்க எளியவர்களான அன்னியநாட்டார் வசிக்கும் பாகம்.

பஞ்சநாதன்.—" நான் நகரத்திற்குச்சென்றதே அவ ளைப்போய் பார்க்கிறேன். எதாவது ஒரு வழி செய்ய வேண்டியதே " என்றான்.

பிறகு இருவரும் கீழிறங்கிக் கூடத்தில் உட்கார்ந் தார்கள். அங்கே இருந்த கிருஷ்ணபாய் குணசுந்தரனை நோக்கி, "அண்ணா ? உமக்குக் கிடைத்திருக்கும் மனைவி போல் நூற்றில் ஒருவர் அகப்படுவது பிரயாசை " என் றாள்.

குணசுந்தரன் வியப்பும் சந்தோஷமு மடைந்து, "என்ன அம்மா தங்காய் என்ன விசேடத்தால் இப்படி கூறுகிறாய்" என்றான்.

கிருஷ்ணபாய்:—" உமக்காகத்தன் மனதி லிருக்கும் அவாவைக்கூட அடக்கிக் கொள்வாள். இதோ பாருங் கள் மேஜைமேல் தங்கள் கலியாணத்தை யநுசரித்து உமது சிநேகிதர் முதலியவர்கள் பலவித பரிசுகளையனுப்பி யிருக்கிறார்கள். அந்தச் சிப்பங்களை நான் பிரித்துப்பார்க் கலாமென்று அவாவோடு கூறினேன். அதற்கு மங்க ளாம்பாள் தனக்கும் மிக்க அவாவே யிருப்பதாயும், ஆயி னும் தாங்கள் வருவதன் முன்னம் பிரிக்கலாகா தென்றும் கூறிவிட்டாள். இதோ பாருங்கள் எத்தனை சிப்பங்க ளிருக்கின்றன. யாவற்றிலும் அந்தச் சிறு பெட்டியே மிக்க அழகா யிருக்கிறது. அது நமது நாட்டுவேலையல்ல. அதைத் தான் முன்னடி பார்க்க வேண்டுமென்று எனக்கு அதிக ஆவலாயிருக்கிறது " என்றாள்.

குணசுந்தரன்:—" ஆ ! மங்களாம்பாளும் அம்மாளும் கூட இதோவருகிறார்கள். ஒவ்வொன்றாய்ப் பிரித்துப் பார்ப்போம்" என்றான்.

இதற்குள் மற்றவர்களும் வந்து சூழ்ந்துகொள்ள, கிருஷ்ணபாய்கூறிய சிறுபெட்டிதவிர மற்ற எல்லாவற்றையும் முன்னாடி திறந்து பார்த்தார்கள். ஒவ்வொன்றிலும் ஆபரணம், தங்கம் அல்லது வெள்ளிபாத்திரங்கள், இப்படிப்பட்ட பலவிதசாமான்கள் இருந்தன. அதோடு அனுப்பினவர்கள் கைப்பட ஒரு கடிதமும் ஒவ்வொன்றிலும் அடக்கம் செய்யப்பட்டிருந்தது.

கடைசியில் அச்சிறு பெட்டியை யெடுத்தார்கள். அன்னிய தேசவேலைப்பாடாயிருந்தது. மேல்விலாசம் கல்வியறிவில்லாதவன் எழுதியதுபோ லிருந்தது. எங்கிருந்து வந்ததென்று பார்த்தபோது இரத்னபுரியிலுள்ள கோட்டை ஸ்டேஷனில் இருந்து வந்ததாய்த் தெரிந்தது. குணசுந்தரன் இது தையபநாயகம் அனுப்பியதாகவே இருக்கவேண்டும் என்று மனதில் நினைத்துக்கொண்டான். பெட்டியின் மேலிருந்த முத்திரையால் அப்பெட்டி வீரை புரத்திலிருக்கும் ஒருகம்பெனியில் செய்யப்பட்டதென்று தெரிந்தது. மேலே கயிறு கட்டியிருந்தது. கயிற்றை யறுத்துவிட்டு ஒரு கத்தியால் மேல் மூடியைப் பெயர்த்தான். உடனே குபீரென்று ஒருவித துர்நாற்றம் அறை முழுதும் கிளம்பியது. பெட்டிக்குள் ஒரு பத்திரிகை மடித்து மூடப்பட்டிருந்தது. அதை எடுத்தபின் உள்ளே இருந்ததைக் கண்டதே குணசுந்தரன் அலறி வீறிட்டுப் பின்னிடைந்தான். மற்றபேரும் அதைக் குனிந்து பார்த்ததும் ஆவென்றலறிக் கூவிப் பின்னிடைந்தார்கள். அப்படி யாவரும் அஞ்சி அலறுவதற்குக் காரணம் என்னவெனில், அப்பெட்டியில் மிக்க அழகான இரண்டு கரங்கள் மணிக்கட்டுவரையில் வெட்டப்பட்டு ஒன்றோடொன்று கெட்டியாய்க் கோர்த்துக்கொண்டிருந்தன.

இந்த கோரத்தைக் கண்டதே அவர்களுக்குண்டான

பயம் இவ்வளவென்று கூறமுடியாது. ஸ்திரீகள் இரு கரங்களாலும் கண்களை மூடிக்கொண்டார்கள். பஞ்சநாதனே முதலில் மனோதிடமடைந்து கீழேவிழுந்த கடிதத்தை எடுத்துப் பெட்டியை மறுபடி மூடிவிட்டான். பிறகு மாதர்களை நோக்கி, "நீங்கள் உங்கள் அறைக்குப் போய் விடுவதே நல்லது. நாங்களிருவரும் இதைப்பற்றி என்ன செய்வதென்று யோசிக்கவேண்டும்" என்றான். அவ்வாறே கிருஷ்ணபாய், மங்களாம்பாள் முதலியவர்கள் உடனே அறைவிட்டுப் போய்விட்டார்கள்.

ஸ்திரீகள் சென்றவுடனே கதவு மூடப்பட்டதும் குணசுந்தரன் பஞ்சநாதனை நோக்கி, "ஆ! இதென்ன விபரீதம், மெய்யா அல்லது கனவா?" என்றான்.

பஞ்சநாதன்.—கனவல்லவென்றே அஞ்சுகிறேன்.

குணசுந்தரன்.—யார் இதைச் செய்திருப்பார்கள்? இது கோரமான கொலைதானே?

பஞ்சநாதன்.—அந்தக் கைகள் உனக்கு அடையாளம் தெரிகிறதா.

குணசுந்தரன் அதை மறுபடி பார்த்ததும், ஆ! கடவுளேயென்று காத்தால் கண்களை மூடிக்கொண்டான். அவன் மனதில் பயங்கரமான ஒரு சந்தேகம் உண்டாய் விட்டது.

பஞ்சநாதன் அவன் அருகிற்சென்று தோள்மேல் கையைவைத்து, "வா! வா!! தைரியமாயிரு. இதை எதிரிட்டுப் பார்க்கவேண்டும். யோசித்தால் இன்னும் பெரிய விபரீதமாய் இருக்கும்போல் தோன்றுகிறது. உனக்கு அது அடையாளந் தெரிகிறதா?" என்று வினவினான்.

குணசுந்தரன் கஷ்டத்தோடு, "ஒரு சந்தேகமுமில்லையென்று நினைக்கிறேன். வலது கையில் ஆட்காட்டி விர

வில் மேல்பக்கம் நெருப்புப்பட்ட ஒரு காய்ப்பு வடுவிருந்தது" என்றான்.

குணசுந்தரன் தையல்நாயகியைப் பார்த்து படம் எழுதும்போது அவள் வலது கரத்திலிருந்த மேற்படி வடுவை நன்றாய்ப் பார்த்திருப்பதோடு, அதை அப்படியே படத்தில் எழுதக் கொஞ்சம் சிரமம் எடுத்துக்கொண்டிருக்கிறான். ஆகையால் ஒரு சந்தேகமுமின்றி அவை தையல் நாயகத்தின் கரங்களேயென்று அவனுக்குத் தெரிந்தது. அப்போது அவனுக்கிருந்த மனோவேதனையை இன்ன விதமானதென்று யாவராலும் கூறமுடியாது. அவன் மெதுவாய் மறுபடி மேஜையண்டை சென்று அப்பெட்டியின் மேலிருந்த கடிதத்தை எடுத்துவிட்டுக் குனிந்து சற்றுநேரம் பார்த்துவிட்டு, "ஓ கடவுளே! ஒரு சந்தேகமுமில்லை. அவள் கரத்திலணிந்திருந்த மோதிரம் அப்படியே யிருக்கிறது. இது பெரிய விபரீதம். தென்று எனக்கு விளங்கவில்லை. அவளைக்கொன்ற பாதகன் இதை எனக்கேன் அனுப்பவேண்டும்?" என்றான்.

பஞ்சநாதன்.—"அதே கேள்விதான் நானும் கேட்டுக்கொண்டிருக்கிறேன். அவன் எவனாயிருந்தாலும் உன்மேல் பெரிய வஞ்சம் வைத்துக்கொண்டிருக்கவேண்டும். யார் இதை அனுப்பியதென்றறிய இப்பெட்டியில் ஏதாவது உளவு தெரிகிறதா பார்ப்போம்" என்று அதை நன்றாய்த் திருப்பித் திருப்பி பார்த்தான். 'வீணாபுரத்திலுள்ள கம்பெனியின் முத்திரை தவிர வேறு ஒரு அடையாளமாவது, உளவாவது அதிலில்லை. அது முன்தினம் மாலை இரத்தினபுரிக்கோட்டை ஸ்டேஷனில் இருந்து அனுப்பப்பட்டிருக்கிறது. தற்காலம் அதைப்பற்றி அவ்வளவு சங்கதியே தெரிகிறது' என்று தனக்குத்தானே

கூறிக்கொண்டு, கடைசியில் குணசுந்தரனை நோக்கி, "இப்போது நாம் என்ன செய்வது அதைக்கூறு" என்றான்.

குணசுந்தரன்.—"போலீசாருக்குத் தெரிவிக்கவேண்டும். அதற்கிடையில் என் மாமனுருக்கு ஒரு சீட்டனுப்பி யவரை இங்கு வரவழைக்கிறேன். இதில் அவருடைய யோசனையும் உதவியும் வேண்டும்" என்றான்.

பஞ்சநாதன்.—"ஆம் அதுவே மகா யுக்தமான வழி. தட்சணம் ஒரு ஆளையனுப்பிவையும்" என்றான்.

குணசுந்தரன் உடனே யொருகடிதம் எழுதி ஒரு ஆளைக்கூப்பிட்டு அவன் வசம் கொடுத்து துரிதமாய்ப் போகும்படி யனுப்பினான்.

ஆள் சென்றவுடனே குணசுந்தரன் தன் நண்பனை நோக்கி, "இப்போது நாம் இப்பெட்டியை நீமது வாசிக சாலைக்குக் கொண்டுபோவது நலமென வெண்ணுகிறேன்" என்றான். உடனே அவ்வாறே சென்றார்கள்.

ஒருமணி நேரங்கழித்து தேவராசுப் பிரபு அங்கு வந்துசேர்ந்ததும், குணசுந்தரன் அவருக்குப் பஞ்சநாதனை யறிமுகமாக்கி வைத்தான். அவர் அவனை நோக்கி "என்ன சங்கதி அவ்வளவு முக்கியமானதாய் நேர்ந்தது?" என்று வினவினார்.

குணசுந்தரன்.—அது எப்படிப்பட்டதென்று அதன் விபரத்தை நான் கூறினுற்றெரியும். தாங்கள் உடனே வந்ததற்காக மிக்க வந்தனமுடையவனு யிருக்கிறேன். இவ்விஷயத்தில் எனக்குத் தங்கள் யோசனையும் உதவியும் வேண்டும்.

பிரபு.—நீ கூறுவதை நோக்க எனக்கே அதிக பயமாகிறது. அது என்ன சங்கதி? முன்னே ஒன்று விடா

யல் எல்லாம் விபரமாய்க் கூறு. என்னாலாகக் கூடியது ஏதாவதிருக்கிறதா பார்ப்போம்.

குணசுந்தரன்.—விபரமாய்க் கூறினால் பெரிய கதையாகவே முடியும். கூடியவரையில் சுருக்கமாய்க் கூறுகிறேன். என் பெரியதந்தை யிறந்ததற்கு முன் நான் சித்திர மெழுதுவதையே தொழிலாய்க் கொண்டிருந்தேனென்று தங்களுக்குத் தெரியும். அப்போது ஒரு நல்ல உருவம் எழுதுவதற்காக மாதிரிக்கு யாராவது சரியான வனப்புடைய ஒரு கன்னிகை யகப்படுவாளா வென்று இரத்னபுரி நகரமெங்கும் தேடிப்பார்த்தேன். எங்கும் அகப்படவில்லை. ஒருநாள் இந்த நண்பராகிய பஞ்சநாதர் ஒரு அன்னிய நாட்டுக் கன்னிகையைக் கண்டு பிடித்து எனக்குக் காட்டினார். அவளைப் பார்த்துதான் நான் அந்தப் பிரக்யாதியான படத்தை யெழுதிப் பரிசுபெற்றேன். நான் அக்கன்னிகையை யென் சகோதரிபோல் நேசித்தேன். அச்சமயம் என் பெரிய தந்தையிறந்துபோக நான் இந்த ஆஸ்திக்குச் சொந்தக்காரனாகி விட்டேன். உடனே நானும் பஞ்சநாதரும் தேசயாத்திரைபோகத் தீர்மானித்து, அவ்வாறே எகிப்து(Egypt) முதலிய தேசங்களைக் காணச் சென்றோம். கெய்ரோ (Cairo) விலிருந்தபோது என் தாயார் அதிக வியாதியா யிருப்பதாய்த் தந்திவர, நான் பஞ்சநாதரை மட்டும் போய் மற்ற நாடுகளையும் பார்த்து வரும்படி யனுப்பிவிட்டு, நான் மட்டும் நவீனபுரி மார்க்கமாய் இங்குவரப் புறப்பட்டேன். நான் இங்கிருந்து தேச யாத்திரைக்காக புறப்படும்போது, தையநாயகமென்னும் அக்கன்னிகையை நோக்கி, நீ எங்கு சென்றாலும் எனக்கு உன் மேல் விலாசத்தையும், க்ஷேமத்தையும் தெரிவியென்று கூறி யிருந்தேன். அதின்படி அவள் தானும், தன் தாயும் நவீனபுரியிலிருப்பதாய் எனக்

குத் தெரிவித்திருந்தாள். ஆகையால் நான் கெய்ரோவிலிருந்து நவீனபுரிக்குச் சென்ற தினமே அவள் எழுதியிருந்த விலாசத்திற்குச் சென்று அவளைக் கண்டேன். அவளுக்கும், அவள் தாய்க்கும் நான் சாப்பிடும் ஹோட்டலில் அன்று மாலைப்போஜனமளித்து பிறகு நாடகம் பார்க்க அழைத்துக் கொண்டு சென்றேன்"

என்று கூறும்போது பஞ்சநாதன் சட்டென்று "நீ இதையென்னிடம் கூறவில்லையே" என்றான்.

அதற்குக் குணசுந்தரன் "அது அவ்வளவு அவசியமானதல்லவாதலால். அப்போது எனக்கு நினைவுவரவில்லை. இன்னும் விரைவாய் இதைப்பற்றி பேசநேரிட்டிருந்தால் அப்போது நினைவுவந்து கூறியிருப்பேன்" என்று கூறிவிட்டு, மறுபடி பிரபுவை நோக்கி, "நாடகம் பார்த்தபின் இருவரையும் அவர்கள் வீட்டு வாயிலில் விட்டு விட்டு ஹோட்டலுக்குத் திரும்பினேன். வழியில் பகல் நான் அக்கன்னிகையோடு பேசும்போது பார்த்திருந்த ஒருவாலிபன் என்னை ஈட்டியால் குத்தவந்தான். தெய்வகெதியாய் தப்பித்துக்கொண்டு அவன் ஈட்டியைப் பிடுங்கிக்கொண்டு வந்துவிட்டேன். அவன் அவள்மேல் காதல் கொண்டிருந்த ஒரு முட்டாளென்றும், மிக்க பொறாமை யுடையவனென்றும், அக்கன்னிகை கூறியிருந்தாள். மறுநாள் காலையில் நான் இரத்தினபுரிக்குப் பிரயாணமாய் வந்துவிட்டேன்" என்று கூறி, பிறகு வியாழக்கிழமை இரத்தினபுரியில் அவளைக் கண்டதையும், நடந்த சம்பாஷணையும், அன்று தபாலில் பெட்டி முதலிய சாமான்கள் வந்ததையும் கூறி மேஜைமேலிருந்ததைக் காட்டி, அப்பெட்டியிலிருக்கும் கைகள் அக்கன்னிகையுடையதென்று கூறினான்.

இவை யாவும் கேட்ட தேவராசுப்பிரபு பெட்டியைத் திறந்து குனிந்து பார்த்தனும் மற்றபேரைப்போல் தானும் அலரிப்பின்னிடைந்து "அப்பா இது படுகொலை" என்றார்.

---

## 6-வது அத்தியாயம்

**கோழித்திருடிக் கூடகத்தலாவுதல்—கொலையாளியைக் கண்டுபிடிக்க ஆலோசனைகள்—நிரபராதிமேல் ஐயம்பூணைத்தல்—உத்தம மனைவியின் இலட்சணம்.**

முன் அத்தியாயத்தின் இறுதியில் கூறியபடி நடந்த விசேடம் யாவும் கேள்விப்பட்ட தேவராஜப்பிரபு குணசுந்தரனை நோக்கி "இதன் அர்த்தமென்ன?" என்றார். அதற்கு அவ்வாலிபன், "அர்த்தம் நன்றாய்த்தெரிகிறது. பரிதாபமான அக்கன்னிகையை யெந்தச் சண்டாளனோ படுகொலை செய்திருக்கிறான். அவனை யினிக் கண்டுபிடித்தே தீரவேண்டும். ஆனால் இதை யென்னிடம் என் அனுப்பினானோ அதுதான் எனக்குச்சற்றும் புலப்படவில்லை" என்றான.

பிரபு.—அவள் கைகள்தான் என்று நிச்சயமாய்த் தெரிகிறதா?

குணசுந்தரன்:—சந்தேகமேயில்லை. எனக்கும் பஞ்சநாதனுக்கும் பார்த்தவுடனே தெரிந்துவிட்டது.

பிரபு:—ஒன்று உண்மை. இந்தப் பாதகத்தொழிலைச் செய்தவன் உன்மேல் கொடியவஞ்சம் வைத்துக் கொண்டிருக்கிறானென்று தெரிகிறது. உனக்கு அப் பெண்மேலிருந்த பட்சத்தை யவன் அறிந்திருக்கிறான் உனக்கு யார்மேலாவது சந்தேகமிருக்கிறதா?

குணசுந்தரன் பதில்கூறுமுன் பஞ்சநாதன், "ஆ! ஆ! தெரிகிறது. தெரிகிறது. நவீனபுரியிலிருந்தவன், உ

ளைக்கொல்லமுயன்றனே அம்மனிதன். அவன் அப்பெண் மேல் காதலாயிருந்தானென்று நன்றாய்த்தெரிகிறது. அப்படி யில்லாவிட்டால் அவன்கொல்லத் துணியமாட்டான். அவன் உன்னைக்கொல்ல நினைத்தவன், அவளையேன் கொல்லக்கூடாது? நீ முன்னே அவள் துயரமாயிருக்கிறாளென்று கூறியபோது அவள் வசிக்கும் வீதியில் அன்னிய நாட்டார் வாசம் செய்வதாய்க் கூறினையல்லவா? ஆகையால் அவனும் அவ்வீதியில் வசித்திருந்திருக்கலாம். விசேஷமாய் அவனே யவள் கணவனாயிருக்கலாம்; அப்படித்தானிருக்கவேண்டும்" என்றான்.

குணசுந்தரன்.—அவள் கணவன் எங்கோ போய்விட்டானென்று அவள் கூறினளே.

பஞ்சநாதன்.—அவள் அப்படிக் கூறியதற்கு ஏதாவது காரணமிருக்கும். அதற்கு நூறு காரணங்களிருக்கலாம். ஒருசமயம் நீ அவனைக் காணக்கூடாதென்று அவள் அப்படிக்கூறியிருப்பாள். அவன் உன்னைக்கண்டால் ஏதாவது கெடுதிநேரிடுமென்று அஞ்சி யிருப்பாள்.

பிரபு.—பஞ்சநாதர் கூறுகிறபடி விசேஷமாயிருக்கலாம். நீ நடந்துகொள்ளவேண்டியது எவ்வாறென்றால் உடனே போலீஸாருக்குத் தெரிவித்துவிடவேண்டும்.

குணசுந்தரன்.—தாங்கள் கூறியதே சரியானது, இதற்கிடையில் இக்கைகளை யென்ன செய்வது?

பிரபு.—இதையும் போலீஸாரிடம் கொடுத்துவிடவேண்டும். அவர்கள் மூலமாய்த்தான் இந்த இரகசியம் வெளியாகவேண்டும். உடனே போலீஸ் அதிகாரியை யழைப்பித்து இதைக் கொடுத்துவிடு. இதனால் உன்மனதிற்கு மிக்க வியாகுல முண்டாயிருக்கிறது.

குணசுந்தரன்.—என் வியாகுலம் கடவுளுக்குத்தான் தெரியும். அவள் மிக்க யோக்கியமானவள், நேர்மையான

நடக்கையுடையவள். அவளைக் கொன்ற படுபாவியைக் கண்டுபிடிக்கிறவனுக்கு என்ன இனும் கொடுக்கவேண்டு மானாலும் நான் கொடுக்கத் தயாராயிருக்கிறேன். அதற் காக என்னாலான முயற்சியெல்லாம் நான் செய்தே தீரு வேன்.

பஞ்சநாதன்.—அவன் மிக்க தந்திரசாலியா யிருக்க வேண்டும். அவன் மிக்க தந்திரமாய் எல்லா ஏற்பாடும் செய்திருக்கிறான். நானாயிருந்தால் இந்த விஷயத்தைத் துப்பறியும் ஆசாமிகளிடம் விட்டு விட்டு முடிவை யெதிர் பார்த்துக் கொண்டிருப்பேன். அவர்கள் எப்படியாவது அவனைக் கண்டுபிடித்து விடுவார்கள். அவர்களால் பிடிக்க முடியாவிட்டால் வேறு யாராலும் முடியாது.

குணசுந்தரன்—அப்படி யவர்களால் முடியாவிட்டால் அப்புறமும் நான் இதை விட்டுவிட மாட்டேன். தைய நாயகத்தின் மரணத்திற்குப் பழிவாங்கியே தீரவேண்டும். இரத்னபுரியில் சொந்தமாய் வேலைசெய்யும் அனேக கெட் டிக்காரரான துப்பறிகிறவர்கள் இருக்கிறார்கள். அவர் களில் மிக்க கெட்டிக்காரனைக் கண்டுபிடித்து இக்கேஸை யவன்கையில் ஒப்பிக்கவேண்டும். இருபதினாயிரம் ரூபாய் சிலவானாலும் ஆகட்டும்.

பஞ்சநாதன்.—அவர்கள் ஒருமணிக்கு இவ்வளவு தொகையென்று பறிப்பார்கள். கடைசிவரையில் உளவு வேண்டுமென்று உன்னைத் தொந்திரவு செய்வார்கள்.

குணசுந்தரன்.—அதையெல்லாம் சமாளித்தே தீர வேண்டும்.

ஊரிலுள்ள போலீஸ் அதிகாரிக்கு உடனே சங்கதி யனுப்பப்பட, அவன் தட்சணம் வந்துவிட்டான். அவன் தன்னைத்தானே கெட்டிக்காரனாக எண்ணிக்கொண்டிருக் கும் ஒரு குட்டைமனிதன். அவன் கிரிராவ் என்ற போலீஸ்

இன்ஸ்பெக்டர். அவன் வந்தவுடனே பிரபுவுக்கும் குண சுந்தரனுக்கும் மரியாதையாய் வந்தனமளித்துத் தன்னை வரவழைத்த சங்கதி யென்னவென்று வினவினான்.

பிரபு.—உம்மை வரவழைத்ததன் காரணம் இரத்ன புரியில் நடந்த ஒரு கொலைக்காக ?

இன்ஸ்பெக்டர்.—அங்கே தினம் எத்தனையோ குற்றங் கள் நடக்கின்றன. விபரமென்ன ?

பிரபு.—" விபரம் நான் கூறுவதைவிட இவர் கூறி னால் நன்றாய் விளங்கும் " என்று குணசுந்தரனைச் சுட்டிக் காட்டினார்.

அதன்பிறகு குணசுந்தரன் மறுபடி சங்கதிமுழுதும் விவரமாய்க் கூறினான். இன்ஸ்பெக்டர் தன்னிடமிருந்த நோட்புத்தகத்தில் சிலகுறிப்புகளை யெழுதிக்கொண்டு பிர புவைநோக்கி, " இதுசற்று பிரமாதமான விஷயமாகவே காண்கிறது. ஆனால் இன்னம் அவள் திரேகம் கண்டுபிடிக் கப்பட்டு கொலைநடந்தசங்கதி வெளியானதாய்த் தெரிய வில்லை. நான் இதைத்துப்பறியும் ஆபீசுக்குத் தெரிவிக்கி றேன். இடையில் இப்பெட்டி யென்னிட மிருக்கட்டும் குற்றவாளியைக் கண்டுபிடிப்பது அதிக கஷ்டமா யிரா தென்று எனக்குத் தோன்றுகிறது " என்றார்.

பஞ்சநாதன்.—" எங்களுடைய அபிப்பிராயமும் அப் படித்தானிருக்கிறது. நவீனபுரி ஆள்மேல் உமக்குச் சந் தேகமல்லவா ?" என்றான்.

இன்ஸ்பெக்டர் கெம்பீரத்தோடு, " ஆமையா இதை முழுதும் நானே நடத்துவதாயிருந்தால் நன்றாயிருக்கும். ஆனால் இதில் அன்னியர் பிரவேசிப்பார்களென்று நினைக்கி றேன். இதில் கிடைக்கும் கீர்த்தியை யவர்கள் கொண்டு போவார்கள்.

குணசுந்தரன்.—இதில் நேரிடும் சம்பவங்களை யப்போ

றைதக் கப்போது தயவுசெய்து எங்களுக்குத் தெரிவிக்கக் கோருகிறேன்.

இன்ஸ்பெக்டர்.—" அப்படியே யாகட்டும் " என்று கூறிவிட்டு அந்தப்பெண்ணின் மேல்விலாசத்தைக் குறித்துக்கொண்டு புறப்படும் சமயம் வேலைக்காரன் மாலைப் பத்திரிகைகளைக் கொண்டுவந்து குணசுந்தரனிடம் அளித்தான்.

உடனே யாவரும் ஆவலோடு அதிலிருக்கும் 'குற்றங்கள்' என்ற பாகத்தைவாசிக்கத் தொடங்கினார்கள். ஆரம்பத்திலேயே தையநாயகத்தின் கொலையைப்பற்றி அடியிற் கண்டபடி வரைந்திருப்பதைக் கண்டார்கள்.

" ஒரு பெண்ணின் படுகொலை.

இன்றுகாலை தச்சுவாடிவீதி 2-வது குறுக்குத்தெரு 16-வது நெம்பர் வீட்டில் ஒருகொலை நடந்திருப்பதாய் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சங்கதிவர அதிகாரிகள் சென்று சோதித்தார்கள். கொல்லப்பட்டவள் அன்னியநாட்டாளாகிய ஒரு கன்னிகை. பெயர் தையநாயகம். அவள் இரண்டுவாரங்களுக் கதிகமாய் அங்கே வசித்துவந்ததாய்த் தெரிகிறது; அவள் கடந்த வியாழக்கிழமை இரவு 7-மணிக்கு உடுத்திக்கொண்டு வீட்டைவிட்டு வெளியில் சென்றிருக்கிறாள். அவள் வந்தது யாருக்கும் தெரியாது. வெள்ளிக்கிழமை யவள் காணப்படாதிருந்ததை யாரும் கவனிக்கவில்லை. அவ்வீட்டிலிருக்கும் மற்ற குடும்பங்களில் யாரோடும் அவள் கலந்து பேசுவதில்லை; சனிக்கிழமை காலை அவள் அறைக்குப் பக்கத்து அறையில் வசிக்கும் ஒரு தையற்காரன் அவள் அறைக்கதவின்கீழ் இரத்தம் வடிந்திருப்பதைக்கண்டு சந்தேகங்கொண்டு வீட்டுக்காரனுக்கு அறிக்கையிட்டான். வீட்டுக்காரன் உடனே ஒரு போலீஸ்காரன் உதவியோடு சென்றுபார்க்கக் கதவு பூட்

டப்பட்டிருந்தது. தட்டிப்பார்த்தார்கள். பதில் இல்லை. உடனே நெக்கிக் கதவைத்திறந்து உள்ளே சென்றார்கள். அங்கிருந்த மேஜைக்கும் கதவிற்குமிடையில் அக்கன்னிகை சவமாய் விழுந்துகிடந்தாள். அவள்கழுத்து அறுக்கப் பட்டு இருந்ததோடு தேகத்தில் இரண்டு மூன்றுதரம் கூர்மையான ஏதோ ஆயுதத்தால் குத்தப்பட்டிருந்தது. இவையன்றி அவளுடைய இரண்டுகரங்களும் மணிக்கட்டு கள் வரையில் வெட்டப்பட்டிருந்தன. கரங்கள் காணப் படவில்லை. போலீஸார் விசாரித்தும் ஒரு விபரமும் கண்டு பிடிக்கப்படவில்லை.

பின்னால் வெளியானசங்கதி.

பின்னால் போலீஸாரால் நுட்பமான விசாரணை நடந்ததில் அடியிற்கண்ட சங்கதிகள் வெளிவந்தன:—

"முன் நடந்த சித்திரப்படக் காட்சியில் பரிசுபெற்ற குணசுந்தரன் என்பவர் எழுதிய படம் இவளைப் பார்த்து தான் எழுதப்பட்டது. இவள் நவீனபுரி நகரத்திலிருந்து வந்தவள். இங்கே நெடுங்காலம் வசித்திருக்கிறாள். அந்த குணசுந்தரர் என்பவர் யாரென்று கூடிய சீக்கிரத்தில் போலீஸார் கண்டுபிடிப்பார்கள்."

இதைவாசிக்கவே குணசுந்தரன் "அந்தோ, கடவுளே! நான் கூறிய விஷயங்களுக்குமேல் எனக்கு இதைப்பற்றி அதிகமாய்த் தெரியுமென்று அவர்கள் எண்ணுகிறது போலிருக்கிறது" என்றான்.

அப்போது பிரபு "அதை யவர்களுக்குத் தெரியும்படி செய்யவேண்டும். மரணவிசாரணை யெப்போது நடப்ப தென்று இதில் குறிக்கப்பட்டிருக்கிறதா?" என்றார்.

குணசுந்தரன் பத்திரிகையைப்பார்த்து திங்கட் கிழமை யென்றான்.

பரபு.—"அப்படியானால் உடனே கோரனருக்கு (மரணவிசாரணை செய்பவர்) எழுதி உனக்குத் தெரிந்த விஷயங்களைக் கூறிவிடு. உன் நன்மைக்காகவும் பொது நலத்திற்கும் உடனே யதைச் செய்யவேண்டும்" என்றார்.

குணசுந்தரன் அப்படியே செய்வதாய்க் கூறிவிட்டு இன்ஸ்பெக்டர் கிரிராவைநோக்கி, "நீர் உடனே துப்பறியும் ஆபீஸுக்கு சங்கதியைத் தெரிவியும். கொலைசெய்தவன் அன்றிரவு நான் அக்கன்னிகையோடு வார்த்தையாடியதைக் கண்டிருக்கவேண்டும். பொறாமையால் சூதாத்திரம் கொண்டு இப்படிச் செய்திருக்கிறான். அதனாற்றான் காங்களை யெனக்கனுப்பி யிருக்கவேண்டும்" என்று கூறினான்.

இன்ஸ்பெக்டர் அப்படியே செய்வதாய்க்கூறிப் பெட்டியை யெடுத்துக்கொண்டு போய்விட்டார். அதன் பிறகு இவர்கள் மூவரும் சற்றுநேரம் அதைப்பற்றி பேசிவிட்டுக்கடைசியில் ஸ்திரீகள் இருக்குமிடத்திற்குச்செல்லப் புறப்பட்டார்கள். அச்சமயம் பஞ்சநாதன் திடீரென்று மூர்ச்சையாய் விழுந்துவிட்டான். இதைக்கண்ட குணசுந்தரன் ஆவலோடு அவனைத்தூக்கி மஞ்சத்தில் வளர்த்தித் தக்க உபசாரம் செய்தபின், அவன் மெதுவாய்க் கண்களைத்திறந்தான்.

குணசுந்தரன் தன் நண்பனை நோக்கி, "என்னிலும் அவள் உனக்கு முன்னடியே அறிமுகமானதால் இச்சங்கதி உன்மனத்திற்குத் தாங்கமுடியாத துன்பத்தை யுண்டாக்கிவிட்டது" என்றான்.

பஞ்சநாதன்.—"யாத்திரையால் முன்னமே தேகமும், மனோதத்துவங்களும் பலஹீனப்பட்டிருக்கவே திடீரென்று நேர்ந்த இச்சம்பவம் என் தைரியத்தைக் கலக்கிவிட்டது" என்றான்.

அவனைச் சற்று இளைப்பாறும்படி அறையில் சயனிக்

கச்செய்துவிட்டு, குணசுந்தரனும் பிரபுவும் சென்று ஸ்திரீகளுக்கு ஒருவாறு தேறுதல் கூறினார்கள்.

குணசுந்தரன் தாயார் அவனைக்கண்டதும் ஆவலோடு அருகில்வந்து, "சுதனே! இந்தப் பாழுஞ்சங்கதி யுன்மனதிற்குப் பெரியவேதனையை யுண்டாக்கிவிட்டது. உனக்குள் ஏதாவது சித்தாந்தம் ஏற்பட்டதா ?" என்றாள்.

குணசுந்தரன்.—அம்மா இது நான் வெளிக்குக் காட்டிக் கொள்வதைவிட அதிக வேதனையையே யுண்டாக்கிவிட்டது. இப்போது தெரிந்திருப்பதெல்லாங்கூடி, 'ஒரு கோரமான கொலை நடந்திருக்கிறது. அக்கொலையைச் செய்த சண்டாளன், நான் அக்கன்னிகையிடம் வைத்திருந்த சகோதரிவாஞ்சையை விபரீதமாய் எண்ணிக் கொண்டு, என்மேல் வஞ்சம்தீர்க்க இப்படிச் செய்திருக்கிறான்' என்பதே. பின்னால் இதைப்பற்றி இன்னும் விபரமாய்ப் பேசிக்கொள்ளலாம். இப்போது அதைப்பற்றி இன்னும் அதிகமாய்ப் பேசாமலிருப்பதே எனக்கு நீங்கள் செய்யவேண்டிய உபகாரம்" என்றான்.

பிரபு.—"அதுதான் நலம், குணசுந்தரனுக்கு இதனால் வீண் தொந்திரவுகள் நேரிடாவண்ணம் கிரிராவ் இன்ஸ்பெக்டர் பார்த்துக்கொள்வார்" என்றார்.

குணசுந்தரன் தாய்.—"ஆ! பஞ்சநாதன் எங்கே காணோமே ?" என்றாள்.

குணசுந்தரன்.—"இந்தவிஷயம், பாபம், அவன் மனதைக் கலக்கிவிட்டது. அவன் முன்னமே யாத்திரையால் அலுப்படைந்திருந்தான். இருதயம் பலகீனப்பட்டிருந்தது" என்றான்.

சற்றுநேரம் கழிந்தபின் தேவராஜ-ப்பிரபு தன்மாளிகைக்குத் திரும்ப வண்டியேறும்போது, குணசுந்தரனை ஒருபுறமா யழைத்து, "நீ மனோதைரியத்தை விர்த்தி

செய்துகொள். கொலையாளி எப்படியும் சிக்கிரத்தில் பிடிக்கப்படுவான்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

பிறபுசென்றபின் குணசுந்தரன் தன் நண்பன் எப்படியிருக்கிறனென்று காணச்சென்றான். பஞ்சநாதன் சற்று மனோதைரிய மடைந்தவனைக் காணப்பட்டான். குணசுந்தரன் அதன்பிறகு சென்று முன்செய்துகொண்ட ஏற்பாடின்படிக்கு கோரனருக்கு ஒருகடிதம் எழுதினன். அதில் பத்திரிகையில் குறிக்கப்பட்ட குணசுந்தரன் என்பவன் தானே யென்றுகூறி, அக்கன்னிகையின் விஷயமாய்த் தனக்குத்தெரிந்த சங்கதிகளை எழுதியிருந்தான். பிறகு தன் குடும்ப லாயருக்கு நடந்த சங்கதிகளையெல்லாம் கூறி, திங்கட்கிழமை மரணதண்டனை நடக்குமென்றும், முன்னுடி தான் அவரை நேரில் சந்தித்து எல்லாம் பேசுவதாயும் ஒருகடிதம் வரைந்தான். அதன்பிறகு யாவரும் போஜனத்திற்கு உட்கார்ந்தார்கள்.

அந்தோ, மனிதன் ஒன்று நினைத்தால் கடவுள் வேறொன்று நினைக்கிறார். குணசுந்தரன் இன்று தன் ஆப்த நண்பனும், தன் காதலியாகிய மங்களாம்பாளும் வீட்டில் வந்திருப்பதாலும், கலியாணம் நெருங்கியிருப்பதாலும் இப்போஜனம் எவ்வளவோ சந்தோஷமானதா யிருக்குமென்று எண்ணியிருந்தான். ஆனால் இது மிக்க துக்க போஜனமாய் முடிந்தது. யாவரும் வாடியமுகத்தோடும் துயரமான மனதோடும் ஒன்றும்பேசாமல் மௌனமாய்ப் போஜனம் செய்தார்கள்.

போஜனம் முடிந்தபின் தாழ்வாரத்தில் தன் புதல்வனைக்கண்ட குணசுந்தரன் தாய், "குழந்தாய், இப்போது பத்திரிகையைக் கண்டபின், உனக்கு இச்சம்பவத்தால் ஏன் இவ்வளவு துயரமுண்டாயிற்றென்று தெரிந்தது. அக்கன்னிகை நீ படம் எழுதுவதற்கு மாதிரியாய் உட்

கார்ந்தவளாம்; அநியாயமான கொலை. அன்று இரவு பன்னிரண்டு மணிக்கு அவள் வீட்டினருகில் அவளும் இன்னொரு மனிதனும் வார்த்தையாடிக் கொண்டிருந்ததை அவ்வழி சென்ற ஒரு போலீஸ்காரன் கண்டானும். அம்மனிதன் இக்கொலையில் ஏதாவது சம்பந்தப்பட்டிருப்பான் என்று நினைக்கிறாயா ? என்றாள்.

குணசுந்தரன் திடுக்கிட்டு நடுங்கி, "அவன் சம்பந்தப்படவில்லையென்று நிச்சயமாய்க் கூறுவேன். ஏனெனில் அம்மனிதன் நான்தான்" என்றான்.

அச்சமயம் அருகிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த மங்களாம்பாள் திகில்கொண்டு "அந்தோ நீரா ? அப்போதுதானே என்னையும் என்தாயையும் நாடகசாலையிலிருந்து வீட்டிற் கனுப்பிவிட்டுத் தாங்கள் ஹோட்டலுக்குச் செல்வதாய்க் கூறிச்சென்றீர்கள் ?" என்றாள்.

குணசுந்தரன்.—ஆம், ஆம், உங்களுக்கு ஆதியோடந்தமாய்க் கூறினால்தான் தெரியும் என்று, தான் நையநாயத்திற்கு அறிமுகமானதுமுதல், தான் நவீனபுரியில் அவளைக் கண்ட விஷயங்களும், அங்கு தனக்கு ஆபத்து நேரிடவிருந்ததும், பிறகு இரத்னபுரியில் அவளைக்கண்டதும், அவள் துயரமாயிருந்ததைக் கண்டு உதவி செய்வதாய்த் தேறுதல் கூறியதும் யாவும் ஒன்றுவிடாமல் விபரமாய்க் கூறினான்.

யாவும் கேட்டுக்கொண்டபின் மங்களாம்பாள் அவனை நோக்கித் "தாங்கள் அனுதையாகிய அப் பெண்விஷயத்தில் உதவிசெய்ய எண்ணியது மிக்க உத்தமமானகாரியம். எனக்குத் தெரிந்திருந்தால் நானே அவளுக்கு உதவிசெய்திருப்பேன். ஆயினும் இச்சம்பவத்தை யதிகமாய் மனதில் வைத்துக்கொள்ளவேண்டாம். கூடியவரையில் மெதுவாய் மறந்துவிட முயற்சிசெய்யுங்கள். ஆனால் எவ்வளவு

செலவாயினும் ஆகட்டும். அவனைக்கொன்று தங்கள் மன திற்கு இப்படி வியாகுலத்தையுண்டாக்கிய பாதகனை மட் டும் எவ்விதமாவது கண்டுபிடித்துப் பழி வாங்கவேண்டிய முயற்சியைத் தேடுங்கள். அதுதான் நாம் கடைசியாய் அவளுக்குச் செய்யவேண்டிய கடமை. இதில் எனக்கு அனுமதி தந்தால் யானும் உதவிசெய்ய ஆயத்தமாயிருக்கி றேன் என்றாள்.

தன் காதலி கூறிய இம்மொழிகள் அவன் மனப்புண் ணுக்கு எவ்வளவோ அனுகூலமான ஔஷதமாயிருந்தது. உத்தமமாதர் நடக்கையின் பயன் அளவிடக்கூடியதோ !

---

## 7-வது அத்தியாயம்.

**இன்ஸ்பெக்டர் கிரிராவ்—மரணவிசாரணைக்குமுன் ஆலோசனைகள்—இலாயரிடம் ஆலோசனை—சிநேக நம்பகம்—குணசுந்தரன் இக்கட்டு—மரண விசாரணை.**

முன் அத்தியாயத்தின் இறுதியில் கூறியபடி குணசுந் தரனும் மங்களாம்பாளும் வார்த்தை யாடிக் கொண்டிருக்கையில், பஞ்சநாதன் அங்குவந்தான். அவன் அக்கன்னிகையைநோக்கி, " அம்மா எனக்கு குணசுந்தர னைப்போல் இருதயவலிமை கிடையாது. மேலும் யாத் திரையால் என் தேகமும் மனவல்லமையும் களைத்திருக்கும் சமயத்தில் திடீரென்று எதிர்பாராத இச்சம்பவம் நேரி டவே, என்மனம் தாளக்கூடாமற்போயிற்று. கொஞ்சம் வெயிலில் அதிகமாய் நடந்தால் ஒருமணிநேரம் தலைதூக்க வும்முடியாமல் படுத்துவிடுவேன் " என்று தான் மூர்ச்சை யடைந்ததற்குக் காரணம் கூறினான்.

அதன்பிறகு யாவரும் சற்றுநேரம் சங்கீதத்திலும் வேடிக்கை விளையாட்டிலும் காலங்கழித்தார்கள். என்ன

செய்தும் இவர்கள் மனதை மூடிக்கொண்ட இருள் ஒழிய வில்லை. உற்சாகம் பிறக்கவில்லை. இரண்டு வெட்டுண்ட கரங்களும் இவர்கள் கண்முன்பாக இருப்பது போலவே காணப்பட்டன.

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை காலையில் குணசுந்தரன் எழுந்து ஏழுமணிக்கெல்லாம் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றான். இன்ஸ்பெக்டர் இன்னும் வரவில்லை. சற்று நேரம்பொறுத்து அவர் வந்தவுடனே குணசுந்தரன் அவரை நோக்கித் துப்பறியும் ஆபீசுக்குச்சங்கதி தெரிவித்தீரா? என்று வினவினான். அதற்கு கிரிராவ், "இராத்திரியே அவர்களுக்குத் தந்திமூலமாய்ச் சங்கதி யனுப்பினேன். பிறகு கடிதம் எழுதியனுப்பினேன். தபால் இன்னும் வர வில்லை. வந்தால் என்ன சங்கதி வருவதும்தெரியும். குண சுந்தரன் அங்கிருந்து திரும்பி கோயிலுக்குச்சென்று கட வுளைப்பிரார்த்தித்துவிட்டு அங்கிருந்து வீட்டிற்குப் புறப் பட்டான். அச்சமயம் தேவராஜப்பிரபு அவனைச் சந் தித்து ஏதாவது விசேஷசங்கதி வந்ததா? என்று வின வினார். குணசுந்தரன் தான் ஸ்டேஷனுக்குச்சென்றசங்கதி யும் இன்ஸ்பெக்டர் கூறியசங்கதியும் இயம்பினான். பிறகு "எதற்கும் நான் நாளைகாலை இரத்னபுரிக்குச்சென்று என் லாயரைக்கண்டு பேசுகிறேன். முன்னமே அவருக்குக்கடி தம் எழுதியிருக்கிறேன். அதன்பிறகு மரண விசாரணை நடக்குமிடத்திற்குச் செல்வேன்" என்றார். தன் சாக்ஷியமும் ஏதாவது பிரயோசன முடையதா யிருக்குமென் றெண்ணி பஞ்சநாதனும் வருவதாய்க் கூறினான்.

பஞ்சநாதன் சென்றதே, குணசுந்தரனும் வீட்டிற் குச் செல்லப் புறப்படும் சமயம் பிரபு அவனைநோக்கி "சற்று பொறு; நான் உன்னையொரு கேள்வி கேட்கப் போகிறேன். உனக்கு அதனால் ஒரு சமயம் கோபம் வரு

மென்றெண்ணுகிறேன். வந்தாலும் வாராவிட்டாலும் நான் கேட்டே தீரவேண்டும்" என்றார்.

குணசுந்தரன்.—"தாங்கள் எந்தக்கேள்வி கேட்டாலும் எனக்கு ஒரு போதும் கோபம்வராது. அதென்ன கேள்வி?" என்றான்.

பிரபு.—"இந்தச் சிநேகிதன் உனக்கு எத்தனை நாளாய்ப் பழக்கம்? நான் கூறுவது உனக்கு முட்டாள் தனமாயிருக்கும். பஞ்சநாதனுக்கு உன்மேல் விருப்பம் இல்லையென்பது என்னுடைய தீர்மானம்" என்றார்.

குணசுந்தரன்.—அப்படியானால் தாங்கள் தப்பிதமாகவே கூறிவிட்டீர்கள்: நானும் பஞ்சநாதனும் பாடசாலையில் சந்தித்தோம். அதுமுதல் சிநேகிதராகவே யிருக்கிறோம். அவன் மேலுக்கு ஒருசமயம் சற்று கடுகடுப்பாய்த் தோன்றினாலும் உள்ளத்தில் எப்போதும் முழுதும் நல்லவனே" என்றான்

பிரபு சற்றுநேரம் மௌனமாயிருந்தார். பிறகு வாலிபனைநோக்கி, "அப்படியிருந்தால் நான் தீர்மானித்தது தவறே. எனக்கென்னமோ அவன் விஷயத்தில் பிடிக்கவில்லை. நீ அவனைக் காணாதபோது, அவன் பார்வையுன்மே லிருக்கையில், அது துஷ்டப் பார்வையைப் போலவே எனக்குத் தோன்றியது. என் அபிப்பிராயம் என்னவென்றால் நமக்குத் தெரிந்திருப்பதை விட அவனுக்கு இது விஷயத்தைப்பற்றி யதிகமாய்த் தெரியும் என்பதே.

குணசுந்தரன் தன் நண்பன் பக்கமாய்ப் பரிந்து,"தங்கள் அபிப்பிராயம் எனக்கு ஒப்பவில்லை. நாங்கள் இரத்னபுரியிலிருந்து புறப்பட்டதுமுதல் அவன் அக்கன்னிகையைப் பார்க்கவில்லையென்று எனக்குத்தெரிகிறது. அவள் அழகா யிருந்தால் நான் ஒருசமயம் காதல் கொள்ளப்

போகிறேனே வென்றஞ்சி, அவளைவிட்டு என்னைப் பிரியும் படிசெய்தது அவனே. நான் எதையும் ஒளிக்காமல் கூறு கின்றேன்" என்றான்.

பிரபு.—"மிக்கச் சந்தோஷம். எப்படியாயினும் கிழவர்களிடம் பிடிவாதமென்ற குற்றம் இருந்தேதீரும். என்னிடத்திலும் அது உண்டு. அதனால் நீ என்ன கூறினும் என் அபிப்பிராயம் மாறாது. நான் எண்ணியது சரியோ பிசகோ போகப் போகத்தெரியும். அது இருக்க, நீ நாளைகாலை நகரத்திற்குச் செல்கிறாயோ?" என்றார்.

குணசுந்தரன்.—ஆம். பத்தரைமணி வண்டியில் போகிறோம்.

பிரபு.—அப்படியானால் நீ எனக்கு ஒரு அனுமதி தர வேண்டும். அதாவது நீ என் புதல்வியை மணம் புரியப் போகிறபடியால், உன் க்ஷேமலாபங்களைப் பற்றி நான் அக்கரை யுடையவனா யிருப்பது சுபாவமே. ஆதலால் நானும் உன்கூட வர விரும்புகிறேன்.

இதைக் கேட்ட குணசுந்தரன் மிக்கச் சந்தோஷமடைந்து "தாங்கள் வருவது எனக்கு அதிக சந்தோஷமா யிருப்பதோடு, நான் அதற்காக மிக்க நன்றி யுள்ளவனா யிருக்கக்கடமைப் பட்டிருக்கிறேன். நானே தங்களுக்கு அந்தத்தொந்திரையெப்படிகொடுப்பதென்று அஞ்சியிருந்தேன். மேலும் தாங்கள் என்துணையாய் வருவதானால் என்தாயார் தங்கை மங்களாம்பாள் யாவருக்கும் மனம் மிக்க நிம்மதியா யிருக்கும். மேலும் இது விஷயத்தில் நான் கூறியதை யெல்லாம் உண்மையென்று தாங்கள் நம்புவதாய் யாவர்க்கும் தெரியும்" என்றான்.

பிரபு.—"தடையென்ன! நாங்களெல்லாம் உன்னை முழுதும் நிரபராதியென்று பூரணமாய் நம்புகிறோம். எவனாவது இதை நம்பாவிட்டால் அவன் பைத்தியம் பிடித்

தவனாக யிருக்கவேண்டும். சரி நான் இந்த வழியேபிரிந்து போகவேண்டும். நாளை காலை பத்தரை மணிக்கு இரயில் ஸ்டேஷனில் சந்திக்கிறேன் " என்று கூறிவிட்டுச் சென்றார்.

குணசுந்தரன் வீட்டிற்குச் சென்று தன் காதலியிடம் அவள் தந்தையும் நாளைக்கு நகரத்திற்கு வருவதாய்க் கூறிய விஷயத்தை யியம்பினான். அதற்கு,

மங்களாம்பாள்.—"என் தந்தையும் பஞ்சநாதரும் தங்கள் கூட இருக்கும்வரையில் தங்கள் விஷயத்தில் யாரும் தவறாய் நினைக்கத்துணியார்கள் " என்றாள்.

இருவரும் மெத்தை மேல் சென்றபோது பஞ்சநாதன் தன் அறையில் ஒரு பெரிய நாற்காலியில் சயனித்துக்கொண்டிருந்தான். அவன்முகம் வெளுத்திருந்தது. குணசுந்தரன் அவனைக்கண்டதும் " நீடிக்கு நெடுநாளாய் இவ்வளவு சினேகித மாயிருந்தவன், நம்மால் எவ்வளவோ பொருட்சகாயம் பெற்றவன், நம்மால் எவ்வளவோ உறுதியாய் நம்பப்பட்டிருப்பவன், இப்படிப்பட்ட இவனுக்கு நம்மேல் பிரியம் குறைந்திருக்குமா ? இராது" என்று தனக்குத்தானே சிந்தித்துக் கொண்டான். இவர்களைக் கண்ட பஞ்சநாதன் தலைநிமிர்ந்துபார்த்து, "ஆ! இப்படி சுறு சுறுப்பாயிருப்பது எவ்வளவு நன்றாயிருக்கிறது. குணசுந்தரன் ஒரு நாட்டுப் பெரிய மனிதனாகவே காணப்படுகிறான். இதேமாதிரி உன்போல் ஒருபடம் நீயே எழுதினால் மிகவும் நன்றாயிருக்கும்" என்றான்.

குணசுந்தரன் இதற்கு ஒரு பதிலும் கூறவில்லை. பிறகு தானும் தன் காதலியும் இதைப்பற்றி தனியே பேசியபோது, அவன் அவளைநோக்கி, " என்காதலியே ! அவன் என்மேல் வெறுப்படைந்தால் அதைப்பற்றி அக்கரையே யில்லை. அவன்மனம் சரியான நிலைமையி லில்லை.

அதுதான் இருக்கிற உண்மை. அவன் அதைக்காட்டிக் கொள்ளாவிட்டாலும் இந்த விஷயம் என்மனதைப் புண்ணாக்கியதுபோலவே அவன் மனதிலும் அதிக வியாகுலத்தை யுண்டாக்கி விட்டிருக்கிறதென்று எனக்கு நன்றாய்த்தெரியும். அவனுடைய நரம்புகள் அதைத் தாங்க முடியவில்லை; நாளைக்கு விசாரணை முடிந்ததே மறுபடி தேசயாத்திரை போய்விடப் போகிறான். இன்னம் நெடு நாளைக்கு அவனைக் காணமாட்டோம்” என்றான்.

மங்களாம்பாள்.— தேச யாத்திரையால் மிகவும் அலுத்துவிட்ட தாகவும் இனி எங்கும் போகமாட்டேனென்றும் கூறினதாய் எனக்கு நினைப்பிருக்கிறதே.

குணசுந்தரன்.—“ ஆம், நாம் தவறாய் அப்படி நினைத்தோம். இப்போது அவன் மனம் முழுதும் மாறுதலடைந்துவிட்டது. நாம் இன்னம் பத்துநாளையில் மணம் புரிந்துகொள்ளப் போகிறபடியால் இதையெல்லாம் அதிகமாய் மனதில் தாங்கவிடக்கூடாது ” என்றான்.

அன்று இரவு குணசுந்தரனுக்கு நித்திரையே பிடிக்கவில்லை. நாளை நடக்க விருக்கும் மரணவிசாரணை அவன் மனதைவிட்டுச் சற்றாவது நீங்கவில்லை. சற்று கண்மூடியதும், தையநாயகம் ஒரு அறையில், தன் முன் முழங்காலிட்டுக் கரங்களைக்கோர்த்து உயரத்தூக்கித்தன்னைநோக்கி எதற்காகவோ பிரார்த்தனை செய்வதுபோலவும், பிறகு அவள் தன்முன் சவமாய் விழுந்து கிடப்பதுபோலும், கனவுகண்டு அலறிக்கண்விழித்தான். அப்போது பஞ்சநாதன் கையில் விளக்கை வைத்துக்கொண்டு தன் படுக்கைக்குப் பக்கத்தில் நிற்பதைக்கண்டான். அவன் முகம் பயங்கரமாய் விகாரமடைந்தது.

குணசுந்தரன் அவனைக்கண்டதும் திடுக்கிட்டு உட்

கார்ந்து " ஆ கடவுளே! பஞ்சநாதம்! என்ன சங்கதி? ஏன் இப்படி பயமடைந்திருக்கிறாய்?" என்றான்.

பஞ்சநாதன்.—"நான் உன் கூடவே யிருக்கிறேன். தனியேயிருந்தால் என்ன செய்துவிடுவேனோ தெரியாது. நான் கண்ட பயங்கரமான கனவுகள், அப்பா! இனிக் கண்ணையொரு விநாடிகூட மூடமாட்டேன். நான் எப்படியிருக்கிறேன் பார்க்கவில்லையா?" என்று குழறினான்.

குணசுந்தரன் அவனுக்குத் தைரியம் கூறினான். பஞ்சநாதன். "அப்பா நான் என்ன பயங்கரமான கனவுகள் கண்டேன் தெரியுமா. இனியொரு விநாடிகூட அறையி லிருக்கமாட்டேன். என்னை முட்டாளென்று எண்ணாதே, நான் மெய்யாய்ப்பயந்துவிட்டேன். என்ன பயங்கரமான கனவு!" என்றான்.

குணசுந்தரன் பாபம் இவனுக்குப் பைத்தியம் பிடித்து விடும்போலிருக்கிறதேயென்று மனதில் துயரமடைந்து, அவனுக்குத் தேறுதல்கூறி தன் அருகில் சயனித்துக் கொள்ளச் செய்தான்.

மறுநாள் காலைவண்டியில் குணசுந்தரன், பஞ்சநாதன், தேவராஜப்பிரபு மூவரும் இரத்னபுரிக்குப் பிரயாண மானார்கள். இன்ஸ்பெக்டர் கிரிராவும் அதேவண்டியில் நகரத்திற்குச் செல்கின்றார். நகரத்தில் கோட்டை ஸ்டேஷனில் இறங்கியதும், பஞ்சநாதன் குணசுந்தரனைநோக்கி "நான் என் ஹோட்டலுக்குச்சென்று விசாரணை நடக்கு மிடத்தில்வந்து உங்களைச் சந்திக்கிறேன்" என்று கூறி விட்டு, அவர்களைப்பிரிந்து போய்விட்டான். குணசுந்தர னும் பிரபுவும் நேராய் லாயர் வீட்டிற்குச் சென்றார்கள். அவருக்கு முன்பே குணசுந்தரத்தினிடமிருந்து நடந்த விஷயத்தைப்பற்றி கடிதம் வந்திருந்தது. அவர் குண சுந்தரனைக் கண்டதும் சற்றுநேரம் பேசியபின் "இது

க்கு வினை தொந்திரவு கொடுக்குமென்றே நினைக்கிறேன். நீயே கடைசியாய் அவளோடுகூடக் காணப்பட்டவனானபடியால் உன்மேல் வீண் புரளியுண்டாகாதபடி நாம் சாக்கிரதை யெடுத்துக்கொள்ளவேண்டும். இப்படிப்பட்ட கேஸுகளில் எனக்கு விசேஷ அனுபவம் கிடையாது. நான் கூறுகிறபடி செய்தால் நல்லது. அதாவது, கடம்பநாதர் என்ற லாயரைப்பற்றி நீயும் கேள்விப்பட்டிருப்பாய். அவருக்கு இத்தகைய கேஸ்களில் மிக்க பிரக்யாதியுண்டு. நான் உன்னை நேராயழைத்துப்போய் அவரிடம்விட்டு சங்கதியைக் கூறுகிறேன். நீ இக்கேஸில் உன் விஷயத்தைப்பற்றி கவனிக்கும்படி அவரை யேற்படுத்திக் கொண்டால் மிக்க நலமாயிருக்கும்" என்றார். குணசுந்தரனும் பிரபுவும் அவ்வாறே ஒத்துக்கொள்ள, உடனே மூவரும் புறப்பட்டு கடம்பநாதர் ஆபீசுக்குச் சென்றார்கள்.

கடம்பநாதர் என்னும் வக்கீல் மிக்க கூர்மையான பார்வையுடையவர்; மிகவும் அழகுவாய்ந்தவர். வந்த லாயர் கடம்பநாதருக்குச் சங்கதியாவும் கூறினார். அவர் "ஆ! தச்சுவாடி வீதி கொலைக்கேஸா? என்ன இதைப்பற்றி யாரும் நம்மைத் தேடவில்லையே யென்றிருந்தேன். ஆகவே குணசுந்தரரே! நீர் துரதிஷ்டமாய் இதில் சம்பந்தப்பட்டிருக்கிறீரோ? அன்றிரவு அக் கன்னிகையோடு வீதியில் நின்று பேசிக்கொண்டிருந்த மனிதர் நீர் தானே?" என்றார்.

குணசுந்தரன் வியப்படைந்து, "ஆம் தங்களுக்கெப்படி தெரியும்?" என்றான்.

லாயர்.—"அப்பெண்ணை உன்னிடம் படம் எழுத மாதிரிக்காக அமர்த்திக் கொண்டிருந்தாய். இப்போது நீ இதில் சம்பந்தப்பட்டதாய் தெரியவே நீதான் அம்மனி

தனு யிருக்கவேண்டு மென்று ஊகித்துக் கொண்டேன். அதைப்பற்றி யுனக்குத் தெரிந்த சங்கதி யாவும் கூறு பார்ப்போம். எவ்வளவு அற்பமானதா யிருந்தாலும் ஒன்றையும் விட்டுவிடாதே. அப்போதுதான் எப்படி நான் உனக்கு உதவி செய்வதென்று எனக்கு விளங்கும்" என்றார்.

அதன்பிறகு குணசுந்தரன் தனக்குத் தெரிந்திருக்கும் சங்கதி யாவும் விபரமாய்க் கூறினன். லாயர் பொறுமையாய் யாவும் கேட்டார். இடையில் முக்கியமான இரண்டொரு கேள்விகளமட்டும் கேட்டார். கடைசியில், "நீ அவளை விட்டுவிட்டு நேராய் ஹோட்டலுக்கே வந்துவிட்டாயல்லவா?" என்று கேட்டார். குணசுந்தரன் ஆம் என்றான்.

லாயர்.—வண்டி பேசி யேறிக்கொண்டு வந்தாயோ?

குணசுந்தரன்.—இல்லை.

லாயர்.—அக் கன்னிகையோடு செல்லும்போது வண்டியில் சென்றாயோ?

குணசுந்தரன். —ஆம். வீட்டண்டை சேர்ந்ததே வண்டியை யனுப்பிவிட்டேன்.

லாயர்.—கெட்டகாலம். அந்த வண்டிக்காரன் உன்னை அடையாளம் தெரிந்து கொண்டிருப்பானே?

குணசுந்தரன்.— இருக்கக் கூடு மென்றே நினைக்கிறேன்.

லாயர்.—நீ அவளுக்குப் பணம் கொடுக்கும் போது வீதியிலிருக்கும் இராந்தலுக் கெதிரில் தீப ஒளி நன்றாயுன் முகத்தில் வீசும்படி நின்று கொண்டிருந்தா யல்லவா?

குணசுந்தரன்.—அப்படித்தான் நினைக்கிறேன்.

லாயர் எல்லா சங்கதியும் கேட்டு முடிந்தபின் அவர் மரண விசாரணைக்கு வந்து குணசுந்தரன் பக்கமாய்

கேஸின் நடவடிக்கையைக் கவனிப்பதென்று ஏற்பாடாயிற்று. குணசுந்தரனும் பிரபுவும் தாங்கள் தங்கியிருக்கும் ஹோட்டலுக்குச் சென்றபோது அங்கு எப்பக்கமும் அந்தக் கொலையைப் பற்றியே பேச்சாயிருந்தது. ஆகையால் விசாரணை காலம் நெருங்கும் வரையில் இருவரும் வெளியில் உலவச் சென்றார்கள்.

குணசுந்தரனும் பிரபுவும் விசாரணை நடந்த விடத்திற்குச் சென்றபோது வெளியில் பெருங்கூட்டமாயிருந்தது. இருவரும் அதிக கஷ்டத்தோடு உள்ளே சென்றார்கள். பஞ்சநாதனும் அங்கு வந்திருந்தான். லாயர் கடம்பநாதர் மிகக் கூர்மையான பார்வையோடு அங்கு உட்கார்ந்திருந்தார். அவர் இவர்களை நோக்கி, "ஜனங்களுடைய ஆவல் அப்படியிருக்கிறது. இங்கிருக்கும் இத்தனை பேரில் ஐந்துபேர் கூட அக்கன்னிகையைப் பார்த்திருக்க மாட்டார்கள். அப்படி இருந்தும் தங்கள் உயிரே இதில் சிக்கிக்கொண்டிருப்பதுபோல அவளைப்பற்றிய வார்த்தைகள் ஒன்றுகூட விடாமல் கேட்க ஆயத்தமாயிருக்கிறார்கள்; உலகம் இப்படியிருக்கிறது" என்றார்.

அச்சமயம் ஒரு உத்தியோகஸ்தன் குணசுந்தரனினருகிற் சென்று, அவன் செவிகளில் ஏதோ குசு குசுவென்று கூறினான். குணசுந்தரன் உடனே அவன் பின்னாற் சென்றான். அவன் திரும்பிவந்தபோது அவன் முகம் வெளுத்து மிக்க மனங்கலங்கியவனாய்க் காணப்பட்டான்.

கோரனர் வந்தவுடனே விசாரணை யாரம்பமாயிற்று. கொலைநடந்த வீட்டின் சொந்தக்காரன் முதல் சாக்ஷியாய் விசாரிக்கப்பட்டான்.

அவன்.—"அவள் பெயர் தெய்வநாயகம். அவள் படம் எழுதுகிறவர்களுக்கு மாதிரியாய் உட்கார்ந்து சீவனத்திற்குச் சம்பாதித்து வந்தாள். எனக்குத் தெரிந்த

வரையில் மிக்க அடக்கமும் மரியாதையு முடையவள். அவளிடம் வேறு சிநேகிதராவது யாராவது வருவதே கிடையாது. அவள் யாரிடமும் பேசுவதேயில்லை. அவளுக்குக்கடிதம் ஏதுவும் வந்ததாய் எனக்குத் தெரியாது. இங்கே அவளுக்குச் சிநேகர் ஒருவருமில்லை" என்று கூறினன்.

முதல் முதல் அவளறையின் கதவண்டை இரத்தக் கறையைக் கண்ட அன்னிய நாட்டானாகிய தையற்காரன் 2-வது சாக்ஷியாய் விசாரிக்கப்பட்டான்.

அவன்.—"சனிக்கிழமை காலை நான் என் அறையிலிருந்து வெளியில் செல்லும்போது அக்கன்னிகை வசித்து வந்த அறையின் கதவின்கீழ் இரத்தம் வடிந்து வந்தது போன்ற கறை தெரிந்தது. நான் சந்தேகப்பட்டு வீட்டுக்காரரிடம கூறியபின், இருவரும் ஒரு போலீஸ்காரனையழைத்துக் கொண்டு போய் கதவைத் திறந்து பார்த்த போது அப்பெண் சவமாய்க் கிடப்பதைக் கண்டோம். அவள் என்னிடம் எப்போதும் பேசியதில்லை. வெள்ளிக்கிழமை இரவு சுமார் ஏழுமணிக்கு அவள் வெளியில் சென்றிருந்து அர்த்த இராத்திரிக்குப் பிறகு வந்தாள். உள்ளே வரும்போது அழுது கொண்டிருந்ததுபோல் தோன்றியது. கூட யாராவது வந்ததும் வராததும் எனக்குத் தெரியாது" என்று கூறினன்.

பிறகு அவ்வீதியில் காவல் இருந்த போலீஸ் சேவகன் 3—வது சாக்ஷியாக விசாரிக்கப்பட்டான்.

அவன் வீட்டுக்காரன் தன்னை வந்தழைத்ததையும் தான் கூடப்போய் கதவைத் திறந்ததையும் சவத்தைக் கண்டது முதலிய சங்கதிகளையும் கூறினன்.

அதன்பிறகு சவத்தை வந்து சோதித்த டாக்டர் 4-வது சாக்ஷியாய் விசாரிக்கப்பட்டார். அவர் சவம் அகப்

பட்ட விதமும, அதில் காயங்கள் பட்டிருந்த விதமும், அதனால் தனக்குத் தோன்றிய அபிப்பிராயத்தையும் கூறினார்.

அதன்பிறகு குணசுந்தரன் அழைக்கப்பட்டான். அவனைக் கோரனர் கேட்ட பல கேள்விகளுக்கு அவன் அக் கன்னிகை தனக்கு அறிமுகமாய் ஒரு வருடத்திற் கதிக மாச்சுதென்றும, அவளைத் தன் படம எழுதத் தான் மாதிரியா யமர்த்திக்கொண்டதாகவும, தான் தேசயாத்திரை போவதி னிமித்தமே அவளை வேலையினின்று நிறுத்தியதன்றி, அவளிடம் குற்றமொன்றும் காணவில்லையென்றும், தேசயாத்திரை சென்றிருந்தபோது லக்கூர் நகரத்தில் அவளிடமிருந்து தனக்கு ஒருகடிதம் வந்ததென்றும, அதில் அவள் தன் இருப்பிடத்தைத் தெரிவித்தாளென்றும், அப்போது அவள் நவீனபுரியி லிருந்தாளென்றும், நடந்த சங்கதிகளையெல்லாம் கூறிப்பிறகு வியாழக்கிழமை இரவு திடீரென்று இரத்னபுரியிற் கண்டதையும், அப்போது அவளோடு நடந்த சம்பாஷணை முதலிய யாவும கூறி

கோரனர்.—அவள் கலியாணம செய்து கொண்டாளென்று தெரிந்தபோது புருஷன் யாரென்று கேட்டாயோ?

குணசுந்தரன்.—கேட்டேன். அவள் கூற மறுத்துவிட்டாள்.

கோரனர்.—அது உனக்கு அதிசயமாய்த் தோன்றவில்லையா?

குணசுந்தரன்.—இல்லை. அவன் காணுடயிலங்கோ போய் விட்டானென்று அவள் கூறியதால் நான் மறுபடியதைப்பற்றி கேட்கவில்லை.

கோரனர்.—நவீனபுரியி லிருந்தபோது அவள் கலியா

ணம் செய்து கொள்ளவில்லையென்று உனக்கு நிச்சய மாய்த் தெரியுமா ?

குணசுந்தரன்.—நான் அப்படியே நம்பினேன். ஆனால் பிரமாணமாய் அப்படிக் கூறமுடியாது.

கோரனர்.—நீ அப்பெட்டியைத திறந்தபோது அதி லிருந்ததைக் கண்டவுடனே நீ திடுக்கிட்டு விட்டாயோ ?

குணசுந்தரன்.—ஆம்.

கோரனர்.—அப்போது நீ என்ன எண்ணிக்கொண் டாய் ?

குணசுந்தரன்.—தையநாயகம் கொல்லப்பட்டானெ ன்று தெரிந்துகொண்டேன்.

கோரனா.—அவனுடைய காங்களென்று எப்படி நிச்சயித்தாய் ?

குணசுந்தரன்.—ஒரு விரலில் நெருப்புப்பட்ட காயத் தின் வடுவிருந்தது. அதனால் நிச்சயித்துக் கொண்டேன்.

அச்சமயம் கடம்பநாதர் எழுந்து அடியிற் கண்டபடி கேள்வி கேட்டார்:—

இந்த கோரக்காட்சியைக் கண்டதே முதல் நீ செய்த வேலையென்ன ?

குணசுந்தரன்.—உடனே போலீஸாருக்கும், துரை ராஜப் பிரபுவுக்கும் சங்கதிதெரிவித்தேன். இன்ஸ்பெக் டர் கிரிராவை வரவழைத்து சங்கதி யாவும் கூறினேன். பிறகு துப்பறியும் ஆபீசுக்குத் தெரிவிப்பதென்றும் குற்ற வாளியைக் கண்டுபிடிக்க வேண்டியதற்கு எல்லா உதவியும் செய்வதென்றும் தீர்மானித்தோம்.

கடம்பநாதர்.—உனக்குச் சமீபத்தில் கலியாணம் நடத் தப்பட ஏற்பாடா யிருக்கிறதல்லவா ?

குணசுந்தரன்.—ஆம் ; வருகிற வியாழக்கிழமை முகூர்த்தம் வைத்திருக்கிறது.

அதன்பிறகு கடம்பநாதர் "இனி நான் உன்னைக் கேட்கவேண்டிய கேள்வி யாதொன்றுமில்லை" என்றார். அதன்பிறகு ஒரு துப்பறியும் உத்தியோகஸ்தர் விசாரிக்கப்பட்டார். அவர் நவீனபுரியில் குணசுந்தரனைக் கொல்ல முயன்ற தம்புசாமி யென்பவனைப்பற்றி அங்கு விசாரித்ததாகவும், குணசுந்தரன் அதைவிட்டு வந்த இரண்டு வாரம் கழித்து அவன் ஒருவனை யடித்ததற்காகத் தண்டிக்கப்பட்டு இன்னும் சிறைச்சாலையிலேயே யிருப்பதாகத் தெரியவந்ததென்றும் கூறினார்.

இதனால் தம்புசாமி இதில் சம்பந்தப்படவேயில்லை யென்று ஐயமறத் தெரிந்துவிட்டது. இச்சாட்சி முடிந்த பின் பஞ்சநாதன் சாக்ஷியாய் விசாரிக்கப்பட்டான்.

பஞ்சநாதன் தானும் சித்திரம் எழுதும் தொழிலுடையவனென்றும், குணசுந்தரனுக்கு நண்பனென்றும், முதல் முதல் தையநாயகியை யவனுக்கு அறிமுகமாக்கி வைத்தது தானே யென்றும், அவள் எப்போதும் அடக்கமுடையவளாய் மரியாதையாகவே யிருந்தாளென்றும் கூறினான்.

கோரனர்.—அவள் ஏன் நீக்கப்பட்டாள்?

பஞ்சநாதன்.—என் நண்பனான குணசுந்தரன் திடீரென்று தேசயாத்திரை போகத் தீர்மானித்தான்.

கோரனர்.—ஏன் திடீரென்று அப்படி தீர்மானம் செய்தது?

பஞ்சநாதன்.— இக்கேள்வி இக்கேஸுக்குச் சம்மந்தப்பட்டதல்ல வென்று நினைக்கிறேன். அது குணசுந்தரனுடைய சொந்த சமாசாரம்.

கோரனர்.— அது நான் கேட்ட கேள்வியைப் பொருத்ததே ஆகையால் மறுபடியும் கேட்கிறேன். ஏன் திடீரென்று யாத்திரைபோக யோசனை வந்தது?

பஞ்சநாதன் சற்றுநேரம் தடுமாற்றமடைந்தான்.

கோரனர்.—ஏன் யாத்திரைபோகத் தீர்மானித்தீர்கள். விடைகூறு.

பஞ்சநாதன்.—நானும் என் நண்பனும் சம்பாஷித்த ஒரு விஷயத்தின் முடிவாய் அத்தீர்மானம் உண்டாயிற்று.

கோரனர்.—அச் சம்பாஷணை எதைப்பற்றி ?

பஞ்சநாதன் மறுபடி மௌனமாய் விழித்தான். கோரனர். "அது இறந்த கன்னிகையைப்பற்றியா ?" என்றார்.

பஞ்சநாதன் ஆம் என்றான்.

கோரனர் "அப்படியானால் நீ கூறத் தடுமாறுவதை நோக்க உன் நண்பனை குணசுந்தரன் அவள்மேல் காதல் கொண்டு விடுவானென்று பயந்து அவனை யவளிடமிருந்து பிரித்துவிட அப்படிச் செய்தாயென்று நினைக்கிறேன். என் உத்தேசம் சரிதானே ?" என்றார்.

பஞ்சநாதன் மறுபடியும் சற்று மௌனமாயிருந்தான். அவன் முகத்தில் அதிக மனக்குழப்பம் உண்டாயிருக்கும் குறி தோன்றியது. கடைசியில் " அப்படித்தான் " என்றான்.

கோரனர்.—அப்படியானால் குணசுந்தரன் அக்கன்னிகைமேல் காதலா யிருந்தானென்று உனக்கு நிச்சயமாய்த் தெரியும்.

பஞ்சநாதன்.—ஆம் நிச்சயமாய்த் தெரியும்.

கோரனர்.—அக் கன்னிகை நவீனபுரிக்குப் போயிருக்கிறாளென்று குணசுந்தரனுக்குத் தெரியுமென்பதை நீ யறிவாயா ?

பஞ்சநாதன்.—அவர்களுக்குள் கடிதப்போக்கு வரவுண்டென்று எனக்குத்தெரியும். ஆனால் தான் அவளைப்

பார்க்க நவீனபுரிக்குப் போவதாய் அவன் எனக்குக் கூறவில்லை.

கோரனர்.—உனக்கு அது தெரிந்திருந்தால் அப்படிச் செய்யவொட்டாமல் தடுத்திருப்பாயோ?

பஞ்சநாதன்.—என்ன செய்திருப்பேனோ தெரியாது. ஆயினும் பெரும்பாலும் அவர்களைச் சந்திக்கவொட்டாமல் தடைசெய்ய முயற்சி செய்திருப்பேன் என்றே நினைக்கிறேன்.

கோரனர்.—அவள் இரத்னபுரிக்குத் திரும்பிவந்த சங்கதி உனக்கெப்படி தெரியும்?

பஞ்சநாதன்.—குணசுந்தரன் தான் அவளைக் கண்டதாய் அவன் வீட்டில் கூறியபோதுதான் தெரியும்.

கோரனர்—அவன் அவளைச்சந்தித்ததாய்க் கூறக் கேட்டபோது சுபாவமாகவே நீ அதிக வியப்படைந்தாய் போலும்.

பஞ்சநாதன்.—ஆம்.

கோரனர்.—அதைக்குறித்து அவனிடம் ஏதாவது பேசினாயோ?

பஞ்சநாதன்.—முக்கியமாய் இன்னும் பத்துநாளையில் கலியாணம் செய்துகொள்வதாயிருக்கும்போது, இன்னொருதரம் அவளோடு சிக்கில் அகப்பட்டுக்கொள்ள வேண்டாமென்று எச்சரிக்கை செய்தேன்.

கோரனர்.—நீ இன்னொருதரம் என்று கூறியதைநோக்க இதற்கு முந்தியொருதரம் அவன் அவளோடு சிக்கில் அகப்பட்டுக்கொண்டானென்றுதானே நாம் பொருள் படுத்திக் கொள்ளவேண்டும்?

பஞ்சநாதன் மறுபடி விடைகூறுமுன் சற்று நிதானித்துப் பிறகு, "நான் அந்த 'இன்னொருதரம்' என்ற வார்த்தையை வாபீசு பெற்றுக்கொள்ளுகிறேன். நான்

அப்படி அர்த்தப்படவேண்டுமென்று நினைக்கவில்லை என் கருத்து தன்னிடம் முன் இருந்த ஒரு அன்னியநாட்டுக் கன்னிகையோடு இரத்னபுரிவீதிகளில் நடு இராத்திரிக்குப் பின் அவன் சவாரி செய்துகொண்டிருந்தானென்பதை யவனை மணம்புரியவிருக்கும் கன்னிகைகேட்கப் பிரியப் படமாட்டாளென்று அவனுக்கு அறிவித்தேனென்பதே" என்றான்.

இதைக்கேட்ட குணசுந்தரன் "ஓ கடவுளே! இத் தனைவருடங்களாய் என்னிடம் சிநேகிதனென்றிருந்தானே, இவனை! நான் பூரணமாய் நம்பியிருந்தேனே!" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான்.

அதன்பிறகு கோரனர் "இவ்விசாரணையை அடுத்த புதன்கிழமை வரையில் ஒத்திவைக்கிறேன். அப்படிச் செய்வதற்குத் தக்க காரணங்கள் இருக்கின்றன. அவை களை ஜூரார்கள் தலைவனுக்குக் கூறியிருக்கிறேன்" என்றார். விசாரணை முடிந்ததாகையால் சபை கலைந்துவிட்டது.

---

## 8-வது அத்தியாயம்.

### லாயர்வீட்டில் ஆலோசனை—வீட்டில் ஆலோசனை—உத்தமமனைவி—கொலையைப் பற்றிய பிரகாரங்கள்.

முன் அத்தியாயத்தினிறுதியில் கூறியபடியே அன்று விசாரணை முடிந்ததும் யாவரும் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டார்கள். குணசுந்தரனும், பிரபு, லாயர், கடம்பநாதர், இவர்கள் வீதிக்கு வந்தபோது, பஞ்ச நாதன் இவர்களுக்காக அங்கு காத்துக்கொண்டிருந்தான். அவன் குணசுந்தரனைக் கண்டதே மிகவும் மனக்குழப்ப மடைந்த பார்வையோடு அருகில் வந்து, "குணசுந்தரம்! அவர்கள் என்வார்த்தைகளை யம்மாதிரி வெளியில் இழுத்து

விட்ட பிறகு என்ன சொல்வதென்றும் எனக்குத் தோன்ற வில்லை" என்றான்.

குணசுந்தரன் கடுகடுப்பாய். "இனி யொன்றுமே தயவுசெய்து கூறவேண்டாம். இதுவரையில் கூறியவை களே போதும்" என்று சொல்லிவிட்டு பிரபுவையும் லாயரையும் நோக்கி, "வாருங்கள் போவோம்; லாய ரவாள்! நேராய்த் தங்கள் ஆபீசுக்குச் செல்வோம்" என்றான்.

லாயர், "ஆம் ஒரு வண்டிபார்ப்போம். அப்படிச் செய்வதுதான் நலம். நான் இதைப்பற்றி யுன்னிடம் கொஞ்சம் பேசவேண்டியதிருக்கிறது" என்றார்.

அவ்வாறே ஒருவண்டி பேசிக்கொண்டு மூவரும் ஏறிக்கொண்டார்கள். பஞ்சநாதன் அங்கேயே தங்கி விட்டான். குணசுந்தரன் முகம் மிகவும் வெளுத்திருந் தது. தையநாயகி விஷயத்தில் ஜீவகாருண்யம்வைத்து பட்சம்காட்டி நடந்துகொண்ட காரணத்தால் இந்த விஷ யத்தில் தன்மேல் யாவர்க்கும் சந்தேகம் உண்டாயிற் றென்று அவன் மனதிற்பட்டது.

லாயர் வீட்டிற்குள் சென்றதும், மூவரும் அவர் ஆபீ ஸறையில் உட்கார்ந்தார்கள். லாயர் உடனே கதவை மூடிவிட்டு குணசுந்தரனை நோக்கி,

"நண்பனே! இப்போதுன் அபிப்பிராயம் என்ன?" என்றார்.

குணசுந்தரன் பயமாவது தடுமாற்றமாவது அடை யாமல், "இக்கொலைக்கு நானேகாரணம் என்பதாய் யாவரும் அபிப்பிராயப்படுகிறார்களென்று நினைக்கிறேன்" என்று இயம்பினான்.

லாயர்.—"நீ அதைச் சகித்துக்கொண்டுதா னிருக்க வேண்டும் என்று அஞ்சுகின்றேன். அந்தப் பஞ்சநாதன்

என்ற மனிதன் கூறிய சாக்ஷியத்தின் மாதிரி அனுவகிய மாய் உனக்குப் பிரதிகூலமாயிற்று" என்றார். அப்போது தேவராஜ்ப்பிரபு கோபத்தோடு,

"அவன் கெட்ட எண்ணமுள்ள மோசக்காரன். குண சுந்தரம்! நான் அவனை நம்பவில்லையென்றும் அவன் உன் மேல் துர்எண்ணம் கொண்டிருப்பதாய் எனக்கு நிச்சமாய்த் தெரிகிறது என்றும் நேற்று கூறினேனல்லவா?" என்று கூறிவிட்டு லாயரைநோக்கி, "நண்பரே! அப்படியும் நமது குணசுந்தரன் அவனுக்கு எவ்வளவோ நன்மை செய்திருக்கிறான். சிலவருடங்களாய் அந்தப்பயலைத் தன் சவரக்ஷணையில் வைத்துக்கொண்டிருந்ததோடு அவனுக்குக் கொஞ்சகாலத்திற்கு முன்பே தேசயாத்திரை செய்து வரும்படிப் பொருள் உதவி முதலிய எல்லா உதவியும் செய்திருக்கிறான். கடைசியில் அதன் பலனைக்கண்டீரா?" என்றார்.

லாயர்.—"என்போல் தாங்கள் மனிதசுபாவத்தைப் பார்த்திருந்தால் எதற்கும் அதிசயப்பட மாட்டீர்கள். எவ்வளவு அதிகமாய் நன்மை செய்கிறோமோ, அவ்வளவு அதிகமாய்த் தீமையே பிரதிபலனாய்க்கிடைக்கும்" என்று கூறிவிட்டுக் குணசுந்தரனை நோக்கி, "நீ எப்போதாவது இறந்துபோன கன்னிகைமேல் காதல்கொண்டதுண்டா?" என்று வினவினார்.

குணசுந்தரன்.—"ஒருபோதுமில்லை. யார் அப்படி கூறினாலும் அது பொய்யே" என்றான்.

லாயர்.—நீ அக்கன்னிகையை அவள் வீட்டில்விட்டு வந்தபோது, அங்கே யாரையாவது சந்தித்தாயா?

குணசுந்தரன்.—ஒரு பூதருமில்லை. வீதியில் ஒருவருமில்லை.

லாயர்.—ஹோட்டலுக்குத் திரும்பியபோது காவல்

காரன் கதவைத் திறந்ததாய்க் கூறினையல்லவா, அவ னோடு என்ன பேசினாய்?

குணசுந்தரன்.—அவன் கதவைத்திறந்தபோது, நான் நெடுநேரமாய்விட்டது போலிருக்கிறது என்று என் கெடியாரத்தைப்பார்த்து, ஏன் பன்னிரண்டரைமணியாய் விட்டது என்று கூறினேன்.

லாயர்.—அவன் நல்ல கவனசத்தியுடையவனா யிருந் தால் அதை மறந்திருக்கமாட்டான். இது ஒரு முக்கிய மான விஷயம்.

அப்போது தேவராஜுலுப் பிரபு லாயரைநோக்கி, "குணசுந்தரன் அவளைக்கொன்றதாய்க் குற்றம் சாட்டப் படுவானென்று நினைக்கிறீரா?" என்றார்.

லாயர்.—அப்படி சாட்டப்பட்டால் அது அதிசய மல்ல. இதில் இருக்கும் விஷயங்களை நாம் கவனிப்போம். சில மாதங்களுக்கு முன் குணசுந்தரன் என்னும் வாலிபன் இக்கன்னிகையைப் படம் எழுத மாதிரியாய் அமர்த்திக் கொண்டான். எழுதியான பிறகும் அவள் தனக்கு அவசியமல்லாதிருக்க அப்புறமும் அவளைத் தன்னிடமே வைத்துக் கொண்டிருந்தான். அவன் அவளிடம் அதிக மாய் நெருங்கியிருந்தபடியால், அவன் சினேகிதன் அவனை யெச்சரிக்கை செய்யவேண்டியதா யிருந்தது. அதனால் சினேகிதர் இருவரும் திடீரென்று புறப்பட்டு தேசயாத் திரை சென்றார்கள். அக்கன்னிகை நவீனபுரிக்கு அவர் களைப் பின்தொடர்ந்து சென்றாள். பொறு பொறு குண சுந்தரம்! நீ பேசாமல் முழுதும்கேள். இவ்விஷயத்தை நான் உனக்கு விரோதியாயிருந்தால் எப்படி கூறுவேனோ அப்படி கூறுகிறேன் என்று எண்ணிக்கொள். 'அந்தப் பெண் நவீனபுரிக்குச் சென்றாள். நான் அவள் உன்னைப் பின்தொடர்ந்து வந்தாளென்று கூறுகிறேன்.' அவள்

உனக்குக் கடிதம் எழுதினுளென்றும், அவளை சமீபாதம உனக்கு வேண்டாமென்று எச்சரிக்கைசெய்த நண்பனைத் தனியே போகும்படி யனுப்பிவிட்டு நீமட்டும் நவீனபுரிக்குச் சென்று அப்பெண்ணைச் சந்தித்தாயென்றும் ருசுவு செய்யக்கூடும். நீ அந்த எண்ணங்கொண்டு போக வில்லையென்று வாதிக்கலாம். ஆனால் அவளை யங்கு கண்டதையும், அவளோடு ஹோட்டலில் சாப்பிட்டதையும், பிறகு அவளை நாடகத்திற்கு அழைத்துக்கொண்டு போனதையும் மறுக்கமுடியாது.

குணசுந்தரன்.—ஆனால் அவள் தாயார் கூடவேயிருந்தாள்.

லாயர்.—அது அநுவசியமான சங்கதி. அதன் பிறகு இரத்னபுரிக்குவந்தாய். நாட்டில் சென்று தேவராஜப் பிரபுவின் பகளை மணம்புரிய ஏற்பாடுசெய்துகொண்டாய். வைதயநாயகியும் இரத்னபுரிக்குவந்துவிட்டாள். ஏன்? உனக்காகத்தான். ஆனால் நீ அவளை முகமில் காணவில்லை. அதனால் அவள் துயரமடைந்தாள். என்ன காரணம்? உனக்குக் கலியாணமாகப் போகிறதென்று அவளுக்குத் தெரிந்தது.

குணசுந்தரன்.—அது உத்தேசமதானே. அதல்லாமல் அவளுக்கு இடையில கலியாணமாய்விட்டிருக்கிறது.

லாயர்.—ஆம். ஆனால் யாரை அவள் மணந்துகொண்டாள்? இன்னொருவன் நான் என்று முன்வராதவரையில், ஏன் உன்னைத்தான் மணந்துகொண்டாளென்று நினைக்கலாகாது?

இதைக்கேட்ட குணசுந்தரன் ஆத்திரத்தோடு திடுக்கிட்டெழுந்து, “ஐயோ கடவுளே! என்ன ஐயா? அவளைக் கலியாணம்செய்துகொண்டிருந்தேனென்று நீரே நம்புகிறதாகவா கூறுகிறீர்?”—என்றான்.

லாயர் எப்போதும்போல் சாந்தமாகவே, "நான் எதையும் நம்பவில்லை உன்மேல் குற்றம் சாட்டுகிற கட்சியார் அப்படித்தான் உத்தேசிப்பார்கள். இனி, கதையை முடிக்கிறேன். நீ கலியாணஞ்செய்துக் கொள்ளப்போகிறதற்காக அவள் வியாகுலமாயிருக்கிறாளென்று கூறினேனல்லவா. அது சுபாவமே. பிறகு நீ நகரத்திற்கு வருகிறாய். நாடகத்திற்குப் போகிறாய். பிறகு அர்த்தராத்திரியில் தற்செயலாய் அதே கன்னிகையை வீதியில் சந்திக்கிறாய், நடுஇராவில்—தற்செயலாய்—அதைக்கவனி. அது தற்செயலாய் நேரிட்டதாய்த் தோன்றுகிறதா கவனித்துப் பார். எந்த ஜனர்களுக்காவது அது தற்செயலென்று நம்பிக்கை புண்டாகும்படிசெய்ய உன்னால் முடியுமென்று நினைக்கிறாயா? இருக்கட்டும், அப்புறம் கவனிப்போம். அக்கன்னிகை அபாயமாயிருக்கிறாள். நீ அவளை வண்டியிலேற்றிக்கொண்டு அவள் வீட்டண்டை சென்றாய். நீ அவளை புன் கணவன் பெயரென்னவென்று கேட்டதற்கும் அவள் கூற மறுத்ததற்கும் மற்றபடி உங்களுக்குள் நடந்த சம்பாஷணைக்கும் உன்வாய்மொழியன்றி வேறே ருசுவில்லை. நீ அவளை வீட்டிற்கு வெளியிலேயே விட்டுவந்த போது வீதியில் யாருமில்லை. ஆகையால் நீ வீட்டிற்குள் அவளோடு செல்லவில்லையென்று பிரமாணிக்கமாய்க்கூற சாக்ஷியில்லை. ஆனால் நீ அவளோடு பேசிக்கொண்டிருக்கையில் மட்டும் ஒரு போலீஸ்காரன் நன்றாய்ப் பார்த்திருக்கிறான். குணசுந்தரனே! இப்போது நீயே இந்த விஷயங்களை யெல்லாம் நன்றாய்ச் சிந்தித்துப்பார். அப்போது பொது ஜனங்கள் உன்மேல் சந்தேகங் கொள்வதற்கு அவர்கள் மேல் குற்றம் நினைக்கலாமா பார்?" என்றார்.

குணசுந்தரன்.—தாங்கள் கூறியமாதிரி பார்த்தால்

குற்றமில்லைதான். ஆனால் நான் கூறிய விஷயங்களுக்கு அதிகமாய் நான் அதில் சம்மந்தப்படவில்லையென்று ருசுப்படுத்த உண்மையாகவே முடியுமல்லவா?

லாயர்—அதுதான் நாம் செய்யவேண்டிய கடமை. ஆனால் அதில் கஷ்டமிருக்கிறது. நீ கூறுகிறவைகளுக்கு உன்னைத்தவிர வேறு சாக்ஷியில்லை. உறுதியாய் உனக்கு அனுகூலமான விஷயங்கள் இரண்டிருக்கின்றன. அந்தக் காரங்கள் உன்னிடம் வரும்போது நீ தேகூரில் இருக்கிறாய். அந்தப் போலீஸ்காரன் உன்னைக்கண்டதற்கும், நீ ஹோட்டலுக்குவந்து சேர்ந்ததற்கும் இடையிலுள்ள காலத்தை நோக்கும்போது அக்குற்றத்தைச் செய்ய உனக்குப் போதுமானகாலமில்லை. இப்போது நாம்செய்ய வேண்டியதென்னவென்றால் இரத்னபுரிக் கோட்டை ஸ்டேஷனிலிருந்து அப்பெட்டியை யனுப்பிய மனிதனைக் கண்டு பிடிக்கவேண்டியது. ஹோட்டல் காவல்காரன் சாக்ஷியத்தைச் சரியாய் விசாரித்து வைத்துக்கொள்ளவேண்டியது. இதற்கிடையில் நீ தேகூருக்குச்சென்று என்னிடமிருந்து சங்கதிவருந்தனிலும் வீட்டைவிட்டுக் வெளிகிளம்பாதே, பத்திரம்.

குணசுந்தரன்.—"நான் தங்களை யொன்றுமட்டும் கேட்கிறேன். தங்கள் மனதில் நான் குற்றம் செய்தவனாய்த் தோன்றுகிறதா, நிரபராதியாய்த் தோன்றுகிறதா? உண்மையாய்க் கூறவேண்டும்" என்றான்.

லாயர்.—"நீ நிரபராதியென்றே நான் நம்புகிறேன். நான் அப்படியே ருசுப்படுத்த எத்தனம் செய்வேனென்று நீ நிச்சயமாய் நம்பலாம்" என்றார்.

அன்றுமாலை தேவராஜப்பிரபுவும் குணசுந்தரனும் இரயிலேறி தேகூருக்குச்சென்றார்கள். குணசுந்தரன்மனதில் மிக்க வியாகூலம் உண்டாய்விட்டது. நன்மை செய்

யப்போய் சந்தர்ப்ப சாக்ஷியத்தால் நமக்கு பிராணபத்து வந்துவிட்டதென்று அவன் மனதிற் பட்டுவிட்டது. பிரபு அவனுக்குத் தைரியம் கூறினார்.

குணசுந்தரன் அவரைநோக்கி "நான் ஒரு விசேஷ சங்கதி தங்களிடம் பேசவேண்டும். அது என் கலியாணத்தைப்பற்றியது. அது மங்களாம்பாளுக்கு மிக்க வியாகூலமாயிருக்கும். எப்படியும் என்மேல் இக்குற்றம் சாட்டப்படும் என்று தெரிகிறது. ஆகையால நான் நிரபராதியென்று ருசுவாகுநதனிலும என் கலியாண ஏற்பாடு நடவாததாகவே நினைக்கவேண்டும. இதுதான் நான் தங்களைப் பிரார்த்தித்துக்கொள்வது. என்றால் மற்றபேருக்கு அவமானம் நேரிடலாகாது" என்றான்.

இதைக்கேட்ட பிரபு, "சேசே! இதென்னயோசனை அவள் உனக்கு மனைவியென்று எப்போது என்வாக்கால் கூறிவிட்டேனே, எப்போது நீயும் அவளை மனைவியாகவும் அவள் உன்னைக் கணவனாகவும் அங்கீகரித்துக் கொண்டீர்களோ, அப்போதே கடவுள் முன்னிலையில் அவள் உன் மனைவியாய் விட்டாள். உன் சுகதுக்கம் அவளுடைய சுக துக்கமே. உனக்குச் செல்வம் வந்தால் எப்படியோ அப்படியே உனக்குத்துயாம வந்தபோதும் உன்கூட இருந்து உனக்குத் தேறுதல் செய்யவேண்டியது அவள் கடமை. நீ நிரபராதியென்று அவள் நன்றாய் அறிவாள்" என்றார்.

குணசுந்தரன்.—அது எனக்குத் தெரியும். எனக்கு அவமானம் நேரிடும்போது அவள்பெயரும்கூட வெளிக்கு வரும்படி செய்வது நியாயமல்லவென்று நினைக்கிறேன்.

பிரபு.—உனக்குப் பிரியமிருந்தாலும் இல்லாவிட்டாலும் உன் பெயரோடு அவள் பெயர் வெளிக்கு வந்துதான் தீரும். நானே நீ நிரபராதியென்றும் நம்பி, அதனால் வரும் கௌரவ அகௌரவங்களை ஏற்றுக்கொள்ளச்

சித்தமாயிருக்கும்போது மங்களாம்பாள் அப்படிச் செய்யத் தடையென்ன இருக்கிறது ?

குணசுந்தரன்.—மங்களாம்பாள் உத்தம நடையுடையவளென்பது எனக்குப் பூரணமாய்த் தெரியும்.

பிரபு.—ஆகையால் நீ அவளைக்கண்டு இவ்விஷயத்தை அவளோடு கலந்து பேசுந்தனிலும் ஒரு தீர்மானமும் கொள்ளாதே. அவள் இன்னவிடை கொடுப்பாளென்று எனக்குத் தெரியும்.

குணசுந்தரன்.— என் மேல் இவ்வளவு நம்பகம் வைத்ததற்குக் கடவுள் தங்களை ஆசீர்வதிப்பாரென்று பிரார்த்திக்கிறேன். ஆயினும் நான் அதற்கு அவ்வளவு பாத்திரவானல்லவென்று அஞ்சுகிறேன்.

பிரபு.—எனக்கு உன் தந்தை முதற்கொண்டே தெரியும். நீ அப்படிப்பட்ட கௌரவத்தாழ்வான காரியத்தை ஒருபோதும் செய்யமாட்டாயென்று எனக்குத் திடமாய்த் தெரியும். நாம் எந்த விதத்திலாவது கடம்பநாதர் கூறியபடி அப்பெட்டியை அனுப்பிய ஆசாமியைக் கண்டுபிடிக்க வேண்டும். கடம்பநாதர் மகா சூக்ஷ்மபுத்தியுடையவர். அவர் நமக்குக் கிடைத்தது நமது நற்காலமே.

இவர்கள் வீடுவந்து சேர்ந்ததே இன்ஸ்பெக்டர் கிரிராவும் அங்குவந்தார். அவரும் இரத்தினபுரியிலிருந்து வந்தார். குணசுந்தரன் அவரைக் கண்டதும், " இன்ஸ்பெக்டர் ! விசாரணை நடந்தபோது சாக்ஷிகள் கூறியதையெல்லாம் கேட்டீரா?" என்றான்.

கிரிராவ்.—ஆகா கேட்டேன்.

குணசுந்தரன்.—அதிலிருந்து ஏதாவது ஒரு தீர்மானமீ உனக்குள் ஏற்பட்டிருக்குமல்லவா ?

கிரிராவ்.—ஆம், ஐயா.

குணசுந்தரன்.—நான் புதவாரம் வரையில் வெளியில்

புறப்படமாட்டேன். அன்று விசாரணைக்கு வரவேண்டும்.

கிரிராவ்.—சரி. தங்களிடம் ஒரு சங்கதி கூறவேண்டுமென்று எனக்குப் பிரியம்.

குணசுந்தரன்.—அதென்ன கூறும்.

கிரிராவ்.—"தாங்கள் நிரபராதியென்று எனக்கு நன்றாய்த் தெரியும். யார் என்ன கூறினாலும் நான் நம்பமாட்டேன்" என்றான்.

குணசுந்தரன்.—" நீர் கூறிய மொழிகளுக்காக நான் எவ்வளவோ வந்தனமுடையவனாயிருப்பேன். நிரபராதியைக் கடவுள் காப்பாற்றுவார்" என்றான்.

வீட்டிலுள்ள ஸ்திரீகள் குணசுந்தரன் திரும்பிவந்ததைக் கண்டதே, அவர்களுக்குண்டான சந்தோஷம் இயம்பத்தரமானதல்ல. அவன் தாயார், "குழந்தாய்! என்ன நடந்தது? என்ன சங்கதி கொண்டுவந்தாய்?" என்றாள். கிருஷ்ணபாய் "நீ எப்போது வருவாயோவென்று ஆவலோடு பார்த்துக்கொண்டிருந்தோம்" என்றாள். மங்களாம்பாள் மிக்க ஆவலோடு அவனையுற்று நோக்கிக்கொண்டேயிருந்தாள்.

ஆரைராஜப்பிரபு "இன்னம் ஒரு தீர்ப்பும் கூறப்படவில்லை. விசாரணை புதன்கிழமை ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது" என்றார்.

மங்களாம்பாள் "நீங்கள் மறுபடியும் போகவேண்டுமென்று தெரிகிறது. ஏன் அவர்கள் உடனே அதை முடிவு செய்துவிடக்கூடாது?" என்றாள்.

குணசுந்தரனுக்குக் காரணம் தெரிந்திருந்தும் அவர்களுக்குக்கூற தைரியமில்லை.

பிரபு "அவர்கள் இன்னம் ருசுவு தேடிக்கொண்டிருக்கிறார்கள். இப்போது அந்த விஷயம் பெரிய மர்மத்தில்

இருக்கிறது. அது வெளிவரும் வரையில் ஒரு தீர்ப்பும் கூற முடியாது" என்றார்.

குணசுந்தரன் தாயார்.—"பஞ்சநாதன் எங்கே? அவனை எங்கே விட்டீர்கள்?" என்று வினவினாள்.

குணசுந்தரன்.—"கச்சேரிக்கு வெளியில் அவனைப் பிரிந்து விட்டோம். இராத்திரிக்கு எங்கே தங்குகிறானோ எனக்குத் தெரியாது" என்றான்.

அவன் ஏதோ விகல்பமின்றி கூறுகிறவன்போல மிக்க சாமர்த்தியமாய்க் கூறினாலும், மங்களாம்பாள் மனதில் மட்டும் இவனுக்கும் பஞ்சநாதனுக்கும் ஏதோ மனஸ்தாபம் நேர்ந்திருக்கிறதென்று தோன்றியது. என்றாலும் அவள் அதைப்பற்றி ஒன்றும் கூறவில்லை.

அன்று இரவு தேவராஜப்பிரபு தன் மாளிகைக்குச் செல்ல வண்டியில் ஏறும்போது, குணசுந்தரனைத் தனியாய் அழைத்து, "நீ தைரியத்தை விட்டுவிடாதே. உனக்கு அனேக நண்பர்களிருக்கிறார்களென்பதையும், அவர்களில் ஒருவனாகிய நான் அவ்வளவாய்க் குறைந்தவனல்லவென்பதையும் நினைவில்வை. ஏதாவது விசேஷம் நேரிட்டால் தட்சணம் எனக்கு ஆள் அனுப்பினால் நான் உடனே வந்துவிடுவேன். பெண்டுகளுக்குக் கூடியவரையில் மனக்குழப்பம் உண்டாகாதவண்ணம் நடந்துகொள்" என்றார்.

குணசுந்தரன்.—"நான் ஒருபோதும் அப்படிச்செய்ய மாட்டேனென்று தாங்கள் பூரணமாய் நம்பியிருக்கலாம்" என்றான்.

அதன் பிறகு தேவராஜப் பிரபு வண்டியேறிக் கொண்டு தன் மனைக்குச்சென்றார்.

இரவு போஜனம்செய்து முடிந்தபின் மங்களாம்பாள் குணசுந்தரனை நோக்கி, "தாங்கள் எதையோ என்க்குக் கூறாமல் மனதில் மறைத்து வைத்துக்கொண்டிருக்கிறீர்

கள். அப்படிச் செய்யவேண்டாமென்று கோருகிறேன். நான் தங்களை எவ்வளவு காதலித்திருக்கிறேனென்பது தங்களுக்குத்தெரியும். தங்கள் சுகத்தையும் துன்பத்தையும், இரண்டையும் நான் சமமாய் அனுபவிக்க வேண்டியவள். தாங்கள் என்னிடம் நம்பிக்கைவைத்து யாவையும் எனக்குக் கூறலாகாதா ? " என்றாள்.

குணசுந்தரன்.—"நீ அறியவேண்டியதிருந்தால் உனக்குக் கூறாமலிருக்கமாட்டேன். காலையில் எல்லா சங்கதியும் உனக்குக் கூறுகிறேன். அதன்பிறகு உன் யோசனையைக் கூறுவாய் " என்றான.

அன்று இரவு குணசுநதரன் என்ன பாடுபட்டும அவனுக்கு நித்திரையே வரவில்லை. நெடுநேரம படுக்கையில் புரண்டுகொண் டிருநதான். பிறகு எழுநது தன் வாசிக சாலைக்குச சென்று விடியுமட்டும வாசித்துக் கொண்டிருநதான். மறுநாள் காலையிலெழுநது நிதயகடன்களை முடித்துக்கொண்டு தபாலுக்கு எதிர்பார்த் திருநதான். காலை ஒன்பதரை மணிக்குத தபால்வநதது. அதில் ஒரு தினசரி பத்திரிகை யிருந்தது. குணசுநதரன் அதிக ஆவலோடு அப்பத்திரிகையை வாசிக்கத் தொடங்கினான். அதில் தையநாயகியின் கொலையைப் பற்றி

"தச்சுவாடி வீதிக்கொலை
அபூர்வமான ருசு"

என்று தலைப்பிட்டு சிலவிஷயங்கள் வரையப்பட்டிருநதன. அதில் என்ன எழுதியிருக்குமென்று அவனுக்குத் தெரியும். தைரியத்தோடு அதை வாசித்தான். அதில் முழுதும் இவனையே குற்றவாளியென்று குறிப்பாய்க் காட்டியிருநதது. அவன் இரண்டாநதரம் அதை வாசித்துக் கொண்டிருக்கையில் மங்களாம்பாள் வநது கதவைத் தட்டினாள். குணசுந்தரன் உடனே கதவைத் திறந்து

அவனையுள்ளே வாவென்றான். உள்ளே வந்த மங்களாம்பாள் அவனை நோக்கி "நான் தங்களைத் தேடிக்கொண்டிருந்தேன்" என்றாள். அவன் அதிக வியாகூலத்தோடிருக்கிறான் என்று அவளுக்குத் தெரியும். அவனுக்குத் தன்னாலியன்றமட்டும் தேறுதல் கூறவேண்டுமென்றே அவள் அங்குவந்தாள்.

குணசுந்தரன் தன் காதலியை நோக்கி, "மங்களம்! நான் எல்லாவற்றையும் உன்னிடம் ஒளிக்காமல் கூறவேண்டும். பத்திரிகையில் எழுதியிருப்பதைப் பார்த்தாயா?" என்றான்.

மங்களாம்பாள்.—இல்லை. நான் பார்க்க வேண்டியதில்லை. பார்த்தால் என்புத்தி ஒருசமயம் சபலித்துவிடும். ஆகையால் தாங்கள் கூறுவதையே நான் நம்பிக்கொண்டிருக்கவேண்டும் என்பதே என் எண்ணம்.

குணசுந்தரன்.—அத்தகைய குணத்திற்காக கடவுள் உனக்கு அசீர்வாதம் செய்வார். ஆயினும் இச்சந்தர்ப்பத்தில் அன்னியர் என்ன கூறுகிறார்களென்பதையும் நீ அறியவேண்டும். ஆதலால் இப்பத்திரிகையிலிருப்பதை வாசித்துப்பார். அப்போதுதான் விவகாரம் இருக்கிற நிலைமையுனக்குத் தெரியும்.

மங்களாம்பாள் அப்படியேயாகட்டுமென்று பத்திரிகையை வாசித்தாள். கடைசியில் பத்திரிகையை மடித்து அவன் எதிரில் வைத்துவிட்டு, "தாங்கள் கூறியதைப் பூரணமாய் நம்புகிறேன் என்று கூறினேன். அதையே இப்போதும் கூறுகிறேன். இதைப்பற்றி உலகத்தார் என்ன கூறினாலும் நான் தங்களிடத்தில் வைத்திருக்கும் பக்தி விசுவாசங்களில் எள்ளளவு வித்தியாசமும் உண்டாகாது" என்றாள்.

குணசுந்தரன்.—நீ என்னிடத்தில் வைத்திருக்கும் நம்

பிக்கைக்கு கடவுளை வாழ்த்துகிறேன். நேற்று நான் உன் தந்தையிடம் ஒரு சங்கதி கூறினேன். அதாவது இந் தக்கேஸில் நான் நிரபராதியென்று ருசுவாகும் வரையில் நமது கலியாண ஒப்பந்தத்தை நீக்கி வைக்கலாம் என்று கூறினேன்.

மங்களாம்பாள்.—நான் ஒருபோதும் அதற்கு ஒப்ப மாட்டேன். நான் கடவுள் முன்னிலையில் உமமைக் கண வனாய் ஏற்றுக்கொண்டபோது க்ஷேமகாலத்தில் மட்டும் உம்மோடு சமமாகமா யனுபவிப்ப தென்றல்ல. நன்மை யிலும் தீமையிலும் உமக்குத் துணையா யிருப்பதற்கே. என்ன வந்தாலும வரட்டும் நான் உம்மைக் கைவிடமாட் டேன். மறுபடி தயவுசெய்து இத்தகைய மொழிகளை யென்முன் புகலவேண்டாம். அது என் மனதிற்கு மிக்க துயரத்தை யுண்டாக்குகிறது.

இவ்வுத்தம குணமுடைய கன்னிகையின் வார்த்தை களைக் கேட்டதே குணசுநதரனுடைய துயரம் பாதியப் போதே ஒழிநதுவிட்டது. இன்னவிதமான பதில் கூறுவ தென்றுதோன்றமல் "என் காதலியே! கடவுளதான் உன் உத்தம குணத்திற்குத் தக்க நன்மையைச் செய்யவேண் டும். உன் போன்ற கன்னிகை யெனக்கு மனைவியாய் வாய்க்கிறபடியால் என் ஆபத்தெல்லாம் ஆதித்தனைக் கண்ட பனிபோல் நீங்கிவிடு மென்பதிற் றடையேயில்லை" என்றான்.

அதன்பிறகு மங்களம் "தங்களுக்காக ஏற்படுத்தப் பட்ட கடம்பநாதர் என்றலாயர் எப்படிப்பட்டவர்? கெட் டிக்காரர் தானோ" வென்று கேட்டாள். அதற்கு குணசுந் தரன் "அவர் மிக்க பிரக்யாதி பெற்றவர். மகா நுண்ணிய அறிவும் தேர்ந்த அனுபவமு முடையவர். அவரினும் கெட்டிக்காரர் அகப்படுவது அசாத்தியம்" என்றான்.

## 9-வது அத்தியாயம்

**குணசுந்தரன் கொலைக்குற்றத்திற்காகச் சிறைசெய்யப்படல்—மறுநாள் கோரனர் விசாரணை—குற்றவாளியென்று தீர்மானிக்கப்படல்—துப்பறியும் பவான்ஸிங்—குணசுந்தரனும், பவான்ஸிங்கும்.**

முன் அத்தியாயத்தில் கூறிய சம்பவங்கள் நடந்த தினம் மாலை நாலரை மணிக்கு குணசுந்தரன், கிருஷ்ணபாய், அவர்கள் தாயார், மங்களாம்பாள், யாவரும் மாடிமேல் ஒரு கூடத்தில் உட்கார்ந்து சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள். அன்று செவ்வாய்க்கிழமை. குணசுந்தரன் மறுநாள் விசாரணைக்குச் செல்லவேண்டுமே யென்று அதைப்பற்றி சிந்தித்துக்கொண்டே யிருந்தான். அன்று கலியாணத்திற்காக இன்னும் சில பரிசுகள் வந்திருந்தன. அவைகளை யாவரும் பிரித்துப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அச்சமயம் வீதியில் ஒரு வண்டி வந்து நின்றது.

கிருஷ்ணபாய் "யாரோ பார்க்க வருகிறார்கள்" என்றாள்.

சற்று நேரத்திற்குள் ஒரு வேலைக்காரன் அங்குவந்து குணசுந்தரனை நோக்கி "ஒரு பெரிய மனிதர் கீழே அறையில் வந்து உட்கார்ந்திருக்கிறார், தங்களோடு பேசவேண்டுமாம்" என்றான்.

குணசுந்தரன்.—"அவர் யார் தெரியுமா? பெயரைக் கூறவில்லையா?" என்று வினவினான்.

வேலைக்காரன்.—அவர் பெயரைக் கூறுவது அனாவசியமென்று கூறினார். ஒரு நிமிஷம் தாங்கள் மட்டும் வந்து பேசினால் போதுமாம்.

குணசுந்தரன் சரி இதோ வருகிறேனென்று எழுந்து

சென்றான். வந்த மனிதனைக் குணசுந்தரன் எப்போதும் கண்டதில்லை. அவன் இன்ன தொழில்காரனென்றாவது தன்னிடம் என்ன வேலையாய் வந்தானென்றாவது அவனுக்குத் தெரியவில்லை. ஆகையால் அவனை நோக்கி "தாங்கள் எங்கிருந்து வந்தீர்களோ தெரியவில்லை. என்னாலாக வேண்டிய தென்னவிருந்தால் சந்தோஷமாய்ச் செய்ய ஆயத்தமாயிருக்கிறேன்" என்றான்.

இம்மரியாதையான மொழிகளைக் கேட்டதே அம் மனிதன் முகம் வாட்டமடைந்தது. அவன் மெதுவாய் எழுந்து குணசுந்தரன் அருகில் வந்து, "அய்யா! நான் வந்த காரணத்தைக் கூற மெய்யாகவே மிக்க துயரப்படுகிறேன். ஆயினும் என்தொழிலை நான் செய்தே தீரவேண்டும். நான் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தன். சென்ற வியாழக்கிழமை இரவு தச்சுவாடி வீதியண்டை தையநாயகி யென்பவளைக் கொன்றுவிட்ட குற்றத்திற்காகத் தங்களைக் கைதுசெய்யும்படி வாரண்ட் கொண்டு வந்திருக்கிறேன். நாளைக்கு விசாரணையாதலால் இன்றிரவே நாம் இதைவிட்டு நகரத்திற்குப் புறப்படவேண்டும்" என்றான்.

யாவரும் பயந்திருந்தபடியே கடைசியில் குணசுந்தரன்மேல் அபாண்டமான பழிவிழுந்தது.

குணசுந்தரன் திப்பிரமையடைந்து சற்றுநேரம் தன் எதிரிலிருக்கும் மனிதனை உற்று நோக்கினான். சற்று நேரம் அவனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. கடைசியில் சமாளித்துக் கொண்டு "என்னை யெங்கே யழைத்துக் கொண்டு போகப்போகிறாய்?" என்றான். அதற்கு அம் மனிதன் "நாம் இராத்திரிக்கே புறப்பட்டு போகவேண்டும்" என்றான்.

குணசுந்தரன்.—அப்படியானால் நாம் 6-10 மணிக்கு புறப்பட்டுப் போவோம்; எட்டு மணிக்கு கோட்டை

ஸ்டேஷன் சேர்வோம். வண்டிகொண்டுவந்திருக்கிறாயா அல்லது என் வண்டியை ஆயத்தம் செய்யச் சொல்லட்டுமா ?

அம்மனிதன்.—அப்படியே செய்யுங்கள்.

குணசுந்தரன் உடனே தன் ஆளைக் கூப்பிட்டு, "நான் இரத்னபுரிக்குப் புறப்படவேண்டும், வண்டியை ஆயத்தம் செய்யச் சொல். சீக்கிரம்" என்றான். பிறகு அம்மனிதனை நோக்கி "நான் போய் பெண்டுகளுக்குக் கூறிவிட்டு வருகிறேன், ஓடி விடுவேனென்று பயப்படவேண்டாம்" என்றான்.

அம்மனிதன்.—"தங்களுக்கு அனாவசியமான சங்கடம் கொடுக்க வேண்டுமென்று எனக்குப்பிரியமில்லை. தங்கள் பிரியப்படியே செய்யுங்கள். ஆனால் எனக்கு ஆபத்து உண்டாகும்படி செய்யமாட்டீர்களென்று நம்புகிறேன்" என்றான்.

குணசுந்தரன்.—"அதற்காக நீ பயப்படவேண்டாம்" என்று கூறிவிட்டுத் தன் தாயார் முதலியவர்களிருக்கும் அறைக்குச் சென்றான்.

அவன் வருவதைக்கண்டு அவர்கள் திடுக்கிட்டு எழுந்தார்கள். அவன் தாயார் "குழந்தாய்! என்ன சங்கதி!" என்றாள்.

குணசுந்தரன்.—"இரத்னபுரியிலிருந்து ஒரு ஆள் இக் கேஸ் விஷயமாய் என்னைக்காண வந்திருக்கிறான். நாளை விசாரணை நடப்பதற்கு முன்னே அதிகாரிகள் என்னைப் பார்க்கவேண்டுமாம். ஆகையால் நான் இராத்திரிக்கே போகவேண்டும்" என்றான்.

இதைக்கேட்ட அவன் தாயார் உண்மையை யறிந்து கொண்டு, "ஆ! மகனே, ஓ கோ கோ! எனக்குத்தெரியும். அக்கொலைக்காக உன்னைக் கைதுசெய் திருக்கிறார்கள்.

அவர்கள் உன்னைப் பிடித்துக்கொண்டு போகக்கூடாது. நான் ஒருக்காலும் விடமாட்டேன். விடமாட்டேன்" என்று அலறினாள்.

குணசுந்தரன் தன் தாயைநோக்கி "அம்மா இது வீண் சடங்கேயன்றி வேறில்லை. விசாரணையில் எல்லா உண்மையும் வெளியாய்விடும். இதற்காக நீ பயப்படவேண்டாம். சட்டத்திற்கு எதிர்த்துநடந்தால் அதனால் கெடுதியுண்டாகும். நாம் வைத்திருக்கும் லாயர் மிகவும் கெட்டிக்காரர். நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம்" என்று தேறுதல் கூறினான்.

கிருஷ்ணைபாய்.—"உன்மேல் அவர்கள் சந்தேகம் கொள்வது பெரிய அநியாயம்" என்றாள்.

குணசுந்தரன்.—"சநதர்ப்ப சாக்ஷியம் அப்படி யிருக்கிறது. அதற்காக நாம் குற்றங்கூறலாகாது, சீக்கிரத்தில் உண்மை வெளியாகும்" என்று கூறிவிட்டு அருகிலிருந்த மங்களாம்பாளைநோக்கி "உன் தந்தைக்கு உடனேயொரு சீட்டெழுதி யனுப்பவேண்டும்" என்றான்.

அவ்வாறே யுடனே ஒரு சீட்டெழுதி ஒரு ஆளிடம கொடுத்தனுப்பிவிட்டு, மணி 5-30-ஆய்விட்டதால் ஸ்டேஷனுக்குப் புறப்பட ஆயத்தமானான். அவன் என்ன கூறியும் அவன் தாயாரின் துயரம் தணியவில்லை. கடைசியில் தான் துயரமாயிருந்தால் அவன் அதைரியத்தோடு போவானென்று எண்ணி, "குழந்தாய் நீ நிரபராதியென்று எங்களுக்கெல்லாம் என்றுய்த்தெரியும். கடவுள் உன்னைக் காப்பாற்றுது விடார். ஆகையால் நீ தைரியத்தைக் கைவிடாதே" என்று வாழ்த்தினாள்.

சற்றுநேரத்திற்கெல்லாம் குணசுந்தரனும் வாரன்ட் கொண்டுவந்த மனிதனும் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டார்கள். இரத்தினபுரிபோய்ச்சேர்ந்ததே இருவரும் போலீஸ்

ஸ்டேஷனுக்குச் சென்றார்கள். குணசுந்தரன் அங்கு சட்டத்தின்படி குற்றம் சாட்டப்பட்டு ஸ்டேஷன் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டான்.

அன்றிரவு அவன் மனதிலிருந்த வியாகூலமும் திகிலும் இன்னதென்று கூறத்தாமல்ல. நற்குலத்திற்பிறந்து, பிறந்ததுமுதல் ஒரு அயோக்கியமான செய்கையும் செய்யாமல், இப்போது கடவுள்தயவால் செல்வமும் வந்த பிறகு, புண்ணியத்திற்கு உதவி செய்யப்போய் இப்படிப்பட்ட ஆபத்தில் சிக்கிக்கொண்டு கடைசியில் சிறைச்சாலையில் வசிக்கும்படி நேரிட்டதே கடவுளே! என்று கடவுளைப் பிரார்த்தித்துக்கொண்டே இரவைக் கழித்தான்.

மறுநாட்காலையில் இரண்டுபேர் உம்மைக்காண வந்திருக்கிறார்கள் என்று சிறைச்சாலை காவலன் வந்து கூறினான். அவன்பின்னாலேயே துரைராஜூப்பிரபுவும், லாயர் கடம்பநாதரும் வந்தார்கள். பிரபு அவனைக்கண்டதும், "ஆ! இது ஒரு வருத்தமான விஷயமே. நற்காலமாய் நீ நிரபராதியென்று எங்களுக்கு நன்றாய்த்தெரியும். அதை யெப்படியாவது நிரூபிப்பதென்று துணிந்திருக்கிறோம்" என்றார். இருவரும் உட்கார்ந்தபின் லாயர் குணசுந்தரனை நோக்கிச் சில கேள்விகள் கேட்டார். குணசுந்தரன் ஒவ்வொரு கேள்விக்கும் தடுமாற்றமின்றி விடைகொடுத்தான். அவர்கள்சென்றபிறகு விசாரணையாகும் வேளைக்கு இரண்டு காவலர்கள் அவனை யொருவண்டியி லேற்றிக்கொண்டு விசாரணை நடக்குமிடத்திற்குக் கொண்டுபோனார்கள். அவ்விடத்தில் ஜனக்கூட்டம் சொல்லமுடியாததா யிருந்தது. பஞ்சநாதனும் ஆயத்தமாய் வந்திருந்தான். விசாரணை ஒரு சந்தர்ப்பம் தவிர மற்ற அனைத்தும் சாந்தமாகவே நடந்தது. ஹோட்டல் காவலன் குணசுந்தரன் வியாழக்கிழமை இரவு பனிரண்டுமணி சுமாருக்கு ஹோட்டலுக்

குத் திரும்பிவந்தபோது அவன் முகம் மிகவும் விகார மடைந்திருந்தது என்று கூறும்போது மட்டும் ஜனங் களுக்குள் ஒரு மொணமொணப்பு உண்டாயிற்று. அவன் "குணசுந்தரன் இரவு பனிரெண்டுமணிக்குமேல் ஹோட்ட லுக்குத் திரும்பிவந்தான்.. அவன் முகம் மிக்க மனக் குழப்ப மடைந்தவன் முகம்போலிருந்தது. எனக்கு வியப்பாயிருந்தது. அவன் முகம் சவம்போல் வெளுத் திருந்தது. அவன் பார்வை பிரண்டபார்வையாயிருந்தது" என்று கூறினன்.

அதன் பிறகு குணசுந்தரனையும் தையநாயகியையும் பெரியவீதியிலிருந்து தச்சுவாடி வீதிக்கு ஏற்றிக்கொண்டு சென்ற வண்டிக்காரன் விசாரிக்கப்பட்டான். கோரனர் கேட்ட கேள்விகளுக்கு அவன் அடியிற் கண்டபடி விடை யளித்தான்:—

"இந்த ஆள் வண்டியைக் கூப்பிட்டபோது இறந்து போன ஸ்திரீ வண்டியிலேறப் பிரியமற்றவளா யிருந்தா ளென்று தோன்றியது. ஆனல் இம்மனிதன் அவளை யேறிக்கொள்ளும்படி துரிதப்படுத்தினன். இருவரையும் கொலை நடந்த வீட்டெதிரில் கொண்டுபோய் விட்டேன். சவத்தைப்பார்த்தேன் அந்த ஸ்திரீயே கொல்லப்பட் டிருந்தவளென்று பிரமாணிக்கமாய்க் கூறுவேன்."

வண்டிக்காரன் இவ்வாறு கூறிமுடிந்தபின் குணசுந்த ரனும் தையநாயகமும் அன்றிரவு வீதியில் பேசிக்கொண் டிருந்தபோது அவ்வழியே சென்ற போலீஸ்காரன் விசா ரிக்கப்பட்டான். அவன்,

"நான் அவர்கள் இருவரும் வீதியில் பேசிக்கொண் டிருந்ததைக் கண்டேன். இம்மாதிரி மனிதர் அந்தவேளை யில் அந்த விடத்தில் அப்படி பேசிக்கொண்டிருந்தது எனக்கு மிக்க வியப்பாயிருந்தது. அந்தக்கன்னிகை அழுது

கொண்டிருந்தாள். நான் அவர்களைக் கவனித்தேன். அவள் என் உதவியைக் கோருதபடியால் நான் பேசாமற் சென்றேன். இம்மனிதன் வீட்டிற்குள் சென்றதும் செல்லாததும் எனக்குத் தெரியாது" என்றான்.

பத்துநிமிஷங்கள் கழித்து ஜூரர்கள் "இது குணசுந்தரன் வேணுமென்று செய்த கொலையே" யென்று தீர்ப்பு கூறிவிட்டார்கள். கோரனர் கேஸை அடுத்த ஸெஷனுக்கு விசாரணைக்காக அனுப்பிவிட்டார்.

இப்போது குணசுந்தரனைப் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோகாமல் நகர சிறைச்சாலைக்குக் கொண்டு போனார்கள். அங்கே அவன் ஒரு சாதாரண அறையில் வைக்கப்பட்டான். அவன்மனம் முழுதும் கலங்கிவிட்டது. "இத்தகைய துன்பத்தை யனுபவிக்க நாம் என்னசெய்தோம் கடவுளே? நமது தாயும் தங்கையும், மங்களாம்பாளும் இதைக்கேட்டால் என்னதுயர மடைவார்களோ" என்று சொல்லொணு வேதனையடைந்தான். பிற்பகல் லாயரும் துரைராஜப்பிரபுவும் மறுபடி யவனைக் காணவந்தார்கள். பிரபு மிக்க மனவருத்தமடைந்தார். நடந்த சம்பவம் லாயர்மனதில் அவ்வளவு அதிகமாய் உறுத்தவில்லை. அவர் பலபேருக்கு இத்தகைய சம்பவம் நேர்ந்ததைக் கண்டிருப்பதால் அவர்மனதில் இது விசேஷமாய்த் தாக்கவில்லை. அவர் குணசுந்தரனை நோக்கி "வாலிபனே! நீ மனோதைரியத்தை விட்டுவிடாதே. உன் நிரபராதத்தன்மையை ருசுப்படுத்த போதுமான காலமிருக்கிறது. இப்போது நீ அனுமதிதந்தால் நான் செய்திருக்கும் ஏற்பாட்டைக் கூறுகிறேன்.

முதலாவது, உண்மையான கொலையாளியை நாம் கண்டுபிடிக்கவேண்டும். நல்ல தேர்ச்சியடைந்த ஒரு துப்பறிபவனே அவனைக் கண்டுபிடிக்கக்கூடும். ஆகையால் பல

சமயங்களில் இப்படிப்பட்ட விஷயங்களில் எனக்கு உதவி செய்த ஒரு ஆசாமியை இதற்காக ஏற்பாடு செய்திருக்கிறேன். அவன் ஒரு அபூர்வமான மனிதன். துப்பறிபவர்களுக்கெல்லாம் இராஜா. இதில் கொஞ்சம் பணச்செலவு நேரிடும். எப்படியும் அவன் ஜெயமடைவானென்றே நம்புகிறேன் ஆகையால் கொஞ்சம் பணச்செலவிற்குப் பின்னிடையமாட்டா யென்று நம்புகிறேன். அவன் ஜெயமடைந்தபின் அவனுக்குத் தக்க பரிசளிக்கவேண்டும்" என்று கூறினார்.

குணசுந்தரன்.—நான் இதற்கு எள்ளளவும் தடை சொல்ல மாட்டேனென்று நீர் நிச்சயமாய் நம்பலாம். இந்த இக்கட்டி விருந்துமட்டும் அவன் என்னைக் காப்பாற்றிவிடட்டும். அவன் சாதாரணமாய்ப் பெறுகிற தொகைக்கு இரண்டத்தனை மூன்றத்தனை கொடுக்கிறேன்.

லாயர்.—"ஆ! அவன் அப்படிப் பணம் பறிக்கமாட்டான் வெளி அறையில் வந்திருக்கிறான். உனக்கு இப்போது பார்க்கப் பிரியமிருந்தால் அவனை யுள்ளே யழைத்துவர அனுமதிபெற்றுக் கொள்ளுகிறேன்" என்றார்.

குணசுந்தரன் அப்படியே யழைத்துவரும்படி கூற, லாயர் உடனே சென்று சிறைச்சாலை யதிகாரியிடம் அனுமதி வாங்கிக்கொண்டு, சற்றுநேரத்திற்குள் சற்றுதடித்த ஒரு மனிதனை யழைத்துக்கொண்டு குணசுந்தரன் அறைக்குள்வந்தார். அவர்கூடவந்த மனிதன் ஓர் நாட்டுப்புறத்து பெரியமனிதன்போ லிருந்தான். அவன் கண்கள் மிக்கப் பிரகாசமாய் கூர்மையான பார்வையுடையனவா யிருந்தன அவன் நெற்றி அகன்று பளபளப்பா யிருந்தது. அவன் முகம் மிக்க சந்தோஷகரமானதா யிருந்தது. அத்தேச முழுதும் தேடினாலும் அத்தகைய முகம் வேறொன்று

கிடைக்காதென்பது திண்ணம். அதைப் பார்த்தாலே துயரம் நீங்கிச் சந்தோஷமுண்டாகும். அவன் உடைகளும் சாதாரணமான ஒரு பெரியமனிதன் உடைகளாகவே யிருந்தன. அவனுடைய கைகால்கள் நீண்டு பருத்திருந்தன. லாயர் குணசுந்தரனுக்கு அவனைச் சுட்டிக்காட்டி இவர்தான் பவான்ஸிங் என்னும் கீர்த்தி பெற்ற துப்பறியும் உத்தியோகஸ்தர். இவர் உனக்காக இக்கேஸில் பிரவேசித்து மெய்யான குற்றவாளியைக் கண்டுபிடிக்க ஒப்புக்கொண்டிருக்கிறார் என்றார்.

குணசுந்தரன் பவான்ஸிங்கை நோக்கி, "தாங்கள் உதவிசெய்ய ஒத்துக்கொண்டதற்காக மிக்க வந்தனமுடையவனா யிருக்கிறேன். தங்கள் சாமர்த்தியத்தைப் பற்றி கடம்பநாதர் எனக்குக் கூறியிருக்கிறார். தாங்கள் மட்டும் பரிதாபமான அப்பெண்ணைக் கொன்றவனைக் கண்டுபிடித்து விட்டால் நான் எப்போதும் தங்களுக்குக் கடைமைப்பட்டவனா யிருப்பேன்" என்றான்.

பவான்ஸிங் "நான் என்னால் கூடியதைச்செய்தே தீருவேன். கடம்பநாதர் கூறியபடி நான் இதுவரையில் எத்தனையோ சிக்கானவிஷயங்களைக் கண்டுபிடித்திருக்கிறேன். இதையும் நான் கண்டுபிடிக்காவிட்டால் அது என் குற்றமாயிராது. கடம்பநாதருக்கு நான தொழில் செய்யும் முறைமைதெரியும். அவர் நடநதவிஷயங்களைத் தோராயமாய்க் கூறியிருக்கிறார். ஆயினும உம்மைச்சில கேள்விகள் கேட்கவேண்டும்." என்றான்.

குணசுந்தரன்.—"அப்படியே கேளுங்கள். என்னால் கூடிய வரையில் சரியானபதில் கூறுகிறேன்." என்றான்.

பவான்ஸிங் அவன் எதிரில் உட்கார்ந்து இரண்டுகைகளையும் இரண்டு முழங்கால்கள்மேலும் வைத்துக்கொண்டு அவன் முகத்தை நோக்கி, "இப்போது, முதலாவது,

உமக்கு இந்த ஆஸ்திவருவதன்முன், இரத்னபுரியில் தையல நாயகியைப் படம் எழுத் மாதிரிக்கு அமர்த்திக் கொண்ட போது உமக்கு நெருங்கிய சினேகிதர்கள் யாரிருந்தார்கள் ? யோசித்துப் பார்த்துக்கூறும். அதாவது அடிக்கடி நீர் படம் எழுதிக்கொண்டிருந்த அறைக்கு வந்து கொண்டிருந்த சினேகிதர்கள் யார் ?'' என்றார்.

குணசுந்தரன் சற்று யோசித்து,

"அப்போது எனக்கு அதிக சினேகிதர்கள் இல்லை. அப்போது நான் கஷ்டப்பட்டு வேலைசெய்து கொண்டிருந்தேன். ஆயினும் என் நண்பர் பஞ்சநாதர் இருந்தார்."

பவான்ஸிங்.—திங்கட்கிழமை விசாரணையில் உமக்கு விரோதமாய்ச் சாக்ஷிகூறினனே அவனா ?

குணசுந்தரன்.—ஆம்.—மேலும் பெரியராஜு என்பவரிருந்தார். அவர் பத்திரிகைகளுக்கு விஷயம் எழுதியனுப்புகிறவர்.

பவான்ஸிங்.—அவர் எனக்குத்தெரியும. இச்சம்பந்தமாய் அவரைப்பற்றிச சிந்திக்கவேண்டியதேயில்லை. அந்தக்கைகள் அனுப்பப்பட்ட பெட்டியிருக்கிறதே, அதையெப்போதேனும் பார்த்திருக்கிறாயா ?

குணசுந்தரன்.—இல்லை. நான் பார்த்ததே யில்லை. நிச்சயம்.

பவான்ஸிங்.—நீர் கெய்ரோவிலிருந்து திரும்பி வரும் போது நவீனபுரியில் ஏதாவது சாமான்கள் வாங்கினீரா ?

குணசுந்தரன்.—இல்லை. ஒன்றும் வாங்கவில்லை. ஒரு இரவுதான் அங்கு தங்கியிருந்தேன்.

பவான்ஸிங்.—உமது நண்பனை பஞ்சநாதன் நீ அக் கன்னிகைமேல் காதல்கொள்வா யென்று பயந்து தேசயாத்திரை செல்லும்படி யும்மைத் தூண்டினு னென்று

தெரிகிறது. அக்கன்னிகை விஷயத்தில் அவன் எப்படி நடந்துகொண்டான்.

குணசுந்தரன்.—மிக்க நேசப்பான்மையோ டிருந்தார்கள்.

பவான்ஸிங்.—அவன் அவள்மேல் காதல் கொண்டிருப்பானென்று நினைக்கிறீரா ?

குணசுந்தரன்.—அப்படியில்லை யென்று எனக்கு நிச்சயமாய்த் தெரியும். அவன் எந்த ஸ்திரீயினிடத்திலாவது காதல் கொள்வானென்று நான் நினைக்கவில்லை.

பவான்ஸிங்.—நீங்கள் தேசயாத்திரைக்குப் புறப்பட்டதுமுதல், திங்கட்கிழமை அவள் சவத்தை யவன்பார்த்த தினம்வரைக்கும், இடையில் அவளையவன் காணவேயில்லை யென்று உமக்கு நிச்சயமாய்த் தெரியுமா ?

குணசுந்தரன்.—என்வரையில் நிச்சயமென்றே தெரிகிறது.

பவான்ஸிங்.—அவன் எப்போது இரத்னபுரிக்குத் திரும்பிவந்தான் ?

குணசுந்தரன்.—கொலை நடந்த தினம் காலையில் வந்தான். மாலை நான் ஹோட்டலில் சந்தித்தேன்.

பவான்ஸிங்.—அன்றுகாலைதான் வந்தானென்பதற்கு அவன் வாய்மொழி தவிர வேறே அத்தாக்ஷி யேதாவது உமக்குத் தெரியுமா ?

குணசுந்தரன்.—தெரியாது.

பவான்ஸிங்.—இன்னம் ஒரே கேள்வி. அதோடு முடிந்தது. அவள் தான் கலியாணம் செய்துகொண்டதாயும் ஆனால் புருடன் பெயரைக் கூறமாட்டே னென்றும் உம்மிடம் கூறினாள். அவள்மாங்கல்யம், கையிலிருந்த மோதிரம் இவைகள் விஜயபுரத்தில் செய்தவைகளாய்த் தெரிகிறது. நவீனபுரி வாசியாகிய அப்பெண் விஜயபுரத்

தில் செய்த மாங்கல்யம் முதலியவைகளை யெப்படி அடைந்தாள்? எப்போதேனும் அங்கு சென்றிருந்தாளா?

குணசுந்தரன்.—எனக்குத் தெரியாது. அவள் அப்படிக் கூறவுமில்லை.

பவான்ஸிங்.—இன்னம் ஒரு சந்தேகம் எனக்குத் தெளிய வேண்டியது. அப்போது இந்த மர்மத்திற்கு எனக்குச் சாவி கிடைத்ததென்றே நினைப்பேன். தையநாயகத்தின் மாங்கல்யம் வீணுபுரத்தில் செய்ததாயிருப்பதும், அந்தக்கைகள் அனுப்பப்பட்ட பெட்டியின் மேல் வீணுபுரத்திலுள்ள ஒரு கம்பெனியின் முத்திரை போடப்பட்டிருப்பதும் தற்செயலாய் சம்பவித்ததென்றே நினைக்கிறீரோ?

குணசுந்தரன்.— அது வியப்பாகவே யிருக்கிறது. அந்த மோதிரமும் மாங்கல்யமும் வீணுபுரத்தில் செய்ததாயினும் நவீனபுரியில் வாங்கப்பட் டிருக்கலாகாதா?

பவான்ஸிங்.—"ஆகா இருக்கலாம். ஆயினும் இரண்டும் அப்படியிருப்பது கவனிக்கத்தக்கது. நான் இரண்டிடங்களுக்கும் தந்தி யனுப்புகிறேன். இடையில் அப்பெட்டியை கோட்டை ஸ்டேஷனில் யார் கொடுத்ததென்று கண்டறியவேண்டும். நான் இனிப் போய்வருகிறேன்" என்று கூறிவிட்டுச் சென்றான்.

பவான்ஸிங் சென்றபின் பிரபு குணசுந்தரனை நோக்கி "அவன் மிக்க அற்புதமான மனிதன். வேட்டை நாய் போல் அகப்பட்ட உளவை விடமாட்டான். நான் விசாரணையைக் காலதாமதம் செய்கிறேன். அப்போதுதான் பவான்ஸிங்குக்குப் போதுமானகாலம் கிடைக்கும். நான் இராத்திரி வண்டிக்கு தேரூர் சென்று ஸ்திரீகளுக்குத் தேறுதல் கூறிவிட்டு நாளை காலைவண்டியில் வந்துவிடுகிறேன்," என்று வாலிபனுக்குத் தைரியமான மொழிகளைக்

கூறிவிட்டு விடை பெற்றுக்கொண்டு சிறைச்சாலையை விட்டுச் சென்றார்.

---

## 10-வது அத்தியாயம்

**நியாயாதிபதி முன் விசாரணை—மறுபடி பஞ்சநாதன் சாக்ஷிக் கூண்டில்—சிநேகத் துரோகம்—அபாண்டம்—ஸெஷன் விசாரணைக்கு அனுப்பப்பட்டது.**

நியாயாதிபதியினிடம் நடந்த விசாரணையைப் பற்றி கூறவேண்டிய விசேஷம் ஒன்றுமில்லை. கோரனர் முன்னிலையில் ருசுவான சாக்ஷியமே அங்கும் ருசுவாயிற்று. ஆனால் இந்த விசாரணையில் பிரபுக்களும் செல்வவந்தர்களும் பெரியமனிதர்களும் நிறைந்திருந்தார்கள். ஜனக் கூட்டமும் மிக்க அதிகமாயிருந்தது. குணசுந்தரன் சபையில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டதே சற்றுநேரத்திற்குள் தன் நாணத்தையும் துயரத்தையும் அடக்கிக் கொண்டு, மனோதைரியமடைந்து தலைநிமிர்ந்து நாற்புறமும் நோக்கினான். தனக்கு அறிமுகமானவர்கள் அனேகர் இருப்பதைக்கண்டு அவன் மனம் சொல்லொணாத் துயரமடைந்தது. அவர்களில் அனேகர் இப்போது தன்னைக் குற்றவாளியாகவே யெண்ணி யிருப்பதாய் அவன் மனதிற்றோன்றியது. அங்கிருந்தவர்களில் அனேகர் "சேசே! அவன் முகத்தையும் பார்வையையும் நோக்கினால் இப்படிப்பட்ட கொலையை அவன் ஒருகாலும் செய்தேயிருக்க மாட்டான் என்றே தோன்றுகிறது என்றார்கள். முதல் நாள் விசாரணையில், சில சாக்ஷிகள் விசாரிக்கப் பட்டதே கேஸ் ஒருவாரத்திற்கு ஒத்திவைக்கப்பட்டது.

அந்த ஒருவாரம் எப்படிகழிந்ததோ குணசுந்தரனுக்குத் தெரியவே தெரியாது. கடைசியில் அந்தவாரம்

முடிந்தது. மறுபடி அவன் நியாயாதிபதியின் முன்நிறுத்தப்பட்டான். முன் இருந்ததைவிட ஜெனக் கூட்டம் அதிகமாயிருந்தது. குணசுந்தரனையும் ஜையநாயகியையும் அன்றிரவு வண்டியிலேற்றிக்கொண்டு சென்ற வண்டிக்காரன் விசாரிக்கப்பட்டான். அவன் பலமான குறுக்குக் கேள்விகள் கேட்கப்பட்டான். ஆயினும் அவன் வாக்கு மூலம் பிரளவேயில்லை. பிறகு அவர்களைக்கண்ட போலீஸ்காரன் விசாரிக்கப்பட்டான். தான் பார்த்தபோது அக்கன்னிகை யழுதுகொண்டிருந்தாளென்று அவன் சத்தியமாய்க் கூறினன். ஆனல் குற்றவாளி கோபமாய்ப் பேசியதும் அல்லாததும் தெரியாதென்று கூறினன்.

அவன் விசாரணை முடிந்தபின் பஞ்சநாதன் சாக்ஷிக் கூண்டில் நிறுத்தப்பட்டான். அவன் தேச யாத்திரை போவதற்கு முன் இருந்த நிலைமையைக் கூறி குணசுந்தரனை யக்கன்னிகையின் நட்பிலிருந்துபிறிக்கத் தானுஞ்செய்த யோசனையைக் கூறினன். பிறகு லாயர் அவனைக் குறுக்குக் கேள்விகள் கேட்டார்.

லாயர்.—குணசுந்தரன் அக்கன்னிகையின் மேல் கொஞ்சமாவது காதல்கொண்டிருந்தானென்று எந்த அத்தாட்சியால் கூறினய் ?

பஞ்சநாதன்.—சற்றுவது கூச்சமின்றி "அவனே யப்படிகூறினன். நான் அதனலுண்டாகக்கூடிய கெடுதியையெடுத்துக்காட்டி முடிவில் தேசயாத்திரை செல்ல அவனைச் சம்மதிக்கச் செய்தேன்" என்றான்.

லாயர்.—நீ அவனை எந்த விடத்திலிருந்து பிறிந்தாய் ?

பஞ்சநாதன்.—கெய்ரோவிலிருந்து பிரிந்தேன். நான் கிழக்கு தேசங்களைக் காணச் சென்றேன். அவன் நவீனபுரிக்குச் சென்றான்.

லாயர்.—நீ இரத்னபுரிக்கு என்று திரும்பிவந்தாய் ?

பஞ்சநாதன்.—கொலைநடந்த தினம்.

லாயர்.—குற்றவாளியை மறுபடி எப்போது கண்டாய் ?

பஞ்சநாதன்.—அன்றுமாலையே ஹோட்டலில் சந்தித்தேன்.

லாயர், "போதும். இப்போது உன்னைக் கேட்க வேண்டியது இன்னுமொன்றுமில்லை" யென்றார். இவர் இப்படி கூறியது யாவர்க்கும் வியப்பாகவே யிருந்தது.

அப்போதுதான் ஜனங்களுக்குள் குழப்பமுண்டாயிற்று. ஏனெனில், பஞ்சநாதன் மறுபடியும் சாக்ஷிக்கூண்டில் நிறுத்தப்பட்டதும், ஒரு போலீஸ் ஸார்ஜென்ட் நியாயாதிபதி யெதிரில் நின்று அடியிற்கண்டபடி வாக்குமூலம் கொடுத்தான்:—

"நானும், இன்ஸ்பெக்டர் ஈஸ்வரஸிங்கும் இன்னும் இரண்டுபேருமாய் இரண்டுநாட்களுக்கு முன் தேரூரிலிருக்கும் குற்றவாளியின் வாசஸ்தலத்தைச் சோதனை செய்தோம். எங்கும் சோதித்துப்பார்த்தபோது, புஸ்தகங்கள் வைத்திருக்கும் ஒரு பீரோவின்கீழ் அன்னியநாட்டு வேலைப்பாடுள்ள ஒரு கூர்மையான கத்தி அகப்பட்டது. அதன்மேல் கறுத்த கறைகள் இருந்தன. டாக்டர் அதைச் சோதித்து அதன்மேல் இருப்பது மனுஷருடைய இரத்தக்கறையென்று நற்சாக்ஷிபத்திரம் (ஸர்டிபிகேட்) கொடுத்திருக்கிறார். அந்தப பத்திரத்தையும் கத்தியையும் இதோ கோர்ட்டாரிடம் ஒப்புவிக்கிறோம்" என்று கூறிக்கொண்டே அவைகளை மேஜைமேல் வைத்தான்.

இதைக் கேட்டதே குணசுந்தரனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. தலைமேல் பெரிய இடி விழுந்தவன் போலாய்விட்டான். கண்கள் இருண்டு யாவும் சுற்றுவதுபோலிருந்தது; நாவுலர்ந்தது. தேகம் நடுக்கமுற்றது.

அதன்பிறகு பஞ்சநாதனிடம் அந்தக் கத்தி கொடுக்கப் பட்டது. துரைத்தனலாயர் "இந்தக்கத்தியை நீ பார்த் திருக்கிருயா ?" என்ருர்.

பஞ்சநாதன் சற்றுநேரம் தடுமாறி விழித்து சமாளித் துக்கொண்டு மெதுவாய் "இல்லை" என்ருன்.

துரைத்தனலாயர்.—யோசித்துப்பார். இது நீதிஸ்தலம் உண்மையைக் கூறவேண்டும். இதை யெங்கே கண் டிருக்கிருய் ?

பஞ்சநாதன் ஏதோ கூறப் பிரியமில்லாதவன்போல் "கெய்ரோநகரில் கண்டேன்," என்ருன்.

லாயர்.—இது யாருடையது ?

பஞ்சநாதன்.—இது அவனுடைய—குற்றவாளியுடை யது. இதை யவன் விலைக்கு வாங்கும்போது நான் கூட விருந்தேன்," என்ருன்.

இதைக்கேட்டதே யாவரும் திடுக்கிட்டார்கள். குண சுந்தரன் சமாளித்துக்கொண்டு நியாயாதிபதியைநோக்கி "கோர்ட்டாரவர்களுக்கு ஒருமனு. இக்கத்தியை இதற்கு முன் நான் இச்சென்மத்தில் கண்டதேயில்லை யென்று கட வுள் முன்னிலையிற் கூறுகிறேன்" என்ருன்.

விசாரணை முடிந்தபிறகு கடம்பநாதர் நியாயாதி பதியைநோக்கி குணசுந்தரன் போன்ற நற்குடியிற் பிறந்த ஒருசெல்வவந்தன் இத்தகையகுற்றத்தைச் செய்வானென் பது எவ்வளவு அசம்பாவிதமானதென்பதும், அப்படி யவன் அக்கொலையைச் செய்திருந்தால், அவ்வளவு சீக்கிர மாய் ஹோட்டலுக்குத் திரும்பிவந்திருக்க முடியாதென் பதும், அப்படிப்பட்ட குரூரமான கொலைசெய்த ஒருவன் அச்சவத்தின் கரங்களை வெட்டி ஒரு பெட்டியில்வைத்து தன்பேருக்கே தன் வீட்டு மேல்விலாசத்திற்கு அனுப் பிக்கொள்வானுவென்பதும் யோசிக்கத் தக்கதென்று

வாதித்தார். அவர் என்ன வாதித்தும் நியாயாதிபதி சேஸை மறுஸெஷனுக்குக் கமிட்செய்துவிட்டார்.

கடம்பநாதர் பிறகு குணசுந்தரனைக் கண்டபோது, அந்தப் பாழுங்கத்தியே மோசஞ்செய்தது என்று கூறிவிட்டு "அந்தச்சனியன் அங்கே ஒளித்து வைக்கப்பட்டிருக்கிறதென்று நீ என்னிடம் ஏன் கூறவில்லை?" என்றார்.

குணசுந்தரன்.—"ஏனெனில் அது அங்கேயிருந்தது எனக்குத்தெரியாது. நான் நியாயாதிபதியிடம் அந்தக் கத்தியைப் பிறந்ததுமுதல் கண்டதேயில்லை யென்று கூறியது சத்தியமே. நான் கெய்ரோவில் எந்தக் கத்தியும் வாங்கவேயில்லை" என்றான்.

லாயர்.—அப்படியாயின் யார் அதையங்கே வைத்திருப்பார்கள்?

குணசுந்தரன்.—நான் எப்படியதைக் கூறக்கூடும்?

லாயர்.—குணசுந்தரம்! இங்கே பார். நான் எத்தனையோ சந்தேகமான குற்றவாளிகளைப் பார்த்திருக்கிறேன். ஆனால் இவ்வளவு சந்தேகமான ஆசாமியை நான் கண்டதேயில்லை. வீட்டிலிருக்கிறவர்கள் பெயரை யெல்லாம் இதோ எழுதிவைத்திருக்கிறேன். அதைப் பார்ப்போம். இதோ உன்தாய் இருக்கிறாள், உன்தங்கையிருக்கிறாள், உனக்கு மனைவியாகப்போகும் மங்களாம்பாள் இருக்கிறாள். இவர்கள் மூவரையும் அடியோடு விட்டுவிடுவோம். இனி சமையற்காரன், காலாள், இரண்டுபேர் வீட்டு வேலைக்காரர் இருக்கிறார்கள். இவர்களனைவரும் நெடுநாளாய் இருக்கும் நன்றியுள்ள ஆட்கள். இவர்கள் மேலும் சந்தேகிக்கக் காரணமில்லை. இனி நீயும் பஞ்சநாதனுமே யிருக்கிறீர்கள். நீ நிரபராதி என்று கூறுகிறாய். அப்படியே நானும் நம்புகிறேன். பஞ்சநாதனே தான்கூறிய சாக்ஷியத்தால் உன்னை யிப்போது இந்த நிலை

மைக்குக் கொண்டுவந் திருக்கிறான். நீ அக்கன்னிகை மேல் காதல்கொண்டிருந்ததாய் அவன்கூறியது பொய் என்கிறாய். கத்தியை நீகெய்ரோவில் வாங்கினாய் என்று அவன் கூறியது பொய்என்கிறாய். கொலைநடந்த மறு நாள் அவன் இங்கு வந்திருந்ததாய்க் கூறினாய். என் அவனே உன்மேல் அக்குற்றம் உறுதியாய் ருசுவாகட்டு மென்று அக்கத்தியை யங்கே வைத்திருக்கலாகாது ?

குணசுந்தரன்.—அவன் அவ்வளவு இழிவான வேலை செய்வானென்று நான் நினைக்கவில்லை.

லாயர்.—"நான் அப்படி நிச்சயமாய்க் கூறமாட்டேன். மேலும், இன்று ஒரு அதிசயமான விஷயம் கண்டுபிடித் தேன். அம்மனிதன் உன்சினேகிதன்போல் பாசாங்குசெய் கிறான். கூறமனமில்லாதவன்போல் சாக்ஷிகூறுகிறான். ஆயி னும் அக்கத்திவெளியில் வந்தபோது அவன்முகத்தில் ஆச் சரியமாவது, எவ்விதமாறுதலாவது உண்டாகவேயில்லை. அவன் உன்க்ஷேமத்தைக் கோரியவனானால் அப்படி யிருப் பானா? எனக்குப் பதில் கூறு! இதனால் கத்தியிருந்த விடம் அவனுக்குத் தெரியுமென்றும், அதை யங்கே வைத் தவன் அவனேயென்றும் நன்றாய்த் தெரிகிறது" என்றார்.

குணசுந்தரன்.—தாங்கள் கொள்ளும் சந்தேகம் மிக்க பயங்கரமானதா யிருக்கிறது. எனக்கு இப்படிப்பட்ட தீங்குசெய்வதில் அவனுக்கு என்ன பலன் ?

லாயர்.—அது கூறமுடியாது. சிலர் தங்கள் நெருங் கிய சினேகிதர்மேலேயே வெறுப்பு கொள்கிறார்கள். இது தன்சினேகன் தன்னிலும் க்ஷேமமாய் இருப்பதை யாவது, தொழில் முதலியவற்றில் விர்த்தி யடைந்திருப் பதையாவது சகிக்கக்கூடாத பொறாமையால் உண்டா கிறது. பஞ்சநாதன் உன்போல் சித்திரமெழுதக் கற்ற வன். அவன் இன்னும் ஏழையாகவேயிருக்க நீ செல்வ

வந்தனுய்விட்டாய். அவன் விர்த்தியின்றியிருக்க நீ பிரக்யாதிபெற்றவனுயிருக்கிறுய். அவனுக்குப் பொருள் உதவி செய்யும் மேன்மைபெற்றிருக்கிறுய். இதனுலெல்லாம் அவனுக்குச் .சகிக்கமுடியாத பொறுமையுண்டாகி உன் மேல் வெறுப்பை யுண்டாக்கிவிட்டது. இதைவிட அபூர்வமானதை நான் பார்த்திருக்கிறேன்.

குணசுந்தரன்.—அப்படியாயின் நான் என்ன செய்ய வேண்டும் ?

லாயர்.—எல்லா விஷயத்தையும் எனக்கும் பவான்ஸிங்குக்கும் விட்டுவிட்டு நீ தைரியமாயிரு. விவகாரம் பழுதாவதாயிருந்தால் அதிக சூட்சுமபுத்தியுடைய அந்த ஆள் முன்னேயே அதிருப்தி காட்டியிருப்பார். அவருக்குச் சரியான உளவு அகப்பட்டிருக்கிறது. நீ நம்பகமாயிரு. எப்படியும் அந்த ஆள் முடிவைக் கண்டுபிடிக்காமல் விடமாட்டார்.

குணசுந்தரன்.—ஆனுல் அவர் நான் நிரபராதியென்று ருசுப்படுத்திவிடுவாரா ?

லாயர்.—நான் தற்புகழ்ச்சி செய்து கொள்வதாய் நினைக்கவேண்டாம். நான் உன்பக்கம் லாயராகவும், பவான்ஸிங் உண்மைக் குற்றவாளியைக் கண்டுபிடிப்பதற்காகவும் இருக்கிறவரையில், நீ க்ஷேமமாய் முழுகௌரவத்தோடு உன்வீடுபோய்ச் சேர்வாயென்று கூறுகிறேன். உனக்குச் சம்மதமாயின் ஒரு பந்தயம் வைத்துக்கொள்வோம், என்றுர்.

குணசுந்தரன்.—அகத்தியம் அப்படியேகூறும்.

லாயர்.—சரி ! கூறுகிறேன். என் தமையன் மகன் மிக்க யோக்கியமானவன் ஒருவனிருக்கிறுன். அவன் துரைத்தன உத்தியோகத்தில் சொல்பசம்பளத்தி லிருக்கிறுன். அவனுக்கு இருதயவியாதி. டாக்டர் அவன் தக்ஷண

தேசயாத்திரை சென்று ஆறுமாத மங்கிருந்தால்தான் சுகப்படுவானென்று கூறுகிறார். சம்பளத்தை யிழந்து விட்டு அவ்வாறு போயிருக்க அவனிடத்தில் பொரு ளில்லை. நீ இதில் ஜெயமடைந்தால் அவனுடைய யாத்தி ரைக்கு வேண்டிய செலவை நீ கொடுத்துவிடு. இது உனக் குச் சம்மதந்தானா?

குணசுந்தரன் மிக்க சந்தோஷமாய்ச் செய்கிறேன் என்றான்.

அதன் பிறகு லாயர் விடை பெற்றுக்கொண்டு சென் றார். குணசுந்தரன் இதுவரையிலு மிருந்ததைவிட அன்று அதிக சந்தோஷமாயிருந்தான். செஷன்விசாரணை நடக்க ஒருமாத மிருக்கிறது. குணசுந்தரனுக்கு அந்த ஒருமாதம் ஒருயுகமாயிருந்தது. இடைக்கிடையில் லாயரும் பிரபுவும் வந்து அவனைப்பார்த்து தைரியங்கூறிவிட்டுச் சென்றார் கள். கடைசியில் ஒருநாள் துரைராஜப்பிரபுவும் மங்க ளாம்பாளும் சிறைச்சாலைக்கு இவனைக் காணவந்தார்கள். இருவரும் இவன்தேகம் வாட்டமடைந்திருப்பதைப்பற்றி வியாகுலப்பட்டபின்,

மங்களாம்பாள்.—"உமக்காக அமர்த்தப்பட்ட லாயர் கடம்பநாதரை யின்றுதான் கண்டேன்" என்றாள்,

குணசுந்தரன்.—அவரைப்பற்றி யென்ன நினைக்கிறாய்?

மங்களாம்பாள்.—அவர் மிக்க நுட்பமான அறிவுடைய வர். தங்களுக்கு ஒரு குறையுமின்றி விடுதலை கிடைக்குமா வென்று கேட்டேன். அதற்கவர் "அதைத்தான் போகப் போக அறியவேண்டும். ஆனால் ஒரு வாக்குத்தத்தம் நான் ஸ்திரமாய்க் கூறக்கூடும். அதாவது அடுத்தமாதம் வரும் பண்டிகை யன்றைக்கு வீட்டில் நீங்கள் இருவரும் சந் தோஷமாய் ஒரேபந்தியில் போசனம்செய்வீர்கள்" என்று கூறினார்.

இதைக்கேட்ட குணசுந்தரனுக்குப் பின்னும் மறு தைரியமும் சந்தோஷமும் உண்டாயிற்று. குணசுந்தர னுக்கு ஏற்கனவே ஒரு தைரியம் மனதிலுண்டு. அதா வது, வேட்டைக்குச்சென்று வழிதப்பியபோது அடவியில் நித்தியானந்த சுவாமிகள் "உனக்கு ஒரு அபாண்டமான பிராணபத்துவரும், ஆனால் அது நீங்கிவிடும்" என்று கூறியது அவன் மனதைவிட்டு நீங்கவில்லை. பிறகு வீட்டி லுள்ள மற்றபேர்களின் சுகக்ஷேமங்களைப்பற்றிப் பேசிக் கொண்டார்கள். அவன் தாயார் அவன் நிரபராதியென்று தனக்குப் பூரணநம்பிக்கை யுண்டென்றும், ஆகையால் என்ன ஆபத்துவரினும முடிவில் விடுதலை யடைவானென் றும் வாழ்த்தியதாகவும, அந்தம்மாள் துயரமாயிருப்ப தால் தான் கூடவே நேற்றுதல் கூறிக்கொண் டிருப்பதாக வும மங்களவல்லி கூறினாள்.

துரைராஜப் பிரபு தன் புத்திரியைநோக்கி, "நேர மாய்விட்டது. இனி ஆலசியம்செய்வது மரியாதையல்ல நாம் உடனே போய்விடவேண்டும்" என்று எச்சரிக்கை செய்துவிட்டு குணசுந்தரனைநோக்கி, "நீ சற்றும் அதைரி யப்படவேண்டாம். நீ நிரபராதியென்று எங்களுக்கெல் லாம் நன்றாய்த்தெரியும. கடவுள் உன்னை யொருபோதும் கைவிடமாட்டார். நாங்கள் எப்படியும் உன் நிரபராதத் தன்மையை ருசுப்படுத்துவோம். பவான்ஸிங் உண்மை யாய்க்கொன்றவனை ருசுவோடு பிடிக்காமல் விடமாட்டா னென்று கடம்பநாதர் உறுதியாய்க்கூறுகிறார். நீ எதற்கும் பயப்படாதே" என்று தைரியம் கூறிவிட்டுத் தன் புதல் வியை யழைத்துக்கொண்டு சென்றார்.

---

## 11-வது அத்தியாயம்

**பவான்ஸிங்கின் செய்கைகள்—மிக்க அற்பமான உளவு—எச்சை ஸிகாரெட்—குணசுந்தரன்வீட்டில் பவான்ஸிங்.**

குணசுந்தரனிடம் நடந்த சங்கதிகளை விசாரித்துக் கொண்டு சென்ற பவான்ஸிங் என்னசெய்கிறான் என்று கவனிப்போம்.

பவான்ஸிங் அன்றிரவு போஜனம்செய்தபின் சுமார் பத்துமணிக்குத் தன் அறையிலுட்கார்ந்துகொண்டு நெடு நேரம் என்னமோ சிந்தித்துக்கொண்டே யிருந்து, திடீரென்று நிமிர்ந்து, "அடடா! மனிதர் ஒவ்வொரு சமயத்தில் என்ன முட்டாள்தனம் செய்துவிடுகிறார்கள். பிறகு மரப்பிளவில் காலை நீட்டி ஆப்பைப்பிடுங்கிவிட்டு விழிக்கும் குரங்குபோல் அவதிப்படுகிறார்கள். இவன் தான் சிறைப் பட்டு தூக்குமரத்தண்டைநின்று கழுத்தில் கயிற்றை மாட்டிக்கொள்ளப் பிரியப்பட்டவனா யிருந்தால் இதைவிட அதிகமாய்ச் செய்யவேண்டியதில்லை. அவள் அழுகிற வரையில் வீதியில் அவளோடு நின்று பேசிக்கொண்டிருக்கிறது, பிறகு வண்டிபேசி யவளோடு ஏறிக்கொண்டு போகிறது, அங்கே வழியில்போகும் போலீஸ்காரன் சுலபமாய் அடையாளம் தெரிந்துகொள்ள இராந்தல் எதிரில்சென்று முகத்தை வெளிச்சத்தில் காட்டிக்கொண்டு நிற்கிறது, அங்கிருந்து ஹோட்டலுக்குத் திரும்பிப்போய் காவற்காரனிடம் கலவரமடைந்த முகத்தோடு பேசுகிறது, அடடா என்னமூடத்தனம். இவையனைத்தும் தற்செயலாய் சம்பவித்ததென்று யார் நம்புவார்கள். அப்படி யிருந்தாலும் அந்தக்கொலையை யிவன் செய்யவில்லை. எனக்கு இருக்கும் அனுபோகத்தின்படி இவன் முகம்

குற்றம்செய்தவன் முகமல்ல. நானோ முன்னேகுற்றம் நடந்தவிடத்தைப் போய் சோதித்துப் பார்க்கவேண்டும். அதன்பிறகு என்வேலையைத்தொடங்கவேண்டும். எனக்கு முன்னே போலீஸார்போய் அந்தவிடத்தைச் சோதனை செய்திருந்தாலும் எனக்கு ஏதாவது ஒரு உளவு அகப்படும் என்றே நம்புகிறேன்" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான்.

பவான்ஸிங் தனியே தொழில்செய்பவன். போலீஸாரால் கண்டுபிடிக்கமுடியாத கேஸுகளையெல்லாம் அவன் கண்டுபிடித்திருக்கிறான். இதனால் போலீஸாருக்கு எப்போதும் அவன்மேல் பொறாமை. அவன் தீர்மானித்தபடியே மறுநாள் காலையில் போஜனம் செய்துகொண்டதும் தச்சுவாடி வீதியைநோக்கிச் சென்றான். அங்கு சென்றதும் கொலைநடந்த வீட்டிற்குள் நுழைந்து அங்கு நின்றிருந்த காவலனைநோக்கி வீட்டுக்காரர் எங்கே யென்று கேட்டான். அதற்கு அம்மனிதன் ஒன்றும் கூறாமல் உடனே வீட்டுக்காரன் இருக்கும் அறைக்குச் சென்று, அவனை யழைத்துவந்து பவான்ஸிங் எதிரில்விட்டு, இவர்தான் வீட்டிற்குடையவர் என்றான். வீட்டுக்காரன் ஒரு அன்னியதேசத்தான். அவன் பவான்ஸிங்கை உற்று நோக்கிக்கொண்டே,

"என்றால் என்ன ஆகவேண்டுமையா? நீர் யார்?" என்றான்.

பவான்ஸிங்.—"ஐயா, இவ்வீட்டில் தையநாயகம் என்ற கன்னிகை கொல்லப்பட்டாளல்லவா. அந்த அறையை நான் பார்வையிடவேண்டும்" என்றான்.

இதைக்கேட்ட வீட்டுக்காரன் இதென்னடா சனியன்! என்னேரம்பார்த்தாலும் கொலைநடந்த வீட்டைப் பார்க்கவேண்டும், கொலைநடந்த வீட்டைப் பார்க்கவேண்

டும் என்றே எல்லாரும் அவதிசெய்கிறார்கள். எனக்குப் போதுமென்றாய்விட்டது. என்னையும் கொன்றுவிடுவார்கள்போலிருக்கிறது. இப்போது நீர்வந்து கேட்கிறீர். நீர் யாரையா ?'' என்று கடுகடுத்துக் கேட்டான்.

பவான்சிங்.—சாந்தமாகவே, "ஐயா நான் ஒரு துப்பறியும் உத்தியோகஸ்தன். இப்போது அநியாயமாய் நிரபராதியாகிய ஒருவன்மேல் அபாண்டமாய்ப் பழி சுமத்தியிருக்கிறார்கள். நான் அவனைக் காப்பாற்றவேண்டும். உண்மையாகிய கொலையாளியைக் கண்டுபிடித்தாலொழிய அவனைக் காப்பாற்றமுடியாது. அதற்காக ஏதாவது உளவு அகப்படுமென்று கொலைநடந்த விடத்தைப் பார்க்கவந்தேன்'' என்று கூறினான்.

இதைக்கேட்ட வீட்டுக்காரன் கோபம் தணிந்து, உடனே அவனை அழைத்துக்கொண்டுபோய் தன்னிடமிருந்த சாவியால் அறையைத்திறந்து, "ஐயா இதில்தான் அப்பெண் கொல்லப்பட்டுக் கிடந்தது. என்னால் கூடிய வரையில் இதைச் சுத்தி செய்தும் இந்த இரத்தக்கறை போகவில்லை. அன்றுமுதல் இதை மூடியே வைத்திருந்தேன்'' என்று தரையிலிருந்த இரத்தக் கறையைச் சுட்டிக் காட்டிவிட்டு கொலை நடந்ததால் தன் மனதிலுண்டான அபிப்பிராயங்களையெல்லாம் கூறினான்.

இன்னொருவராயிருந்தால் அவன் பேச்சைச் சட்டை செய்யமாட்டார்கள். பவான்ஸிங்கோ அதிக அற்பமான சங்கதியிலும் ஏதாவது உளவு அகப்படக்கூடும் என்ற யோசனையால் அவன் பேச்சையெல்லாம் கேட்டபடியே அறைமுழுதும் பார்த்துக்கொண்டிருந்தான். வீட்டுக்காரன் தன்மனதிற் பட்டதையெல்லாம் கூறிவிட்டு பவான்ஸிங்கை நோக்கி, "போகும்போது அறையைப் பூட்டி

விட்டுச் சாவியை என்னிடம் கொடுத்துவிட்டுப்போம்" என்று கூறிவிட்டுத் தன் அறைக்குச் சென்றான்.

வீட்டுக்காரன் சென்றபின் பவான்ஸிங் அறையின் கதவை மூடிவிட்டுத் தன் மடியிலிருந்த பூதக்கண்ணாடியை எடுத்து தரையில் முழங்காலிட்டுக்கொண்டு குனிந்து அறை முழுதும் பார்த்தான். இன்னதைத் தேடவேண்டு மென்று ஒன்றை யுத்தேசித்துப் பார்த்தவனல்ல. நீண்ட அனுபவத்தால் எதிர்பாராத விடங்களில்கூட ஏதாவது உளவு அகப்படக்கூடும் என்ற சித்தாந்தத்தின்மேல் அவ்வாறு பார்த்தான். கடைசியில் எழுந்து "இங்கொன்று மில்லை. ஏதாவதிருந்தாலும் இவர்கள் தேய்த்துக் கழுவியதால் போய்விட்டிருக்கும்" என்று கூறிவிட்டு நெருப்பண்டை சென்று பார்த்தான். அங்கும் சாம்பல்கூட இல்லாமல் நன்றாய்த் துடைத்துவிட்டிருந்தது. அதன் பிறகு சாளரத்தண்டைசென்று வெளியில் பார்த்தான். சாளரத்தின் பக்கத்தில் சாய்வான தாழ்வாரம் இருந்தது. தாழ்வாரத்தின் கூறையோரத்தில் நெடுகத் தகரக் குழாய் போடப்பட்டிருந்தது. சாளரத்திலிருந்து வீதி தெரிய வேண்டுமென்றால் அதிகமாய் எட்டிப்பார்க்கவேண்டும். சாளரத்திற்கு நேராய் எதிர்வாடையில் இருக்கும் வீட்டின் மெத்தை தெரிந்தது. பவான்ஸிங் "யோசித்துப் பார்ப்போம். இச்சாளரத்திற்கு திரையுமில்லை; எதிர் வீட்டு மெத்தைமேலிருந்து பார்த்தால் இந்த அறையில் நடப்பதெல்லாம் தெரியும். அப்படி யாராவது பார்த்திருந்தால் இதுவரையில் வெளிக்கு வந்திருப்பார்கள். எதற்கும் விசாரித்துப் பார்ப்பது நலம்" என்று தனக்குத் தானே கூறிக்கொண்டே இருந்தவன், தாழ்வாரத்தின் ஓட்டின்மேல் எதையோ கண்டு திடுக்கிட்டான். அவன்

மேல் தகரக்குழாயோரத்தில் பிடித்து எறிந்துவிட்ட ஒரு ஸிகாரெட் துண்டு கிடந்தது.

பவான்ஸிங் அந்த ஸிகாரெட் துண்டைக் கண்டதே "ஆ! இதுவும் அதிஷ்டமே!" என்று கூறிவிட்டு தன் மடியிலிருந்த ஒரு சிறு தோற்பையை எடுத்தான். அதில் சிறிதும் பெரிதுமான ஊசிகள், கத்தி, சுத்தரிக்கோல் முதலிய பல சில்லரைக் கருவிகளிருந்தன. அவைகளிலிருந்து ஒரு நீண்ட ஊசியை எடுத்துத் தன் கைத்தடியின் முனையில் கட்டி சாளரத்தின் ஓரத்திலிருந்தபடி எட்டிக்குனிந்து, அந்த ஸிகாரெட் துண்டை ஊசியில் குத்தி எடுத்துக் கொண்டான். அதைக் கொண்டுபோய் மேஜைமேல் வைத்து பூதக்கண்ணாடியால் நன்றாய்ப் பார்த்தான். அச் சுருட்டுத் துண்டு நிறம் மாறியிருந்தாலும் அதன்மேல் சில எழுத்துக்கள் தெரிந்தன.

"—த்ருடீன் கம்பெனி கெய்ரோ" என்று அதன் மேல் இருந்ததால், அது கெய்ரோவில் செய்யப்பட்ட தென்றும், செய்த கம்பெனியின் பெயர் த்ருடீன் என்ற நான்கு எழுத்துகளோடு முடிவாகிறதென்றும் தெரிந்தது.

"ஆ! இதனால் நன்மையுண்டோ என்னமோ பார்க்க வேண்டும். இது சரியான விடத்திற்கே கொண்டுபோய் விடுமென்று என் மனதிற் படுகிறது. கடவுள் தயவு எப் படி யிருக்கிறதோ அறியவேண்டும்" என்றான்.

பவான்ஸிங் அச்சுருட்டை ஒரு காகிதத்தில் மடித்து மிகவும் பத்திரமாய் மடியில் வைத்துக்கொண்டு, அறையில் வேறொன்றும் பிரயோசனமானது இல்லையென்று இன்னு மொருதரம் நன்றாய்ப் பார்த்துவிட்டு, அறையை மூடிப் பூட்டிக்கொண்டு சாவியை வீட்டுக்காரனிடம் கொடுத்து விட்டு வெளியில் புறப்பட்டான். அங்கிருந்து நேராய் எதிர் வீட்டிற்குள் நுழைந்து அவ்வீட்டின் மேல்மாடியில்

இருப்பவர்களைக்கண்டு, "கொலை நடந்த இரவு அந்த அறையில் ஏதாவது சத்தம் முதலியவை கேட்டதா? அங்கு யாராவது வந்திருந்ததைக் கண்டீர்களா?" என்று விசாரித்தான். அதற்கு அவர்கள் ஒரு சங்கதியும் தெரியாதென்று கூறிவிட்டார்கள். பவான்ஸிங் சரி, இனி இங்கே கேட்பதில் ஒரு பயனுமில்லையென்று, அதைவிட்டு வீதியில் வந்து நின்று சற்று நேரம் என்னமோ சிந்தித்தான். கடைசியில் மனதில் ஏதோ தீர்மானம் செய்துகொண்டவன்போல் வண்டிகளிருக்கு மிடத்திற்குச் சென்று ஒரு வண்டி பேசி ஏறிக்கொண்டு நேராய் சாலைத் தெருவிற்கு ஓட்டி என்றான்.

அந்த வீதியின் கோடியில் சென்றதே, வண்டியை விட்டிறங்கி வண்டிக்காரனுக்கு சத்தத்தை யளித்துவிட்டு, ஒரு சந்துவழியே நடந்தான். அந்தப்பாகம் சாதாரண மனிதர்கள் வசிக்கும் பாகமாயிருந்தது. இரண்டு மூன்று சிறு வீதிகளைக் கடந்தபின் ஒரு வீதியில் வலது பக்கம் இருக்கும் வீடுகளின் இலக்கத்தைப் பார்த்துக்கொண்டே சென்று கடைசியில் 32-வது இலக்க வீட்டிற்குள் நுழைந்தான்.

அவ்வீட்டின் கூடத்திலுள்ள படிக்கட்டுகளில் ஏறி மேல்மாடிக்குச் சென்று அங்குள்ள ஒரு அறையின் கதவைத் தட்டினான். அந்த அறையின் கதவில் ஜெகந்நாதராவ், சுருட்டு வர்த்தகர் என்றெழுதிய ஒரு பலகை மாட்டப்பட்டிருந்தது. கதவைத் தட்டிய சத்தம் கேட்டு ஒரு சிறுவன் வந்து திறந்து "என்ன ஐயா?" என்றான். பவான்ஸிங், ஜெகந்நாதராவ் இருக்கிறாரா? என்று கேட்க, அச்சிறுவன் இருக்கிறார் என்றான்.

பவான்ஸிங் வந்திருக்கிறார் என்று கூறு என்றதே, அவன் உள்ளேசென்று மறுபடி வந்து உள்ளே வரச்

சொன்னார் என்றான். பவான்ஸிங் உள்ளே செல்வதற்குள் ஜெகந்நாதராவே வந்து, ஆ! வாருங்கள் வாருங்கள் என்று அவனை உள்ளே அழைத்துச் சென்றான். உள்ளே ஒரு விசாலமான கூடம்போன்ற அறையும், அதற்குள் இரண்டு அறைகளுமிருந்தன. அங்கிருந்த நாற்காலிகளில் இருவரும் உட்கார்ந்தபின், ஜெகந்நாதராவ் "என்ன சங்கதி? என்னாலாகவேண்டிய வேலை ஏதாவதிருந்தால் செய்ய மிக்க சந்தோஷமுடையவனா யிருப்பேன்" என்றான்.

பவான்ஸிங்.—"உன்னால் ஒரு உதவி வேண்டும்" என்று கூறிக்கொண்டே மடியிலிருந்த பொட்டணத்தை எடுத்து மெதுவாய்ப் பிறித்து சுருட்டுத் துண்டை எடுத்து எதிரேயிருந்த மேஜைமேல் வைத்து, "இது எங்கு செய்யப்பட்ட ஸிகாரெட்? எந்தெந்த ஊர்களில் அகப்படும்? நமது நகரத்தில் எந்தக் கடைகளில் கிடைக்கும்? இதன் குணம் விலை முதலியவை என்ன? தயவுசெய்து இந்த விபரங்களைக் கூறவேண்டும். இந்த விஷயத்தில் உம்மிடம் அதிக அனுபவமிருக்கிறதல்லவா?" என்றான்.

ஜெகந்நாதராவ்.—"ஹும். ஸிகாரெட், சுருட்டு ஏதானாலும் சரி. இந்த விடத்தில் விளைந்தது, இங்கு செய்யப்பட்டது, என்று நான் கண்டறியக்கூடாத புகையிலை இல்லவேயில்லை. புகையிலைகளின் குணவித்தியாசங்களைப் பற்றியும், அவைகளின் குணங்களைக் கண்டு பிடிக்கும் வழியைப் பற்றியும் ஒரு பெரிய புத்தகம் எழுதிக்கொண்டிருக்கிறேன்" என்று கூறிவிட்டு, மூக்கில் கண்ணாடியைப் போட்டுக்கொண்டு பவான்ஸிங் காட்டிய சுருட்டை எடுத்து சற்றுநேரம் பார்த்தான். அதை முகர்ந்துபார்த்துக் கடைசியில் பவான்ஸிங்கை நோக்கி,

"இந்த ஸிகாரெட் என் நண்பனான யாகூப் பத்ருடீன்

என்பவனால் செய்யப்பட்டது. அவனுடைய கம்பெனி கெய்ரோவிலிருக்கிறது. அது பேர்பெற்ற கம்பெனி. நமது நகரத்தில் அதற்கு ஏஜென்ட் கிடையாது. கூடிய சீக்கிரத்தில் ஏற்பாடாகும்" என்றான்.

பவான்ஸிங்.—இந்த ஸிகாரெட் அகப்படும் இடங்களில் இவ்வூருக்குச் சமீபத்திலிருக்குமிடம் எது ?

ஜெகந்நாதராவ்.—பருதிபுரத்தில் கிடைக்கும்; வேண்டுமானால் அங்கே இதை விற்கும் வர்த்தகனுடைய விலாசத்தைத் தருகிறேன், அல்லது கொஞ்சம் வரவழைத்துத் தருகிறேன். அது கொஞ்சம் அதிக விலையே. ஆனால் புகையிலை நேர்த்தியானது.

பவான்ஸிங்.—"மிக்கவந்தனம். எனக்கு வரவழைத்துத் தரவேண்டுவதில்லை. விற்குமிடமே தெரியவேண்டியது. மேல்விலாசத்தை மட்டும் எழுதித்தந்தால் போதும்" என்றான்.

ஜெகந்நாதராவ் அவ்வாறே எழுதிக்கொடுக்க பவான்ஸிங் அதை வாங்கிக்கொண்டு அவனுக்கு வந்தனமளித்து அங்கிருந்து தன் விடுதிக்குச் சென்றான். பாதையில் "நாளைக்கு குணசுந்தரன் வீட்டைப்போய் பார்த்துவிட்டு அங்கே இரண்டொரு சங்கதி விசாரித்துக்கொண்டு உடனே பருதிபுரத்திற்குப் புறப்படவேண்டும். நமது வேலை அங்கிருந்தே தொடங்கவேண்டும்" என்று தனக்குத் தானே கூறிக்கொண்டே நடந்தான்.

செய்துகொண்ட தீர்மானத்தின்படி பவான்ஸிங் மறுநாள் பகல் வண்டிக்குப் புறப்பட்டு ஓதேசூர் சேர்ந்து நேராய் குணசுந்தரன் மாளிகைக்குச் சென்றான். அந்த மாளிகையின் பெருமையையும் செல்வாக்கையும் கண்டபோது "அடடா! இப்படிப்பட்ட மாளிகையும் பூஸ்திதியும் உடையவன், எதிலும் குறைவில்லாத செல்வவந்தன்,

யாவராலும் நன்கு மதிக்கப்பட்டவன், இவன் இப்படிப் பட்ட பிராணுபத்தில் சிக்கிக் கொள்வதென்றால் என்னென்று கூறுவது? ஆன்றோர் கூறியுள்ளவாறு வினையின் பயன் யாரையும் விடாது. எப்படியிருந்தாலும் இவனை மீட்டுவிடவேண்டியது நமது கடமை. நமக்குக் கடவுள் தான் துணைசெய்யவேண்டும். மற்ற சங்கதிகளைப்பற்றி நமக்கு அக்கரையில்லை" என்று தனக்குத் தானே சிந்தித்துக்கொண்டான்.

பவான்ஸிங் வீட்டிற்குள் சென்று குணசுந்தரன் தாயாரைக்கண்டபோது கிருஷ்ணுபாயும் அங்கேயிருந்தாள். குணசுந்தரன் தாயார் அவனை நோக்கி "என்ன சங்கதி! ஏதாவது சந்தோஷ சமாசாரம் உண்டா"? என்று வினவினுள்.

பவான்ஸிங் எச்சரிக்கையோடு தலையசைத்து "அம்மா! இத்தகைய கேசுகளில் படுக்கதே சககாலத்தில் எல்லாம் அகப்பட்டுவிடுமென்று நினைக்கலாகாது. இப்படிப்பட்ட கேசுகளில் ருசுவுகளெல்லாம் ஒழுங்காயும் களங்கமில்லாமலும் கோர்வையாயும் இருக்கவேண்டும். இப்போது எல்லாம் விடுகதைபோல் அங்குமிங்கும் துண்டு துண்டாய் மறைந்து கிடக்கின்றன. யாவற்றையும் ஒன்றுவிடாமல் கிளரி எடுத்து வரிசைக்கிரமமாய்க் கோர்த்துக் காட்டவேண்டும். அப்படி கோர்ப்பதற்கு முன் ஒவ்வொன்றையும் நாம் நன்றாய்ப் பார்த்து தெரிந்து கொள்ளவேண்டும். அப்படித் தெரிந்துகொண்டபின்பு தான் வரிசையாய்க் கோர்க்கவேண்டும்" என்றான்.

கிருஷ்ணுபாய் யாவற்றையும் கவனமாய்க் கேட்டபின் தன் தாயை நோக்கி, அம்மா இவர் கூறுவது முழுதும் சரியாயிருக்கிறது. நாம் அவசரப்படாமல் பொறுமையாயிருக்கவேண்டும். தமையன் நிரபராதியென்று நமக்குத்

தெரியும். இவர் எப்படியும் அதை நிரூபித்து விடுவார்" என்று கூறிவிட்டு பவான்ஸிங்கை நோக்கி "தாங்கள் இங்குவந்தவரையில் எங்களை ஏதோ கேட்டறிந்துகொள்ள விருப்பங்கொண்டு வந்ததாகவே இருக்கவேண்டும். என்ன கேட்கவேண்டுமோ கேட்டால் நானும் என் தாயாரும் அறிந்தமட்டும் கூறுகிறோம்" என்றாள்.

பவான்ஸிங்.—"ஆம். நான் அறிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள் இரண்டொன்று இருக்கின்றன: இதற்கிடையில் இந்த வீடு முழுதும் சுற்றிப் பார்க்கும்படி எனக்கு அனுமதிதரவேண்டும். முக்கியமாய் குணசுந்தரன் அறையில் நன்றாய்ப் பார்த்தால் அவனுக்கு அனுகூலமானது ஏதாவது அகப்படக்கூடும்" என்றான்.

கிருஷ்ணபாயின் தாயார்.—எங்கெங்கே பார்க்கப் பிரியமுண்டோ அங்கெல்லாம் பாரும். ஒரு தடவையுமில்லை என் புதல்வனைக் காப்பாற்றிவிட்டால் மரணபரியந்தம் இந் நன்றியை நாங்கள் மறக்கவே மாட்டோம்.

பவான்ஸிங்.—அம்மா நான் எப்படியாவது அவனைக் காப்பாற்ற என்னால் கூடிய முயற்சியெல்லாம் செய்வேன். இப்போது அதற்குமேல் கூறமாட்டேன்.

கிருஷ்ணபாய் எழுந்து "வாரும் என் தமையன் அறையைக் காட்டுகிறேன்" என்றாள். பவான்ஸிங் அவ்வாறே எழுந்து அவளோடு செல்ல அவள் அவனை அங்கு தனியே விட்டுச் சென்றாள்.

பவான்ஸிங் சுமார் அரைமணிநேரம் அந்த அறையில் இருந்து, பிறகு வெளியிலிருந்த தோட்டத்திற்குச்சென்று அங்கிருந்த ஆட்களோடு சற்று பேசிக்கொண்டிருந்து வீட்டிற்குள் வந்தான். அப்போது போஜனவேளையானதால் யாவரும் போஜனம் செய்தார்கள்.

போஜனம் முடிந்தபின் அவன் அறையிலுட்கார்ந்து

சிந்தித்துக்கொண்டிருந்தான். அப்போது கிருஷ்ணுபாய் அங்குவந்தாள். பவான்ஸிங் அவளை நோக்கி ஒரு ஸிகாரெட் கிடைக்குமா?'' என்றான்.

கிருஷ்ணுபாய் வியப்படைந்து "சிகாரெட்டா ? அதுதான் மோசம். என் தமையன் அதை உபயோகிப்பதேயில்லை. இந்தச் சங்கடம் வருவதற்குமுந்தி தன் சிநேகிதர்களுக்காக வாங்கிவைத்திருந்த ஸிகாரெட் ஆய்விட்டதென்று கூறினார்'' என்று சொல்லிவிட்டு, மறுபடி சிந்தித்து ஏதோ நினைப்பிற்கு வந்ததுபோல, "ஆ! இப்போ கவனத்திற்கு வந்தது. ஒரு பெட்டி ஸிகாரெட் இருக்கிறது. பஞ்சநாதன் இங்கே வைத்துவிட்டுப் போய்விட்டான். அதைக்கொண்டு வருகிறேன்'' என்றாள்.

பவான்ஸிங் மிகவும் சந்தோஷம் என்றான்.

கிருஷ்ணுபாய் உடனே சென்று ஒரு பெட்டி ஸிகாரெட் கொண்டுவந்து அவனிடம் அளித்தாள். அது புதாமாய் கட்டையாயிருந்தது. மேலே "யாகூப் பத்ருடீன் கம்பெனி—கெய்ரோ'' என்று அச்சடித்திருந்தது.

பவான்ஸிங் அப்பெட்டியைத் திருப்பித் திருப்பிப் பார்த்துவிட்டு, "இதைப் பஞ்சநாதன் உன் தமையனுக்குக் கொடுத்தானென்று கூறினையல்லவா ?'' என்றான்.

அக்கன்னிகை.—ஆம், என் தமையனுக்கு ஸிகாரெட் என்றால் வெறுப்பானதால் இந்த ஸிகாரெட்டைப் பிடித்தால் மறுபடி யதை விடவே மாட்டாயென்று கூறிக் கொடுத்தான். நீர் பஞ்சநாதனைப் பார்த்திருக்கிறீரல்லவா?

பவானஸிங்.—"விசாரணை நடந்த விடத்தில் பார்த்தேன். சரி நான் வந்த வேலை முடிந்தது. உடனே நகரத்திற்குப் போகவேண்டும். அங்கே கவனிக்கவேண்டிய வேலை எவ்வளவோ 'இருக்கின்றன'' என்றான்.

கிருஷ்ணபாய் சற்று மௌனமாயிருந்து பிறகு அவன் முகத்தை நோக்கி,

"ஐயா! இந்தச் சங்கடத்தால் எங்கள் மனம் எவ்வளவு வேதனையிலிருக்கு மென்பதைத் தாங்களே அறியலாம். நான் முன் கூறியபடி என் தமையன் நிரபராதி என்பது தங்களுக்குத் தெரியும். ஆனால் தாங்கள் அதை நிரூபிக்கக் கூடும் என்று நினைக்கிறீர்களா? தாங்கள் எத்தனையோ அபூர்வமானவைகளை யெல்லாம் கண்டுபிடித்திருக்கிறீர்கள். எங்களுக்குச் சற்று தைரியமான வார்த்தை கூறிச்சென்றால் நம்பிக்கையாயிருப்போம்" என்றாள்.

பவான்ஸிங்.—இப்போது என்ன கூறுவதென்று எனக்குத் தெரியவில்லை. எனக்குள் ஏதோ சித்தாந்தம் ஏற்பட்டிருந்தாலும், தக்க ருசு அகப்படுந்தனினும் அதை வெளியில் கூறக்கூடாது. ஆனால் ஒன்று கூறுகிறேன். இதுவரையில் நான் எதிர் பார்த்ததைவிட அதிக ஜெயம் அடைந்து வருகிறேன். உன்னைப்போலவே உன் தமையன் நிரபராதி என்பதே என அபிப்பிராயமும். அதை ருசுப்படுத்தாவிட்டால் அது என் தப்பிதமாயிராது. இதோடு திருபதி யடைந்திரு. என்னிடம் பழக்கமுள்ளவர்களுக்கு நான் இவ்வளவு கூறினால் என்ன நடப்பதென்று அவர்கள் தெரிந்துகொள்வார்கள்.

கிருஷ்ணபாய்.—இவ்வளவு கூறியதற்கு எவ்வளவோ வந்தனமளிக்கிறேன். நீர் கூறியதை மங்களாம்பாளுக்கும் கூறட்டுமா?

பவான்ஸிங்.—"ஆகா கூறு. அவள் உன்போல் தைரியசாலி அல்ல; இனி நான் போய் வருகிறேன். இரயில்வரும் வேளை நெருங்கிவிட்டது" என்று கூறிவிட்டு உடனே புறப்பட்டு ஸ்டேஷனுக்குச் சென்றான்.

---

## 12-வது அத்தியாயம்

**பவான்ஸிங்கின் சுற்றுப்பிரயாணம்—ஒவ்வொன்றாய் அகப்படும் மிக்க ஆச்சரியமான உளவுகள்—உண்மையான குற்றவாளி கொஞ்சம் கொஞ்சமாய் வெளிக்கு வருகிறன்—வழியில் ஓர் புண்ணியச் செயல்.**

முன் அத்தியாயத்தில் கூறிய சம்பவங்கள் நடந்த மூன்முவது நாள் காலை பவான்ஸிங் பருதிபுரம் போய்ச் சேர்ந்தான். அன்றையதினம் தன் சிநேகிதன் ஒருவன் வீட்டிலிறங்கியிருந்தான்.

மறுநாள் காலையில் எழுந்து பவான்ஸிங் தன் காலைக் கடன்களை முடித்துக்கொண்டதே தன் நண்பன் ஜெகந்நாதராவ் கூறிய வர்த்தகரைக் காணச்சென்முன். அந்த வர்த்தகர் ஜெகந்நாதராவின் க்ஷேமத்தைப்பற்றி மிக்க அக்கரையாய் விசாரித்தபின் பவான்ஸிங்கை நோக்கி, "தாங்கள் என்ன வேலையாய் இங்கு வந்தீரோ? என் சிநேகிதர் ஜெகந்நாதராவ் அனுப்பியவரையில் என்னுல் ஆகக்கூடிய உதவி எதுவாயிருந்தாலும் செய்ய மிக்க சந்தோஷமுடையவனுயிருக்கிறேன்" என்முர். பவான்ஸிங் உடனே தான்வந்த விஷயத்தை விவரமாய்க் கூறிக் கடைசியில் தன்னிடமிருந்த துண்டு ஸிகாரெட்டை எடுத்து அவ்வர்த்தகர் கையில் கொடுத்தான்.

வர்த்தகர் அதை வாங்கிப் பார்த்து, இது கெய்ரோவிலிருக்கும் யாகூப் பத்ருடீன் கம்பெனியார் சுருட்டுதான் அதற்கு இந்நகரத்தில் நாங்கள் ஒருவரே ஏஜெண்டாயிருக்கிறேம்" என்முர்.

பவான்ஸிங்.—"தங்களிடம் இந்த ஸிகாரெட்டை வாங்கும் ஆசாமிகளில் பஞ்சநாதன் என்று யாராவதிருக்கிமுர்களா ?" என்று கேட்க,

வர்த்தகர் உடனே ஒரு குமஸ்தாவை யழைத்து வெளியூர் பேரேடு கணக்கு புஸ்தகத்தைக் கொண்டுவா என்றார். அவ்வாறே புஸ்தகம் வந்தவுடன் அதைத் திறந்து பார்த்து "ஆம், பஞ்சநாதன் என்று இரத்தினபுரி வாசி ஒருவரிருக்கிறார்" என்றார்.

பவான்ஸிங்.—"அந்த ஆள் கடைசி தரம் இம்மாதிரி ஸிகாரெட் எப்போது வாங்கினான் கூறக்கூடுமா? என்று கேட்டதற்கு,

வர்த்தகர் புத்தகத்தைப் பார்த்து, "கடைசிதரம் ஒரு மாதத்திற்குமுன் அவர் இரத்தினபுரியிலிருந்து அனுப்பிய ஆர்டரின்படி ஒரு பெட்டி ஸிகாரெட் அனுப்பப்பட்டிருக்கிறது" என்றார்.

பவான்ஸிங் ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்து, அவன் ஒருமாதத்திற்கு முந்தி இரத்தினபுரியிலிருந்து கடிதம் எழுதியிருக்கிறானென்று கூறுகிறீர்? அதைப்பார்க்கலாமா?" என்றான்.

வர்த்தகர் உடனே சென்று கடிதத்தைக் கொண்டுவந்து பவான்ஸிங்கினிடம் கொடுத்தார். பவான்ஸிங் அதை வாசித்துப்பார்த்து, "என்ன அதிசயம்! நான் கோரியதைவிட அதிக அதிஷ்டமே எனக்குக் கிடைக்கிறது" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டு, வர்த்தகரை நோக்கி, "இக்கடிதம் என் வசத்தில் கொஞ்சகாலம் இருக்கும்படி அனுமதியளித்தால் பிறகு இதைப் பத்திரமாய்த் தங்களுக்கு அனுப்பிவிடுகிறேன்" என்றான்.

வர்த்தகர் அவ்வாறே அனுமதியளிக்க பவான்ஸிங் அவருக்கு மிக்க வந்தனமளித்து விடைபெற்றுக்கொண்டு சென்றான். அன்று இரவு பருதிபுரத்தைவிட்டு நவீனபுரிக்குப் பிரயாணமானான்.

பவான்ஸிங் மறுநாள் இரவு ஒன்பது மணிக்கு நவீன

புரி சேர்ந்தான். அன்றிரவு ஒரு ஹோட்டலில் இருந்து மறுநாள் காலைப்போஜனம் செய்து முடிந்ததும் தெய்வ நாயகம் வசித்துக்கொண்டிருந்த வீதிக்குச் சென்றான். அத்தேச பாஷைத் தனக்கு நன்றாய்த் தெரியாததால் ஒரு துவிபாஷகனை அழைத்துக்கொண்டு சென்றான். இரண்டொரு வீதிகளில் கேட்டலைந்தபின் கடைசியில் தெய்வ நாயகியும் அவள் தாயும் வசித்துக்கொண்டிருந்த வீட்டைக் கண்டுபிடித்தார்கள். அந்தவீட்டின் முதலாளியைக் கண்டு விசாரித்தபோது அவன் கிழவி இறந்துபோய்விட்டாள்'' என்றான்.

மகள் எங்கு சென்றாள் என்று கேட்டதற்கு "போய் விட்டாள். இரத்தினபுரியிலிருந்து யாரோ ஒருவன் வந்திருந்தான். அவனோடு கூடப்போய்விட்டாள். அவ்வளவே தெரியும்'' என்றான்.

பவான்ஸிங் அச்சமயம் தன் சேபியிலிருக்கும் பணத்தைக் கலகலவென்று ஆட்டிக்கொண்டே துவிபாஷகனை நோக்கி "அந்த மனிதனைப் பார்த்தால் தெரிந்துகொள்வானா கேள். இவன் நமக்குத் திருப்தியான உண்மை சங்கதி கூறினால் நல்லவெகுமதி தருவேனென்று கூறு'' என்றான்.

அதன்பின் துவிபாஷகனும் வீட்டுக்காரனும் பத்து நிமிஷங்கள்வரையில் பேசியபின் துவிபாஷகன் பவான்ஸிங்கை நோக்கி, "நூறுபேரின் மத்தியிலிருந்தாலும் அம்மனிதனைத் தெரிந்துகொள்வேன்'' என்று கூறினான். பவான்ஸிங் உடனே தன் ஜேபியிலிருந்து எழெட்டு புகைப்படங்களை எடுத்து, அந்த மனிதன் இதில் இருக்கிறானா பார்த்து கூறச்சொல் என்றான். அந்தப்படங்களில் குணசுந்தரன், பஞ்சநாதன் இருவர் படங்களும் இன்னும்

இதில் சம்பந்தப்படாத வேறு ஐந்தாறுபேர்களின் படங்களும் கலந்திருந்தன.

வீட்டுக்காரன் இப்படங்களை மேஜைமேல்வைத்து ஒவ்வொன்றாய் எடுத்துப் பார்த்தான். நான்கு படங்களைப் பார்த்துப் பார்த்து வைத்துவிட்டான். ஐந்தாவது படத்தை எடுத்துப் பார்த்ததே, "ஆ! இதோ இவன்தான். பிரமாணிக்கமாய்க் கூறுவேன்" என்றான். அது பஞ்சநாதன் படம்.

பவான்லிங் படங்களை வாங்கி ஜேபியில் வைத்துக்கொண்டு, இங்கிருக்கையில் அம்மனிதன் எந்த ஹோட்டலில் தங்கியிருந்தான் இவனுக்குத் தெரியுமா கேள் என்றான்.

துவிபாஷகன் கேட்டு அச்சங்கதி அவனுக்குத் தெரியாதாம் என்றான். பிறகு வீட்டுக்காரனுக்குத் திருப்தியாக பரிசளித்துவிட்டு இருவரும் ஹோட்டலுக்குச் சென்றார்கள். பவான்லிங் "ஆ! இவ்வூரில் அவன் தங்கியிருந்த ஹோட்டலைக் கண்டுபிடிப்பது அவ்வளவு கஷ்டமாயிராதென்றே நினைக்கிறேன். இந்தநகரத்தில் நமதுதேசத்தார் இறங்கக்கூடிய ஹோட்டல்கள் நாலைந்துமட்டுமே யிருக்கின்றன. மேலும் இவன் நாகரிகமான முதற்றர ஹோட்டலிலேதான் தங்குவான்" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான். அதேப்படி ஹோட்டலுக்குச் சென்று போஜனம் செய்துகொண்டதே, மறுபடி புறப்பட்டு ஒவ்வொரு ஹோட்டலாய்ப்போய் விசாரிக்கத் தொடங்கினன். மூன்றாவது ஹோட்டலில் பஞ்சநாதன்வந்து தங்கியிருந்ததாகவும், பிப்ரவரி௴ 3உ அதைவிட்டுப் போய்விட்டதாயும் தெரிந்தது. அவன் அங்கிருந்து எங்குசென்றான் என்று விசாரித்தபோது ஹோட்டல் வேலைக்காரரில் ஒருவன் அவன் ரோமாபுரிக்குச் சென்றதாய்க் கூறினன்.

பவான்ஸிங் "சரி இனி இங்கே வேலையில்லை. ரோமாபுரிக்குத்தான் போய் பார்க்கவேண்டும்" என்று கூறிக்கொண்டே அதைவிட்டுத் திரும்பினான்.

மறுநாள் காலை பவான்ஸிங் நவீன புரியைவிட்டு ரோமாபுரிக்குப்புறப்பட்டான். அங்கு அவன் பலதரம் சென்றிருக்கிறான். ஆகையால் தான் வழக்கமாய்த் தங்கியிருக்கும் ஹோட்டலுக்குச் சென்றான். ஹோட்டல்காரன் அவனை மிகவும் பக்ஷமாய் வரவேற்று உபசரித்து, கொஞ்சகாலம் தங்கியிருப்பீரென்று நம்புகிறேன் என்றான்.

பவான்ஸிங் "அப்படித் தோன்றவில்லை. நான் சீக்கிரமாய் முடிக்கவேண்டிய முக்கியமானவேலை ஒன்றிருக்கிறது. இரத்னபுரிவாசியாகிய ஒருவன் நவீனபுரியிலிருந்து ஒரு கன்னிகையோடு இங்குவந்ததாய்க் கேள்வி. அவனுடைய செய்கைகளை யறியவேண்டும். பிப்ரவரி மாதம் 3-ம் தேதி நவீனபுரியிலிருந்து அவனும் அப்பெண்ணும் புறப்பட்டிருக்கிறார்கள். இதோ அவனுடைய படமிருக்கிறது. இந்த ஹோட்டலில் தங்கியிருந்தானா பார்" என்று படத்தை யெடுத்துக் காட்டினான். ஹோட்டல்காரன் அதைப்பார்த்து எனக்கு நினைவில்லையென்று தலையசைத்துவிட்டான்.

பவான்ஸிங் "அப்படியானால் ஒவ்வொரு ஹோட்டலாய்ப்போய் பார்க்கவேண்டியதுதான்" என்றான்.

அதேப்படி பகல்போஜனம் செய்துவிட்டு ஒவ்வொரு ஹோட்டலாய் விசாரித்தான். எங்கும் பயன்படவில்லை. "ஓகோ! எங்கோ தவறிவிட்டோம். இங்கே இன்னும் காலதாமதம் செய்வதில் பயனில்லை. நேராய் வீணாபுரத்திற்குப் புறப்படவேண்டியதே. என்வரையில் அவர்கள் இங்கேவந்ததாய் நான் நினைக்கவேயில்லை" என்று தனக்

குத்தானே கூறிக்கொண்டான். மறுநாள் ரோமாபுரியை விட்டுப் புறப்பட்டு வினாபுரம்சென்றான். அங்கு சேர்ந்த வுடனே தன் வேலையைச்செய்ய ஆரம்பித்தான். இரண்டு மூன்று ஹோட்டல்களில்போய் தேடியபின் நான்காவது ஒருஹோட்டலுக்குச் சென்றான்.

அந்த ஹோட்டலின் மானேஜர் "எனக்கென்னமோ இங்கேவந்து இறங்குகிறவர்களுடைய அடையாளம் கவனத்தில் நிற்காது. ஆனால் ஹோட்டல் காவலர்களுக்கு மேஸ்திரி யிருக்கிறான். அவனைக் கேட்டால் தெரியும்" என்றான்.

அப்படியே மேஸ்திரியை உடனே அழைத்து பஞ்சநாதனுடைய படத்தை யவனுக்குக் காட்டினார்கள். அவன் அதைக்கண்டவுடனே "ஆ! இம்மனிதன்தான் ஒரு கன்னிகையோடு இங்கேவந்து தங்கியிருந்தவன். அவர்கள் இங்கே கலியாணம் செய்துகொள்வதற்காக வந்திருந்ததாய்க் கேள்வி" என்றான்.

இதைக்கேட்டதே பவான்ஸிங் ஆச்சரியமடைந்து "என்ன! கலியாணம் செய்துகொள்ளவா? இங்கே வரும்போது அவர்களுக்குக் கலியாணம் ஆயிருக்கவில்லையோ?" என்று வினவினான்.

மேஸ்திரி விடைகூறுவதற்குள் மானேஜருக்கு ஏதோ நினைவிற்குவந்து, "ஆ! இப்போது கவனத்திற்கு வந்தது. இப்போது இரண்டுபேர் உருவமும் நினைவிற்குவந்தது. அவர்கள் புது ஊர் ஆலயத்தில்போய் கலியாணம் செய்துகொண்டார்கள்" என்றான்.

பவான்ஸிங்.—"கலியாணம் நடந்தபின் எத்தனைநாள் இங்கே யிருந்தார்கள்?" என்று கேட்க,

மானேஜர் ஓர் புத்தகத்தைப்பார்த்து சுமார் இரண்டு வாரங்களுக்கு அதிகமாகவே யிருந்தார்கள். ஆனால் அவர்

கள் கடைசிவரையில் அன்னியோன்னியமாயில்லை" என்றார்.

பவான்ஸிங்.—"ஏன் அப்படிக்கூறுகிறீர்? அதற்குள் சச்சரவு உண்டாய்விட்டதோ?"

மானேஜர்.—அம்மனிதன் வரவர அந்தப்பெண் விஷயத்தில் அசிரத்தையாய்விட்டான். அவளோ மிக்க அழகு வாய்ந்தவளாயிருந்ததோடு மிகவும் குணவதியாகவுமிருந்தாள்.

பவான்ஸிங்.—ஐயோ பாபம்! பரிதாபம். பரிதாபம். இதைவிட்டுப் புறப்பட்டு எங்கே சென்றார்கள் என்பது தெரியுமோ?

மானேஜர் சற்றுநேரம் சிந்தித்து மேலாபுரத்திற்குச் சென்றார்கள் என்று நினைக்கிறேன் என்றார்.

மேஸ்திரி.—"ஆம். மேலாபுரத்திற்கே சென்றார்கள். பிறகு அங்கிருந்து பருதிபுரம்போவதாய்ப் பேசிக்கொண்டார்கள். நன்றாய் நினைவிருக்கிறது" என்றான்.

பவான்ஸிங் மானேஜருக்கு வந்தனமளித்து மேஸ்திரிக்குக் கொஞ்சம்பரிசு கொடுத்துவிட்டு, உடனே நகரத்திற்கு இரண்டுமைல் தூரத்திலிருக்கும் புது ஊர் ஆலயத்திற்குச்சென்று, கோயில் குருவைக்கண்டு விசாரித்து கலியாணம் நடந்த நாள் முதலியவைகளைக் குறித்துக் கொண்டு, அவரிடமும் இன்னம் இரண்டுபேரிடமும் கைப்பத்து எழுதி வாங்கிக்கொண்டு, அங்கிருந்து கடைவீதிக்குச்சென்று பஞ்சநாதன் மோதிரம்வாங்கிய கடைக்காரனைக் கண்டுபிடித்து, அவனிடமும் ஒருகடிதம் வாங்கிக் கொண்டு, ஹோட்டலுக்குத் திரும்பி வந்தான்.

வீணைபுரத்தில் ஆகவேண்டிய வேலைகளெல்லாம் அவன் எதிர்பார்த்ததைவிட மிக்க திருப்தியாய் நிறைவேறியது. இனி இங்குவேலையில்லை. காலையில் புறப்பட்டு மேலாபுரம்

செல்வமென்று தீர்மானித்துக் கொண்டான். ஆனால் நாளைவருவது நமக்கென்னதெரியும். நாமொன்று நினைக்கத் தெய்வம் தானொன்று நினைக்கும் என்பது பொய்க்குமோ ?

மறுநாள்காலை யெழுந்ததும் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு மேலாபுரம் செல்வதற்கு வண்டி பதினொரு மணிக்குப் புறப்படுகிறபடியால் கடைவீதியைப் பார்த்து வரலாம் என்றுசென்றான். முக்கியமான விடங்களைப்பார்த்துக்கொண்டு சுமார் ஒன்பதுமணிக்கு ஹோட்டலை நோக்கித் திரும்பி வந்துகொண்டிருக்கையில், வழியில் ஒரு விடத்தில் சில ஜனங்கள் கும்பலாய் நின்றுகொண்டிருப்பதையும் மத்தியில் ஒரு போலீஸ்காரன் நின்று என்னமோ பேசிக்கொண்டிருப்பதையுங்கண்டு அருகிற்சென்று பார்த்தான்.

போலீஸ்காரன் ஒரு சிறு பெண்ணைப் பிடித்துக் கொண்டிருக்கிறான். எதிரில் ஒருவாலிபன் நாணயமான உடையணிந்தவனாய் கையில் ஒரு சிறுபையை வைத்துக் கொண்டு "இந்தப்பெண் இப்பையை யென்ஜேபியிலிருந்து எடுத்துத் தன் ஜேபியில் வைத்துக்கொண்டாள். நான் அவள் ஜேபியிலிருந்து பிடுங்கிக்கொண்டேன். இம்மாதிரிக் கள்ளச்சிறுவர்கள் நகரில் அதிகமாய்விட்டிருக்கிறார்கள். இவளை ஸ்டேஷனுக்குக் கொண்டுபோய்க் குற்றஞ்சாட்டித் தண்டிக்க வேண்டும்" என்று கூறுகிறான். அந்தப்பெண்ணோ ஒருதட்டில் புஷ்பங்கள் வைத்துக்கொண்டிருக்கிறாள். அவள் புஷ்பம் விற்பவள். "ஐயோ நான் பிறந்ததுமுதல் திருடியதேயில்லை. இவருடைய பணப் பையை நான் எடுக்கவேயில்லை; ஐயா என்தாய் காய்லாவாயிருக்கிறாள். எனக்காக காத்துக்கொண் டிருப்பாள். என் கெட்டகாலம் இன்றைக்கு இன்னும் ஒருகாசுகூட

விற்கவில்லை. என் தாயாருக்குக் கஞ்சிக்கு மாவு வாங்கக் கொண்டுபோகவும் காசில்லை, ஐயோ, என்னை விட்டுவிடுங்கள்" என்று கண்ணீர்விட்டுக்கொண்டே பரிதபிக்கிறாள். போலீஸ்காரன் அந்த வாலிபனைநோக்கி "உமது பணப்பை யப்படியே யகப்பட்டுவிட்டவரையில் இப்பெண்ணை யெச்சரிக்கை செய்து விட்டு விடலாமே" என்று வேண்டிக்கொண்டும், அம்மனிதன் ஒப்பமாட்டேனென்று ஒரே பிடிவாதமாய் அப்பெண்ணைத் தண்டித்தே தீரவேண்டும் என்கிறான்.

பவான்ஸிங் கும்பலுக்குள் நுழைந்து சங்கதியை விசாரித்தறிந்தபின் அப்பெண்ணை மறுபடி கேட்டான். அவள் "ஐயோ நான் ஒருபோதும் திருடியதேயில்லை. கடவுளறியக் கூறுகிறேன்" என்றாள். பவான்ஸிங் மனதில் இப்பெண்கூறுவதே யுண்மையென்று தோன்றியது.

அவ்வாலிபன் "இல்லை. இவள் பையை யெடுத்துத் தன் ஜேபியில் வைத்துக்கொண்டாள்" என்று கூறும்போது அப்பெண் தன்சட்டையின் வலதுபக்கமிருந்த சேபியைக்காட்டி இதிலாவைத்துக்கொண்டேன்? இச்சேபியி லிருந்தா நீர் எடுத்தீர்?" என்றாள்.

அம்மனிதன் "ஆம். ஆம்" என்று கூறிவிட்டு போலீஸ்காரனைநோக்கி "ஏன் ஆலசியம் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோ" என்றான்.

அப்பெண் பவான்ஸிங்கையும் போலீஸ்காரனையும் நோக்கி "ஐயா இந்தச் சேபியில் கையிட்டுப் பாருங்கள். இதில் அடிப்பக்கம் முழுதும் கிழிந்துபோயிருக்கிறது. இதில் ஏதாவது வைத்தால் நிற்குமா பாருங்கள். எனக்கு இது தெரிந்திருக்கப் பையை யிதில் வைப்

பேனு யோசியுங்கள். வைத்தால் அது கீழேவிழுந்து விடாதா ?" என்றாள்.

போலீஸ்காரன் அவ்வாறே ஜேபியைப்பார்க்க அது அடிப்பக்கம் முழுதும் கிழிந்துபோயிருந்தது. பவான்ஸிங் அவ்வாலிபனை நோக்கி,

"நீ பையை யிவள் ஜேபியிலிருந்து எடுத்தாயா? கீழேயிருந்து எடுத்தாயா ?" என்றான்.

அவ்வாலிபன் சற்று விழித்துப் பிறகு சமாளித்துக் கொண்டு, "ஜேபியிலிருந்து கீழே விழுந்துவிட்டது. தரையிலிருந்து எடுத்தேன்" என்றான்.

போலீஸ்காரன் "ஐயா இப்பெண்ணை ஸ்டேஷனுக்குக் கொண்டுபோவதென்றால் நீரும் கூட வரவேண்டும்" என்றான்.

அவ்வாலிபன் அப்படியே வருகிறேனென்றான். அச்சமயம் பவான்ஸிங் "நீபயப்படாதே, நான் இருக்கிறேன்" என்று அப்பெண்ணுக்குச் சமிக்கைகாட்டினன். உடனே நால்வரும் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றார்கள்.

இவர்கள் அங்குசென்றதே அங்கிருந்த இன்ஸ்பெக்டர் சேவகனை நோக்கி "இதென்ன சங்கதி, இவர்கள் யார்? இப்பெண் யார் ?" என்றார். சேவகன் நடந்த சங்கதியைக்கூறினன். அப்போது பவான்ஸிங் இன்ஸ்பெக்டரைச் சமிக்கை செய்து சற்று எட்ட அழைத்துப் போய் ஏதோ சிலவார்த்தைகள் கூறினன். இன்ஸ்பெக்டர் புன்னகையோடு தலையசைத்துவிட்டுத் திரும்பிவந்து வாலிபனை நோக்கி, "உன் பையை யிப்பெண் எடுத்து எங்கே வைத்துக்கொண்டாள் ? நீ எங்கிருந்து அதை யெடுத்தாய் ?" என்றார்.

வாலிபன்.—"இவள் இதை யெடுத்துத் தன் ஜேபியில்

வைத்துக்கொண்டாள். அது ஜேபியில் நிற்காமல் கீழே விழுந்துவிட்டது. நான் தரையிலிருந்து எடுத்தேன்" என்றான்.

இன்ஸ்பெக்டர் அவன் பையைக் கையில் வாங்கிப் பார்த்து "இது புதுப்பை. இரவு மழைபெய்து பூமியெங்கும் நனைந்து சேறாயிருக்கிறது. இப்பை தரையில் விழுந்திருந்தால் கொஞ்சமாவது இதில் மண்பட்டிராமலிராது. ஆகையால் நீ கூறுவது பொய்யென்று நன்றாய்த் தெரிகிறது. இக்கேஸை வாபீசு செய்து கொள்ளுகிறாயா, என்ன சொல்லுகிறாய்?" என்றார்.

வாலிபன் விலவிலத்து நடுக்கங்கொண்டு, "இல்லை வாபீசு செய்து கொள்ளுகிறேன்" என்று கூறிவிட்டு குனிந்ததலை நிமிராமல்போய்விட்டான். பவான்ஸிங் அங்கிருந்த ஒரு கான்ஸ்டேபிலிடம் சட்டென்று ஒரு ரூபாய் கொடுத்து, "நீ இவன் பின்னால்சென்று இவன்யார், பெயரென்ன? எங்கே வசிக்கிறான்? இந்த விபரங்களை யறிந்து கொண்டுவா, இன்னும் இரும் தருகிறேன். நான் பன்னிரண்டுமணிக்கு இங்கேவருகிறேன்" என்றான். போலீஸ்காரன் அவ்வாறே சென்றான்.

இன்ஸ்பெக்டர் அப்பெண்ணை நோக்கி "நீ ஓடிப்போ" என்றார், அப்போது பவான்ஸிங் "இப்பெண்ணை நான் கொண்டுபோய் அவள் வீட்டில் விடுகிறேன்" என்றான்.

இன்ஸ்பெக்டர்.—ஆ, நான் உமது கீர்த்தியைமட்டும் கேட்டிருக்கிறேன். இன்று இப்பெண்ணால் உம்மைத் தரிசிக்கும் புண்ணியம்பெற்றேன். இந்தப்பொய்க் கேஸைப் பற்றி யென்ன நினைக்கிறீர்?"

பவான்ஸிங்.—"அம்மனிதன் இப்பெண்மேல் குற்றம் சாட்டும்போதே அது பொய்யென்று எனக்குத் தோன்றியது. அனாதையான ஏழைப் பெண்மேல் அவன் ஏன் இப்

படி அபாண்டம்போடவேண்டும் என்பதுதான் எனக்குத் தோன்றவில்லை. அதற்கு ஏதோ காரணம் இருக்கவேண்டும்" என்று கூறிவிட்டு அப்பெண்ணை நோக்கி, "அம் மனிதன் யார்? நீ எப்போதாவது பார்த்திருக்கிறாயா?" என்றுகேட்டான்.

அப்பெண் அவன் யாரோ தெரியாது என்றாள். அதன் பிறகு பவான்ஸிங் "இதன் உண்மையைக் கண்டு பிடிக்கவேண்டும். அவன் இப்பெண்ணுக்கு எப்படியாவது கெடுதிசெய்யவே பார்ப்பானென்று என்மனதிற் படுகிறது. நான்போய் அவள் தாயைக்கண்டு பேசிவருகிறேன்" என்று கூறிவிட்டு அப்பெண்ணை யழைத்துக் கொண்டு சென்றான்.

அப்பெண்ணும் அவள் தாயாரும் வசிப்பது பழையவீட்டின் ஒரு அறையில். அவ்வீதி மிக்க எளிய ஜனங்கள் வாசம்செய்யும் வீதி. பவான்ஸிங்கும் அப்பெண்ணும் வீட்டிற்குள் சென்றபோது, அப்பெண்ணின் தாய் ஒரு கட்டிலில் படுத்துக்கொண்டிருந்தாள். அவளைப் பார்க்கும்போதே அவள் மிக்க அசௌக்கியமான ஸ்திதியிலிருக்கிறாளென்று தெரிந்தது. முகத்தைப் பார்க்கும்போதே அப்பெண்ணின் தாயென்று நன்றாய்த் தெரிந்தது. அவளிடம் கொஞ்சம் வார்த்தையாடியதே அவள் நல்லகுலத்திற் பிறந்து செல்வத்தில் இருந்தவளென்றும், மிக்க பெருந்தன்மையான குணமுடையவளென்றும், பவான்ஸிங் தெரிந்துகொண்டான். உடனே வீட்டுக்காரனை யழைத்து இருபது ரூபாய் கொடுத்து தாய்க்கும் மகளுக்கும் ஒருமாதத்திற்குப் போதுமான உணவுப் பொருள்களைத் தருவித்துக்கொடுத்ததோடு ஒரு வைத்தியரை யழைத்துவந்து சிகிச்சைசெய்யும்படியாயும் அதனால்

நேரிடும் செலவைத் தானே கொடுப்பதாயும் ஏற்பாடு செய்தான். அப்பெண்ணின் தாயார் பெயர் மரகதம்மாள்.

மரகதம்மாள் சரித்திரம் துயரமாகவே யிருக்குமாதலால் ஆரம்பத்திலேயே அதைப்பற்றி கேட்கலாகாதென்று நினைத்து, பவான்ஸிங் அவளை நோக்கிப் பெண்ணுக்கு நேர்ந்த ஆபத்தைக் கூறியபின், "உன் பெண்ணுக்கு அப்படி கெடுதிசெய்பவர்கள் யாராவது இருக்கிறார்களா? உனக்குத் தெரியுமா?" என்று வினவினான்.

மரகதம்மாள் அப்படி எங்களுக்குக் கெடுதிசெய்பவர்கள் யாராவது இருப்பதாய் எனக்குத் தெரியாதென்றாள். பவான்ஸிங் "இருக்கட்டும், அதைப்பற்றி நான் பின்னால் வந்து கூறுகிறேன். நீ இப்பெண்ணை யினி வெளியில் எதற்கும் அனுப்பவேண்டாம். உன் கெட்டகாலம் இன்றோடு நீங்கிவிட்டதென்று நம்பு. நான் மறுபடி மாலைவருகிறேன். எனக்கு இங்கே சினேகிதர் இருக்கிறார்கள். உனக்குத் தக்க உதவி ஏற்படுத்திவிட்டு போகிறேன்" என்று கூறிவிட்டு, அவள் கண்ணீர்விட்டு அளித்த நன்றியான வந்தனங்களை யேற்றுக்கொண்டு, நேராய்ப் போலீஸ் ஸ்டேஷனுக்குத் திரும்பிச் சென்றான்.

---

## 13-வது அத்தியாயம்.

**பசுபதி பிள்ளை—சவுரிமுத்து பிள்ளை—சாமு—ஒருவீட்டின் மேல் இரண்டு மோதுதல்—துஷ்டருடைய துர் ஆலோசனை—கொலைக்கு முயற்சி—பவான்ஸிங்கால் ஒரு குடும்பம் ஆபத்தும் துயரமும் நீங்கிச் சந்தோஷ மடைதல்.**

பவான்ஸிங் மரகதம்மாளிடமிருந்து போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்ற பத்து நிமிஷங்களுக்குள், அவன்

அவ்வாலிபன் பின்னால் அனுப்பியிருந்த போலீஸ்காரன் திரும்பிவந்தான். பவான்ஸிங் "என்னசங்கதி அவன் யார்? கண்டுபிடித்தாயா?" என்றான்.

போலீஸ்காரன்.—"ஆம். அவன் முன்பு வர்த்தகம் செய்து செல்வவந்தராயிருக்கும் பசுபதிப்பிள்ளையின் தம்பி மகன். அவன் பெயர் சவுரிமுத்துப்பிள்ளை. அவனுக்குத் தாய் தகப்பன் இல்லை. மகாதுஷ்டன். பசுபதிப்பிள்ளைக்குச் சந்ததியில்லாததால் இவனையே வளர்த்துவருகிறார். அவருக்குப்பின் அவர் ஆஸ்திமுழுதும் இவனுக்குத்தான் சேருமென்று கூறுகிறார்கள்" என்றான்.

இதைக் கேட்டுக்கொண்டதும் பவான்ஸிங் இன்ஸ் பெக்டரிடம் சென்று "துப்பறிவதிலும் மோசூலிருப்பதி லும் தேர்ச்சியடைந்த ஒரு ஆள்வேண்டும். நம்பிக்கை யானவனாக இருக்கவேண்டும்" என்று கேட்டான்.

இன்ஸ்பெக்டர் நீர் இப்போதனுப்பியவன் வாலிப னாயினும் அவனே மாறுவேடமணிந்து வேலைசெய்வதில் கெட்டிக்காரன் என்றார். பவான்ஸிங் அவ்வாலிபனை நோக்கி "நீ இதில் என்சொற்படி வேலைசெய்தால் நல்ல இனாம் பெறுவாய். உடனே போஜனம் செய்துகொண்டு மாறுவேடமணிந்து ஸ்டேஷனுக்கு வந்திரு. நான் ஒரு மணிநேரத்தில் வருகிறேன். அல்லது சங்கதி யனுப்பு கிறேன். அதன்படி நட. உனக்குச் சம்மதமா? என்றான். வாலிபன் சந்தோஷமாய் ஒப்புக்கொள்ள, பவான்ஸிங் ஸ்டேஷனிலிருந்து மறுபடி மரகதம்மாள் வீட்டிற்குச் சென்று, அவளை நோக்கி "அம்மா, பசுபதிப்பிள்ளை, சவுரி முத்துப்பிள்ளை யென்பவர்கள் உனக்குத் தெரியுமா?" என்று வினவினான்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதே அம்மாது தன் கரங்

களால் முகத்தை மூடிக்கொண்டு தேம்பித்தேம்பி யழுதாள். பவான்ஸிங் பரிதாபமடைந்து "அம்மா! இக்கேள்வி யுனக்குத் துக்கத்தை யுண்டாக்குமென்று எனக்குத் தெரியாது. ஆயினும் உன் நன்மைக்காகவே கேட்கிறேன். உண்மையைக் கூறினால் உனக்கு உதவிசெய்ய அனுகூலப்படும்" என்றான்.

மரகதம்மாள் தன் துயரத்தை யடக்கிக்கொண்டு பவான்ஸிங்கை நோக்கி "ஐயா! தாங்கள் செய்த உபகாரத்திற்கு நான் என்னபதில் செய்யக்கூடும். தங்களிடம் எதையாவது மறைத்துக் கூறினால் என்னைவிட நன்றிகெட்டவள் யார்? பசுபதிப்பிள்ளையின் ஏகபுத்திரியே நான். என் தந்தைக்குப் பிரியமில்லாத புருடனை மணம் புரிந்து கொண்டதால் நான் இக்கோலமானேன். என் புருடன் அதிக கடனாளியாய் அத்துயரத்தால் மரித்தார். அதன்பிறகு என் தந்தைக்கு ஒருகடிதம் எழுதினேன். அவர் கோபத்தால் அதைப் பிரித்துப்பாராமலே திருப்பி விட்டார். பிறகு நான் எழுதவில்லை. சவுரிமுத்து என்பவன் என் சிறியதந்தை மகன். என் தந்தையின் சொத்து முழுதும் அவனுக்குத்தான் கிடைக்கும்" என்றாள்.

பவான்சிங்.— "அம்மா. நீ இப்போது உண்மையைக் கூறியதால் நான் மிக்க சந்தோஷமடைந்தேன். இப்போது எனக்கு எல்லாம் வெளிச்சமாயிற்று. நான்போய் மறுபடி வருகிறேன். பெண்ணைப் பத்திரமாய் பார்த்துக் கொள்" என்று கூறிவிட்டு வெளியில் புறப்பட்டான்.

பவான்ஸிங் அவ்வீட்டு வாசற்படியைத் தாண்டியதே இரண்டுபேர் வீட்டைத்தாண்டிச் செல்வதைக் கண்டான். அவர்கள் உடனே திரும்பிப் பார்த்தார்கள். அவர்கள் சவுரிமுத்தும் இன்னொரு மனிதனும். பவான்ஸிங் தன்னைக்

கண்டதே அவர்கள் இருவரும் திடுக்கிட்டதைப் பார்த்தான். அம்மனிதன் சவுரிமுத்தைநோக்கி "ஏன்! அங்கே கலகம் செய்த மனிதனே" என்று கூறியது பவான்ஸிங் செவிகளில் கேட்டது.

"இவன் ஏன் இங்கேவந்தான். என்னமோ கெடுதி செய்யவே துவஜங்கட்டிக் கொண்டிருக்கிறார்கள்" என்று சிந்தித்துக் கொண்டே, அவர்கள் வீதியின் கோடியில் சென்று திரும்புமட்டும் நின்று பார்த்துக்கொண்டிருந்தான். அவர்கள் திருப்பத்தில் மறைந்தபிறகு அவ்வழியே சென்றான். அங்கே இருவரும் நின்று பேசிக்கொண்டிருந்தார்கள். பவான்ஸிங் பார்த்துவிட்டுத் திரும்பி வந்துவிட்டான். சற்று நேரம் பொறுத்து மறுபடி போய்ப் பார்த்தபோது அவர்கள் அங்கில்லை, போய்விட்டார்கள். "ஓகோ! இவ்வீட்டின்மேல் மோகுல் வைத்திருக்கிறார்கள் போல் காண்கிறது. நானும் ஒரு ஆளை வைக்கிறேன்" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டு, அவ்வீதியின் கீழும்மேலும் நோக்கினான். எதிர்வாடையில் ஒருவீட்டின் எதிரில் ஒரு பலகை தொங்க விட்டிருந்தது. அப்பலகையில் "மெத்தைமேல் சொல்ப கூலிக்கு டெலிபோனில் பேசலாம்" என்று எழுதியிருந்தது. இதைக்கண்டதும் பவான்ஸிங் மிக்க சந்தோஷத்தோடு உடனே மெத்தைமேல்சென்று, போலீஸ் ஸ்டேஷனில் மாறுவேடமணிந்து காத்திருக்கும் சாமு என்னும் வாலிபனைக்கூப்பிட்டு "கையில் ஒருவேளை யாகாரம் எடுத்துக்கொண்டு துரிதமாய் பைராக்கி வீதி 25-வது நெம்பர் வீட்டில் மெத்தைமேலிருக்கும் டெலிபோன் ஆபீசுக்குவா" என்று கூறினான்.

சாமு அவ்வாறே வருகிறேன் என்று பதில் கூறிவிட்டு அப்படியே அரைமணி நேரத்திற்குள் பவான்ஸிங் எதிரில் வந்து நின்றான்.

பவான்ஸிங் எதிர்வாடையி லிருக்கும் மரகதம்மாள் வசிக்கும் வீட்டை யவனுக்குக்காட்டி, "உனக்கு அச்சவுரி முத்து என்பவன் நன்றாய்த் தெரியும். அவன் இவ்வீட்டின்மேல் கண் வைத்திருக்கிறான். அப் பெண்ணுக்கு ஏதோ கெடுதி செய்யப்பார்க்கிறான். நீ அப்பெண் வெளியில்வந்தால் அவளை யறியாமலே அவள் பின்னால் செல். மறுபடி யவள் வீடுவந்து சேருமட்டும் அவளை விடாமல் சாக்கிரதையாய்ப் பின் சென்று அவளை வீட்டிற்குக் கொண்டுவந்து சேர்க்கவேண்டும். பத்திரம். நான்போய் ஒரு வேலையைப் பார்த்துக்கொண்டுவந்து உன்னை விடுதலை செய்கிறேன்" என்றான்.

சாமு:—"தாங்கள் ஒன்றிற்கும் அய்யப்பட வேண்டாம். அந்தப் பெண்ணை யவர்களிடம் சிக்கவிடாமல் பார்த்துக் கொள்ளுகிறேன். தாங்கள் நிம்மதியாய்ச் செல்லலாம்" என்றான்.

பவான்ஸிங் அங்கிருந்து புறப்பட்டு ஹோட்டலுக்குச் சென்று போசனம் செய்து கொண்டு, பசுபதிப் பிள்ளையின் வீட்டை நோக்கிச் சென்றான்.

பசுபதிப்பிள்ளை வீடு மிகவும் உன்னதமான ஒரு பெரிய மாளிகை போன்றது. வாயிற்படியில் கச்சிதமாய் உடை யணிந்த ஒரு காவலன் நின்று கொண்டிருந்தான். பவான்ஸிங் அவனை நோக்கி பசுபதிப்பிள்ளை வீட்டில் இருக்கிறாரா என்று கேட்டான். காவலன் இருக்கிறார் என்று கூற, பவான்ஸிங் தன்பெயர் எழுதிய ஒரு சீட்டுக் கொடுத்தனுப்பினான். காவலன் உள்ளேசென்று திரும்பி வந்து "தாங்கள் உள்ளேவரலாம்" என்று பவான்ஸிங்கை யழைத்துக்கொண்டு போய் ஒரு விசாலமான அறையில் உட்காரவைத்துச் சென்றான். சற்றுநேரத்திற்குள் அறை

யின் மறுபக்க மிருந்த வேறொருகதவு திறக்கப்பட்டதும் ஒரு மனிதன் உள்ளே வந்தான். பவான்ஸிங் நிமிர்ந்து பார்த்தான். வந்தவன் சவுரிமுத்துப் பிள்ளை. அவன் பவான் ஸிங்கைக் கண்டதும் திடுக்கிட்டு மறுபடி சமாளித்துக்கொண்டு, "என்னவேலையாய் இங்கே வந்தீர்?" என்றான்.

பவான்ஸிங்:—"ஐயா உம்மிடத்தில் எனக்கு ஒரு வேலையுமில்லை. உமது பெரிய தந்தையை நேரில் கண்டு பேசவேண்டும்" என்றான்.

சவுரிமுத்து:—"அப்படியானால் அது முடியாத காரியம். அவர் அதிக அசௌக்கியமா யிருக்கிறார். யாரிடத்திலும் பேசமாட்டார். ஏதாவது காரிய மிருந்தால் என்னிடந்தான் கூறவேண்டும்" என்றான்.

பவான்ஸிங்:—உன்னிடம் ஒரு வேலையுமில்லை. போய் வருகிறேன்.

சவுரிமுத்து:—நீ அன்னியர் விஷயத்தில் வலியத் தலையிடும் பெரிய அதிகப்பிரசங்கியென்று தெரிகிறது. இதில் ஏதோகாசு பறிக்கப்பார்க்கிறாய்.

பவான்ஸிங்:—நீ நினைப்பது தவறு. அதன் உண்மை பின்னால் தெரியவரும்.

சவுரிமுத்து "உன் தந்திரம் என்னிடம் பலிக்காது" என்று கூறிவிட்டு, காவலனை நோக்கி "அடே இந்த ஆளை வெளியில் கொண்டுபோய்விடு. மறுபடி இனியிங்கே வந்தால் எந்தக் காரணத்தாலும் உள்ளே விடாதே. பத்திரம், பத்திரம்." என்றான்.

பவான்ஸிங் அவனுக்கு ஒருவிடையும் கூறாமல் வெளியில் வந்துவிட்டான்.

மூடனாகிய அவ்வயோக்கியனுக்கு பவான்ஸிங் சங்

கதி தெரியாது. இதோடு இனி இங்கே வரமாட்டா னென்று எண்ணிக் கொண்டான். பவான்ஸிங் இப்படிப் பட்ட சொல்ப தடைகளுக் கெல்லாம் அஞ்சி எடுத்த காரியத்தைச் சாதிக்காமல் விட்டுவிடுகிற பேர்வழி யல்ல வென்று சவுரிமுத்து அறியான். பசுபதிப் பிள்ளை அசௌக்கியமா யிருக்கிறா ரென்று அவன் கூறியதைப் பவான்ஸிங் நம்பவில்லை. ஆயினும் இத்துஷ்டனை விட்டி ருக்கும் வேளையில் நாம் பசுபதிப்பிள்ளையைக் காண்பது முடியாத காரியம் என்று அவனுக்குத் தோன்றியது. அவன் இல்லாத வேளையிலும் இந்த உருவோடு சென்றால் காவலன் உள்ளே விடமாட்டான் என்றும் தெரிந்தது. அதைப்பற்றி பவான்ஸிங் சற்றும் கவலைப்படவில்லை.

மறுநாள் மாலை சுமார் ஆறுமணிக்கு மிக்க வயோதிகன் போல் தொங்கும் வெள்ளைத்தாடியை யுடைய ஒரு மனிதன் வர்த்தகன்போல் உடையணிந்து பசுபதிப்பிள்ளையின் வீட்டிற்கு எதிரிலிருந்த இருண்ட ஒரு சிறுசந்தில் நின்றுகொண் டிருக்கிறான். அவன் அங்குவந்து அரை மணிநேரமாயிற்று. அப்போது ஒருமனிதன் வீதிவழியே வந்து மெதுவாய் பசுபதிப்பிள்ளையின் வீட் டெதிரில் நின்று சீழ்க்கை யடித்தான். இரண்டொரு நிமிஷத்திற்குள் சவுரிமுத்து வெளியில்வந்தான். வீதியில் நிற்பவனைக் கண்டதும் சவுரிமுத்து அவனை

"ஆ! கறப்பா வந்துவிட்டாயா? நானும் புறப் படவே யிருந்தேன். சங்கதிதெரியுமா! அந்தக் கலகக் காரப்பட்டா நேராய் வீட்டிற்கு வந்திருந்தான் தெரியுமா?" என்றான்.

கறப்பன்.—யார்! நாம் அந்த வீட்டண்டை நேற்று கண்டோமே அவனா?

சவுரிமுத்து.—ஆம். அவன் இங்கேவந்தான். நோயக் கிழவனைக் காணவந்ததாய்க் கூறினன். நான் நல்ல சூடு போட்டனுப்பிவிட்டேன். கிழவன் அதிக காயலா, யாரையும் பார்க்க முடியாது என்று அனுப்பிவிட்டு, அவன் மறுபடிவந்தால் உள்ளேவிடவேண்டாமென்று காவலனுக்கு உத்திரவு செய்துவிட்டேன்.

கறப்பன் —அவன் பெயரென்ன ?

சவுரிமுத்து.—பவான் ஸிங்காம்.

இதைக்கேட்டதே கறப்பன் இடிவிழுந்த நாகம் போல் நின்று “ அடதெய்வமே, இரத்னபுரியில் பவான் ஸிங் என்ற பிரக்யாதிபெற்ற துப்பறியும் உத்தியோகஸ்தன் ஒருவன் இருக்கிறான். அவன்றானே இவன் ? அவனாயிருந்தால் மோசம், மோசம் ” என்றான்.

சவுரிமுத்து.—என்ன முட்டாளா யிருக்கிறாய். அவனேன் இங்கேவருகிறான். அங்கே நடக்கும் ஒருகொலைக் கேஸ் விசாரணையில் அவன் இருக்கிறான். நான் பத்திரிகைகளில் பார்த்தேன். வீண்பயம் கொள்ளாதே. ஏன் ? யாரும் இன்னும் அவன் தலையை நறுக்கவில்லையோ ?

கறப்பன்.—நீ நறுக்கிவிடுவாய்போலும்.

சவுரிமுத்து.—ஆகா. சமயம்வாய்ந்தால் நறுக்கிவிடுவேனே.

கறப்பன்.—சரி. யோசனை செய்தபடியே செய்து முடிக்கவேண்டுமென்கிறாயோ ?

சவுரிமுத்து.—கண்டிதமாய்-தடையென்ன!

கறப்பன்.—பெண்பாவம்-அதிலும் சிசுஹத்தி-கோரமான வேலையாயிருக்கிறது.

சவுரிமுத்து —அதற்கென்னசெய்யலாம். வேறேவழியில்லை. அந்தக் குட்டிக்காக என் ஆஸ்தியை யிழந்து

விடவோ ? நான் கிடக்கட்டும், பாபம், இரண்டுவாரம் சிறைச்சாலைவாசத்தோடு போகட்டும் என்றுபார்த்தேன். அந்தக் கலகக்காரன்றானே அதைக் கெடுத்துவிட்டான். இப்போது இந்தபாபம் அவன்மேல்தான்.

கறப்பன்.—வேறேவழி யில்லாவிட்டால் செய்துதான் தீரவேண்டும். ஆனாலும் எனக்கென்னமோ அது பிரிய மில்லை. நினைத்தாலே நடுக்கமாயிருக்கிறது.

சவுரிமுத்து.—உனக்கென்ன பிடித்துக்கொண்டது ? சுத்த கோழையாய்விட்டாயே.

கறப்பன்.—அதல்ல-இந்த பவான்ஸிங்மட்டும் அதே துப்பறியும் ஆசாமியா யிருந்தால், இச்சங்கதி யவன் காதில் விழுந்ததோ, நமது கழுத்தில் கயிறுமாட்டிக் கொண்டமாதிரியேதான். நம்மைத் தூக்கில் போடுகிற மட்டும் அவன் கண்உறங்கவே மாட்டேன்.

சவுரிமுத்து.—சேசே ! மூடப்பேச்சு பேசாதே. யாருக்கு நமது யோசனைதெரியும் ? இல்லாத ஆசாமியை நினைத்துக்கொண்டு வீணாய் என் நடுங்குகிறாய். புறப்பட் டுப் போவோம்வா.

கறப்பன்.—தலையெழுத்து யாரையும் விடப்போகிற தில்லை, வா-போவோம்.

உடனே இருவரும் வீதியின்வழியே நேராய்ச் சென் றார்கள்.

சந்தில் நின்றுகொண்டிருந்த கிழவன் இவர்கள் பேசிய வார்த்தைகள் யாவும் ஒன்றுவிடாமல் கேட்டான். "அடடா ! இந்தச் சண்டாளர்கள் அப்பெண்ணுக்கு கெடுதிசெய்யப் போகிறார்கள். இப்போது அதைத முன் னுடியாய்க் கவனிக்கவேண்டும்" என்று கூறிக்கொண்டே அதைவிட்டுத் துரிதமாய் நடந்தான். அந்தக்கிழவன்

நமது பவான்஝ிங்கேயென்று நண்பர்கள் அறிந்துகொண்டிருப்பீர்கள். அவன் அங்கிருந்து அதிவேகமாய் மரகதம்மாள் வீட்டண்டை சென்று சாமுவைக்கண்டு "என்ன சங்கதி ? அவர்கள் வந்தார்களா ? பெண் எங்காவது வெளியில் சென்ருளா ?" என்று வினவினன். சாமு இல்லை, அவர்களும் வரவில்லையென்ருன்.

பவான்஝ிங் துரிதமாய் மரகதம்மாளிடம் சென்று எங்கே குழந்தையென்ருன். அவள் கொஞ்சம் அச்சத்தோடு "ஐயா ! நான் தங்கள் கட்டளையைமீறி நடந்தாய்க் கோபிக்கவேண்டாம். நேற்று ஒப்பந்தம் செய்திருந்த புஷ்பம் வந்துவிட்டது. இன்றுமட்டும் அதைக் கொண்டுபோய் விற்றுவிட்டு வந்துவிடும்படி யனுப்பினேன். தெருப்பக்கம்சென்ருல் யாராவது பார்ப்பார்களென்று பின்பக்கமிருக்கும் கொல்லைக்கதவின் வழியாய் யனுப்பினேன்" என்ருள்.

பவான்஝ிங் "அடடா ! இதனுற்ருன் சாமுகூட அவளைப் பார்ப்பதற்கில்லாமற்போயிற்று. என்ன ஆபத்து. இதுவரையில் வழியில் அத்துஷ்டரிடம் சிக்கிக்கொண்டதோ ? ஆயினும் இந்த நோயாளியைப் பயப்படுத்தலாகாது" என்று சிந்தித்துக்கொண்டே துரிதமாய் சாமுவிடம் சென்று, "அப்பெண் பெரியக்கடையிலிருக்கும் கோயிலுக் கெதிரிலுள்ள மைதானத்தில் பூவிற்றுக்கொண்டிருப்பாள். சீக்கிரம்சென்று துரிதமாய் அவளை வீட்டிற்கழைத்து வந்துவிடு. வண்டியில் ஏற்றிக்கொண்டு வந்துவிடு, நான் இங்கே யிருக்கிறேன்" என்ருன். அவன் சென்று அரைமணிநேரத்தில் திரும்பிவந்து "அப்பெண் எங்கும் அகப்படவில்லை" என்ருன். பவான்஝ிங் "சரி, நீ வீதியில் எச்சரிக்கையாய் பார்த்துக்கொண்டிரு. நான்

ஒருமணிநேரத்தில் வருகிறேனென்று அதைவிட்டுச் சென்றான்.

பொய்த்தாடி மீசைமுதலிய மாறுவேடங்களைக் கழற்றிவிட்டு மரகதம்மாளிடம் பேசிக்கொண்டிருந்த பவான்ஸிங் மறுபடி முன்போல் வேடமணிந்து ஒருவண்டியிலேறிக்கொண்டு நேராய்ப் பசுபதிப்பிள்ளையின் வீட்டிற்குச் சென்றான். வீட்டெதிரில் சென்றதும், வண்டியைவிட்டிறங்கிக் காவலனிடத்தில் "உன் எஜமானனிடம் சென்று ஒருவர்த்தகர் வந்திருக்கிறார். ஏதோ மிகவும் முக்கியமான தங்கள் விஷயத்தைப்பற்றி ஒருசங்கதி கூற வேண்டுமாம் என்று கூறு" என்று சொல்லியனுப்பினான்.

காவலன் உள்ளேசென்று உடனே திரும்பிவந்து பவான்ஸிங்கை ஒரு அலங்காரமான அறைக்கு அழைத்துச் சென்றான். அவ்விடத்தில் ஒரு நாற்காலியில் வயோதிகனான பசுபதிப்பிள்ளை யுட்கார்ந்துகொண் டிருந்தார். அவர் பவான்ஸிங்கைக் கண்டதும் "உட்காருங்கள். யாரோ தெரியவில்லை. என்ன சங்கதியைப்பற்றி பேச வேண்டும்?" என்றார்.

பவான்ஸிங் உடனே தன்பெயர் எழுதிய சீட்டை மடியிலிருந்தெடுத்து அவர் கையிலளிக்க அவர் அதைக் கண்டதே மிக்க வியப்படைந்து. ஆ! தங்கள் பெயரைக் கேள்விப்பட் டிருக்கிறேன். இன்றுதான் கண்டேன். இங்குவந்த விஷயம் என்னமோ?" என்றார்.

பவான்ஸிங்.—"தாங்கள் நேற்றிருந்ததைவிட இன்று சற்று சௌக்கியந்தானே?" என்றான்.

பசுபதிப்பிள்ளை.—ஏன், நேற்றுமட்டும் எனக்கென்ன அசௌக்கியம்?

பவான்ஸிங்.—நேற்று தங்களைக்காண வந்தபோது

தங்கள் தம்பிகுமாரன் தாங்கள் மிக்க அசௌக்கியமாயிருப்பதாகவும் யாரோடும் பேசமுடியாதென்றும் கூறினான்.

பசுபதிப்பிள்ளை.—தங்கள் கண்டத்தொனியைநோக்க தாங்கள் தோன்றுகிற அவ்வளவு வயோதிகராய்த் தெரியவில்லையே.

பவான்ஸிங் உடனே பொய்த்தாடி முதலிய மாறுவேடசாமான்களைக் களைந்துவிட்டு, கிழவனை நோக்கி "நேற்று சவுரிமுத்து என்னை மறுபடி யுள்ளே விட வேண்டாமென்று காவலனுக்குக் கட்டளையிட்டதால் நான் சற்று உருமாறி வரவேண்டியதாயிற்று" என்று கூறினான்.

பசுபதிப்பிள்ளை மிக்க வியப்படைந்து, "அவன் என் உமக்குப்பொய் சொன்னதோடு, அப்படிக் கட்டளையிட்டான் ?" என்றார்.

பவான்ஸிங்.—"அதைத் தான் அறியவேண்டும். அதோடு சவுரிமுத்து உமது பேத்தியின்மேல் அபாண்டமாய்க் களவுசெய்தாளென்று குற்றம் சுமத்த வேண்டிய தேதோ அதுவும் தெரியவேண்டும்.

பசுபதிப்பிள்ளை.—என்பேத்தியா !

பவான்ஸிங்.—ஆம். மாரகதம்மாளுடைய ஏகபுத்திரியாகிய சுமார் எட்டுவயதுடைய குழந்தைமேல் அவன் நேற்று அபாண்டமாய்க் குற்றம் சாட்டினான்.

பசுபதிப்பிள்ளை மிக்க தடுமாற்றமடைந்து "நீ கூறுவதென்ன ? எனக்கு மரகதம் என்ற ஒரேபெண் இருந்தது மெய்யே. நான் அவள் விஷயத்தில் மிக்க குரூரமாய் நடந்துகொண்டேன். அது இன்னும் என்மனதை வாதிக்கிறது. ஆனால் அவள் இறந்துவிட்டிருக்கவேண்டும், அவள் மகளும் இறந்துவிட்டிருக்கவேண்டும். ஏனெனில் என்

தம்பியின் மகனுன சவுரிமுத்தைக்கொண்டு நான் எவ்வ ளவோ தேடியும் அவர்கள் அகப்படவில்லை" என்றார்.

பவான்ஸிங்.—சற்றுபொறும், தாங்கள் எழுதிவைத் திருக்கும் மரணசாதனத்தில் தங்கள் ஆஸ்தி முழுதும் தங்கள் பேத்திக்கென்று எழுதி யிருக்கிறீரோ?

பசுபதிப்பிள்ளை.—ஆம். சவுரிமுத்துக்கு வைத்த தொகை தவிர மற்றதெல்லாம் பேத்திக்கே வைத்திருக்கி றேன்.

பவான்ஸிங்.—ஆனல் அதில் ஒரு நிபந்தனையுண்டல் லவா?

பசுபதிப்பிள்ளை.—ஆம். என்பேத்தி ஏதாவது தகாத குற்றஞ்செய்து அகௌரவம் தேடிக்கொண்டால் அவ ளுக்கு ஒன்றும் கிடைக்காது. அப்போது ஆஸ்தி முழு தும் சவுரிமுத்துக்கே சேரும். உனக்கு இதெல்லாம் எப் படித் தெரியும்?

பவான்ஸிங்.—"நடந்த சில விஷயங்களின்மேல் உத் தேசித்துக் கொண்டேன். நான் கூறுவதைச் சற்று நிதானமாய்க்கேளும்" என்று சவுரிமுத்தின் நடத்தையை விபரமாய்க் கூறினான்.

இதைக்கேட்ட பசுபதிப்பிள்ளை மிக்க துயரமும் அடங்காக் கோபங்கொண்டு, "ஐயோ! நீர் தெய்வ கெதியாய் அச்சமயம் பாராதிருந்துவிட்டால் அநியாய மாய் என்பேத்தி தண்டனையடைவாளே. அந்தச் சண் டாளன் என்னைத் துரோகஞ்செய்தான். அவன் சங்கதி யப்புறம் கூறுகிறேன். தட்சணம் என்னை யென் புத்திரி யிடமும் பேத்தி யிடமும் கொண்டுபோய்விடும். என் அந்தியகாலத்தில் என் பெருந்துயரைத் தெய்வம்போல் தீர்க்கவந்த உமக்கு என்ன கைம்மாறுசெய்வேன்" என்று

கண்ணீர்விட்டுக் கூறிக்கொண்டே எழுந்து வெளியில் செல்லப் புறப்பட்டான்.

பசுபதிப்பிள்ளையின் கட்டளைப்படி உடனே அவருடைய வண்டி தயார்செய்யப்பட்டதும், இருவரும் ஏறிக்கொண்டு துரிதமாய் மாகதம்மாள் வசிக்கும் மனைக்கு வந்தார்கள். தந்தையும் மகளும் சந்தித்த சங்கதியை விவரித்துக் கூறுவது அசாத்தியமான காரியம். அவர்கள் மனம் நிலைக்குவர அரைமணிநேரம் சென்றது. அதுவரையில் பெண் வீடுவந்து சேரவில்லை. பவான்ஸிங் மரகதத்தைக் கேட்கலாமென்று வாய்திறக்கப்போனான். அச்சமயம் வீதியில் ஒருவண்டி வந்து நின்றதும், சாமுவும் இன்னொரு போலீஸ்காரனும் மாகதத்தின்மகள் பத்மாக்ஷியைப் பிடித்து நடத்திக்கொண்டு உள்ளே வந்தார்கள். அவள் உடைமுழுதும் நனைந்திருந்தது. அவள் மிகவும் திகிற்பட்டவள்போல் காணப்பட்டாள். சாமு உள்ளே வந்ததும், "சீக்கிரம் உலர்ந்த உடை உடுத்துங்கள். படுக்கைபோடுங்கள். சற்று நித்திரைசெய்யட்டும், பிறகு சங்கதி கூறுகிறேன்" என்று ஆத்திரத்தோடு இயம்பினான்.

குழந்தைக்கு ஏதோ ஆபத்து நேர்ந்ததென்று யாவரும் அறிந்துகொண்டு, உடனே அவளுடைய ஈர உடையைக் களைந்து வேறுடையுடுத்தி படுக்கவைத்து விட்டபின் சாமுவின் முகத்தை நோக்கினார்கள்.

சாமு, இனி நடந்த சங்கதியைக்கூறுகிறேன் கேளுங்கள் என்று பவான்ஸிங்கையே பெரும்பாலும் நோக்கினவனாய் அடியிற்கண்டபடி கூறினான்;—

"நான் உமது உத்தரவின்படி வீதியில் கவனமாய் மேலும்கீழும் பார்த்துக்கொண்டேயிருந்தேன். கடைசியில் கோடியில் இப்பெண் வருவதைக்கண்டு மெதுவாய்

வீதியின் ஓரமாகவே நிழலில் எதிர்நோக்கிச் சென்றேன். நான் அவளுக்குப் பத்துகெஜதூரத்தில் செல்லும்போது, அவள் பின்பக்கமிருந்து ஒரு மோடார்வண்டி வந்தது. அவளைத் தாண்டியதும் அது சட்டென்று நிறுத்தப்பட்டது. உடனே ஒருவன் வண்டியிலிருந்துகொண்டே வண்டியைத் திருப்ப, மற்றொருவன் கீழேகுதித்துச் சட்டென்று இவளைப் பிடித்துத்தூக்கி வண்டிக்குள் போட்டுத் தானும் ஏறிக்கொண்டான். உடனே வண்டி வேகமாய்ப் பறந்தது. இவை யாவும் ஒரு விநாடியில் நடந்துவிட்டது.

எனக்கொன்றும் தோன்றவில்லை. வீதியில் ஒருபூதருமில்லை. வண்டி புறப்படும்போது நான் அதிக சிரமத்தோடு அதன் பின்னால் குரங்கைப்போல் தொத்திக்கொண்டேன். வண்டி சென்ற வேகத்தில் நான் எப்படி விழுந்துவிடாமல் இருந்தேனோ எனக்கே தெரியவில்லை.

வண்டி அதிக சத்தத்தோடு அதிவேகமாய்ச் சென்றது. கடைசியில் ஆற்றோரம் சென்று ஜனங்கள் நடமாடாத ஒருவிடத்தில் வண்டி நிறுத்தப்பட்டது. நான் மெதுவாய்க் குதித்து சாலையோரமிருந்த மரநிழலில் மறைந்து நின்றேன். அவர்கள் இருவரும் வண்டியிலிருந்து இவளை யெடுத்துக்கொண்டு இறங்கினார்கள். இவள் வாய் மேல் ஒரு துணி கட்டப்பட்டிருந்தது. இவள் பயத்தால் மூர்ச்சித்து அசைவற்றிருந்தாள். நான் வண்டியிலேயே கொன்று விட்டார்களென்று பயந்துவிட்டேன். இருவரும் இவளைத்தூக்கிச் செல்லும்போது நான் பின்னால் சென்றேன். ஆற்றின் ஓரமாய்ச் சென்றதும் இவளை வீசி ஆற்றில் எறிந்துவிட்டுத் துரிதமாய் வண்டியை நோக்கி யோடினார்கள்.

நான் உடனே ஆற்றில் இறங்கி இவளைப் பிடித்துக் கொண்டு எதிர்க்கரையிலேறிச் சமீபத்திலிருந்த ஒரு வீட்

டிற்குக் கொண்டுபோய் இவள் குடித்திருந்த ஜலத்தைக் கக்கச் செய்தபின் இவளுக்கு ஜீவன்வந்தது. உடனே அங்கு காவல் இருந்த போலீஸ்காரனை யழைத்து ஒரு வண்டி கொண்டுவரச் செய்து அதில் ஏற்றிக்கொண்டு நேராய் இங்கு வந்து சேர்ந்தேன்."

பவான்ஸிங்.—அந்த ஆட்கள் தெரியுமல்லவா ?

சாமு.—ஆகா, சவுரிமுத்துப் பிள்ளையும், கறப்பன் என்ற ஒருவனும்.

பவான்ஸிங்.—வண்டி அடையாளம் தெரியுமா ?

சாமு.—ஆகா, நீலநிறவண்டி அதன்நெம்பர் C. 1810.

இவையாவும் கேட்ட மரகதம் ஆ! என் தெய்வமே என்று அழுதாள். பசுபதிப்பிள்ளை மிக்க கோபமடைந்து "அச்சண்டாளனைத் தண்டித்தே தீரவேண்டும். என்மகளை யும் பேத்தியையும் இனி யொருவிஞடியும் இங்குவிடமாட் டேன். நீரும் எங்கள்கூட வீட்டிற்குவரவேண்டும். அந்தப் படுபாவிக்கு நான்விதிக்கும்தண்டனையை நீர் எதிரிலிருந்து காணவேண்டும்" என்று பவான்ஸிங்கை நோக்கிக் கூறி விட்டு, சாமுவையும் மற்றவனையும் நோக்கி, "தயவுசெய்து நாளை காலையில் இருவரும் என் வீட்டிற்கு வரவேண்டும்" என்முர். அவர்கள் அப்படியே வருவதாய்க் கூறி விட்டு விடைபெற்றுச் சென்றதே, இவர்கள் நால்வரும் வண்டி யேறி பசுபதிப்பிள்ளையின் மாளிகைக்குச் சென்முர்கள்.

சவுரிமுத்து ஆ! சனி தொலைந்தது. இனி கிழவன் சாகவேண்டியதே தடை, ஆஸ்திமுழுதும் நம்முடையதே யென்ற எண்ணத்தால் சந்தோஷமாய் வீட்டிற்குச் சென் முன். அங்கு கிழவன் இல்லாதிருக்கவே விசாரித்தான். ஒரு வயோதிகன் வந்து அழைத்துச் சென்முன் என்று கேள்விப்பட்டதும் அவன் மனதில் சற்று கலவரமுண்டா

யிற்று. குற்றமுள்ள நெஞ்சானதால் திகில் உண்டாய்விட்டது. தன் அறையில்போய் உட்கார்ந்துகொண்டான்.

பசுபதிப்பிள்ளை மற்றவர்களோடு வீடு சேர்ந்ததும், நால்வரும் ஒரு அறையில் உட்கார்ந்தபின், சவுரிமுத்தை யழைக்கும்படி கட்டளை யிட்டார். ஆள்காரன் அழைத்தபோதே அறைக்குள்வரும் அவன், "அண்ணா! எங்கேபோயிருந்தீர்கள்?" என்று கேட்டுக்கொண்டேவந்தான். அதற்குள் உள்ளே உட்கார்ந்திருந்தவர்களைக் கண்டுவிட்டான். மரம்போல் நின்றுவிட்டான். அவன் கண் இருண்டது, தேகம் நடுங்கியது. நாவரண்டது.

பசுபதிப்பிள்ளை.—ஓ சண்டாளனே! இந்தப் பெரிய மனிதன் தெரியுமா பார். நீ சற்றுநேரத்திற்கு முன் ஆற்றில் போட்ட இக்குழந்தையைப் பார். உன் காரியமெல்லாம் வெளிச்சமாய் விட்டது. உன்னை யென்னதண்டனை செய்தாலும் தகும். என் சகோதரன் பேர் வெளிவருமே யென்று பார்க்கிறேன். நீ உடுத்தியிருக்கும் உடையோடு தட்சணம் வெளியே போய்விடு. இனி யுன் ஆயுள் பரியந்தம் இந்த வீதியில் உன் முகத்தைக் காட்டாதே. கண்டேனோ நீ செய்த குற்றத்திற்காக உடனே போலீஸாரிடம் ஒப்பித்துவிடுவேன். போய்விடு சீக்கிரம்" என்றார்.

அந்தப் பாமதுஷ்டன் குனிந்ததலை நிமிராமல் நழுவிவிட்டான். மாகதமும் பத்மாவதியும் சுகமடைந்தார்கள். சாமுவும் மற்றொரு போலீஸ்காரனும் மறுநாள் காலையில் வந்து நல்லபரிசு பெற்றுக்கொண்டு சென்றார்கள். பவான்ஸிங் ஒருவிதப் பரிசும் ஏற்றுக்கொள்ளமாட்டேனென்று மறுத்தும், ஒரு விலையுயர்ந்த இரத்தினக் கணையாழிமட்டும் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று.

---

## 14-வது அத்தியாயம்

**பவான்ஸிங் பின்னும் உளவுகளைக் கண்டுபிடித்தல்—பூரண ஜெயத்தோடு இரத்னபுரிக்குத் திரும்புதல்—குணசுந்தரன் திகில் ஒழிந்தது—முதல் நாள் சேஷன் விசாரணை.**

மறுநாள் காலை வண்டியேறி பவான்ஸிங் மேலாபுரம் சென்றான். அங்கே பஞ்சநாதனும் அக்கன்னிகையும் இறங்கியிருந்த ஹோட்டலைச் சுலபமாகவே கண்டுபிடித்து அங்கு நடந்த விஷயங்களை யறிந்துகொண்டு, அங்கிருந்து மறுநாள் புறப்பட்டுப் பருதிபுரம்வந்து, அங்கு இன்னம் இரண்டொரு விஷயங்களை யறிந்துகொண்டு அதைவிட்டுப் புறப்பட்டு மூன்றாவது நாள் காலை இரத்னபுரிக்குவந்து சேர்ந்ததே, முதல் தான் அங்கிருந்து புறப்பட்ட நாள் தொடங்கி அன்றைவரையில், செய்த தொழில்களை யெல்லாம் விபரமாய் எழுதிவைத்துக் கொண்டான். அதன் பிறகு பருதிபுரத்தில் வர்த்தகர் கொடுத்த குறிப்புகளைப் பார்த்துக்கொண்டு உடனே சேந்தனூருக்குப் புறப்பட்டான்.

சேந்தனூர் சேர்ந்ததும் அங்கிருந்து நடந்து சுமார் மூன்று மைல் தூரத்திலிருக்கும் லால்குடி என்ற கிராமத்திற்குச் சென்றான். அங்கு போகும்போது நடுப் பகலாயிற்று. அங்கே சுகஸ்தானம் என்ற வீடு எது என்று விசாரித்துக்கொண்டு அந்த வீட்டிற்குச் சென்றான். அது ஒரு அழகான சிறு வீடு. புஷ்பச்செடிகள் நிறைந்த ஒரு சிறு தோட்டத்தின் மத்தியிலிருந்தது. ஒரு சாளரத்தில் அறைகள் வாடகைக்கு விடப்படும் என்று எழுதிய ஒரு பலகை மாட்டப்பட்டிருந்தது.

பவான்ஸிங் தோட்டத்தின் வழியேசென்று வீட்டின்

கதவைத்தட்டினுன். உடனே சுமார் நாற்பதுவயதுடைய சற்று பருமனுன ஒரு மூதாட்டிவந்து கதவைத்திறந்தாள். பவான்ஸிங் அவளைக்கண்டதும் “ அம்மா ! இரங்கம்மாள். என்பது நீதானு ?” என்றுன்.

அம்மாது ஆம் ஐயா, என்ருல் தங்களுக்கு என்னகாரியம் ஆகவேண்டியதோ ? உள்ளே வந்து உட்காரலாமே என்ருள். பவான்ஸிங் அவ்வாறே யுள்ளே சென்று ஒரு நாற்காலியில் உட்கார்ந்தபின், அம்மாதைநோக்கி “அம்மா! நான் இரத்னபுரியி லிருந்து உன்னிடம் ஒரு சமாசாரத்தைப்பற்றி விசாரிப்பதற்காக வந்தேன் ” என்றுன்.

அம்மாது.—“ ஆ ! இரத்னபுரியி லிருந்தா வந்தீர்கள் ? அறைகள் வேண்டுமானுல் பின் பக்கம் நேர்த்தியான அறைகளிருக்கின்றன. இன்னம் கொஞ்ச காலம் சென்ருல் ஆற்றில் நிறைய வெள்ளம் போவதும் மரங்கள் பச்சென்று செழித்துப் புஷ்பக்கொத்துகளைத் தொங்கவிட்டுக்கொண்டிருப்பதும், குயில்கள் வந்து பாடுவதும் மிக நேர்த்தியான காட்சியாயிருக்கும். தென்றல் மிக்க சுகமாய்வீசும். தோட்டத்திலுள்ள புஷ்பச் செடிகளிலிருந்து சதா நறுமணம் வீசிக்கொண்டே யிருக்கும். வெளியில் ஆற்ருேரம் உலவச் சென்ருல்..............” என்று அந்த விடத்தை வர்ணிக்க ஆரம்பிக்க, அதற்குள்,

பவான்ஸிங்.—“அம்மா, நான் அறைகளுக்காக வரவில்லை. நான் வந்தது வேறேகாரியம், அதைக் கூறு முன்பு நான் யாரென்றுதெரிவிப்பது நலமென்று எண்ணுகிறேன். நான் ஒரு துப்பறியும் உத்தியோகஸ்தன்” என்றுன்.

இதைக் கேட்டதே அம்மாது திடுக்கிட்டு அச்சமடைந்து, “ துப்பறிபவரா ! ஐயா, நான் ஒரு எளிய

ஸ்திரீ, ஆதரவற்றவள் என்மேல் ஒரு குற்றமு மில்லையே. தாங்கள்"........என்று கூறுவதற்குள்,

பவான்ஸிங்.—"பயப்பட வேண்டாம். உன் மேல் ஒன்று மில்லை. நான் கேட்பதற்கு நீ உண்மையானபதில் கூறிவிட்டால் உனக்கு எவ்விதக் கெடுதியுமில்லை" என்றான்.

அம்மாது "ஐயா என்னிடம் ஒரு சூதுமில்லை. எதைக் கேட்டாலும் கேளும். கடவுளறிய உண்மையை யொளிக்காமல் கூறிவிடுகிறேன்" என்றாள்.

பவான்ஸிங்.—கொஞ்சநாளைக்கு முன் இவ் வீட்டில் பஞ்சநாதன் என்ற ஒருமனிதன் வந்து சிலகாலம் வசித்துக் கொண்டிருந்தானல்லவா?

இரங்கம்மாள்.—ஐயா, அப்பெயர் கொண்டவர்கள் யாரும் இங்குவந்ததேயில்லை. இந்தவருடம் ஒரேமனிதன் தான் ஒரு கன்னிகையோடு கூட இங்கேவந்து சிலகாலம் இருந்தான். அவன் பெயர் அண்ணுசாமிப்பிள்ளை.

பவான்ஸிங், "நான் கொண்டுவந்தது தக்கதான சமாசாரமாச்சே. "சேந்தனூருக் கடுத்த லால்குடியில் சுகஸ்தானம் என்ற வீட்டிலிருக்கும் அண்ணுசாமிப் பிள்ளை பார்வை யிட்டு பஞ்சநாதப் பிள்ளைக்குக் கொடுப்பது" என்று தன் ஜேபியிலிருந்த ஒருசிறு புத்தகத்தை யெடுத்துப்பார்த்து வாசித்தான்.

இரங்கம்மாள்.— சரிதான். சுகஸ்தானம் என்பது ஒன்றுதான் இங்கே யிருப்பது. அண்ணுசாமி பிள்ளை யென்பவன் இங்கே வசித்துக்கொண்டிருந்தது மெய்தான். அவன் மனைவி ஆ! நல்ல அழகானவள். அந்த ஒரு பெருமைதான் அவனைப்பற்றி கூறக்கூடும்.

அவள் கூறிய மாதிரியில் அவன் விஷயத்தில் அவளுக்கு வெறுப்பென்று தெரிந்தது. பவான்ஸிங்குக்கு

ஒரு சந்தேகம் தோன்றியது. இப்படித்தான் இருக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டே தன்னிடமிருந்த பஞ்சநாதன் படத்தையெடுத்து "நீ கூறிய அண்ணாசாமிப் பிள்ளையோ பஞ்சநாதனோ இவன்தானா பார்!" என்று காட்டினான். அம்மாது அதைப்பார்த்ததும், "ஆகா, இவனே. தடையென்ன. ஒரு சந்தேகமுமில்லை, இவன்றான் இங்கிருந்த அண்ணாசாமிப்பிள்ளை" என்றாள்.

இதனால் பஞ்சநாதன் அங்கு அண்ணாசாமிப்பிள்ளையென்று மாறுபெயர் வைத்துக்கொண்டிருந்தா னென்று தெரிந்தது. இரங்கம்மாள் பின்னும் பவான் ஸிங்கை நோக்கி, "அவன் உமது நண்பனல்லவென்று நம்புகிறேன். ஏனெனில் எனக்கென்னமோ அவன் விஷயம் பிடிக்கவில்லை. அவன் அப்பெண்ணை நடத்தியதைப் பார்த்தால் யாருக்கும் அவன் மேல் வெறுப்பே யுண்டாகும். அதை நினைத்தாலும் இரத்தம் கொதிப்பெடுக்கிறது" என்றாள்.

பவான்ஸிங்.—அப்படியானால் அவனுக்கு ஒரு மனைவி கூட இருந்தாளா? நல்ல வேடிக்கை. உனக்குத் தெரிந்த வரையில் கூறுபார்ப்போம்!

இரங்கம்மாள்.—கூறவேண்டியது அதிகமில்லை. முதலில் வந்தபோது, தான் சித்திர மெழுதுகிறவ னென்றும், இரத்னபுரியிலிருந்து வந்ததாகவும், கொஞ்ச நாள் இங்கு நிம்மதியா யிருக்க வெண்ணி வந்ததாகவும் கூறினான். இதே அறையையும் மேலே படுக்கைக்கு ஒரு அறையையும் வாடகைக்கு அமர்த்திக் கொண்டார்கள். கொஞ்ச காலம் எல்லாம் அடக்கமாகவே நடந்துவந்தது. அப்புறம் வரவரப்பார்த்தால் அப்பெண்ணை அலட்சியம்செய்ய ஆரம்பித்தான். ஒவ்வொருசமயம் ஐந்துநாள் ஆறுநாள் ஒன்றும் சொல்லாமலே எங்கோ போய்விடுவான். அப்பெண், பாபம், என்னேரமும் அழுத கண்ணும் சிந்திய

மூக்குமாயிருந்தான். கடைசியில் அவளை யடியோடு விட்டு விட்டுப் போய்விட்டான். அப்பெண் பரிதாபம் எத்தனை நாள் காத்துக்கொண்டிருப்பாள்? அவள்பட்ட கஷ்டத்தை நினைத்தால் துயரம் வருகிறது. அவள் கடைசியில் என்னிடம் வந்து "அம்மா உனக்கு ஆறுவாரத்திய வாடகை சேரவேண்டும். நான் போய் இரத்னபுரியில் என் கணவனைத் தேடவேண்டும். என் துணிமணி யாவற்றையும் வைத்து விட்டுப் போகிறேன். எப்படியாவது உமது வாடகைப் பணத்தை யனுப்பிவிடுகிறேன். நீர் என்னை யவ்வளவுதூரம் நம்பியனுப்பவேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள். எனக்கு அவள் விஷயத்தில் மிக்க பரிதாபமாய் விட்டதால், ஒன்றும் தரவேண்டாம் நீ போய் கடவுள் தயவால் உன் புருடனோடு சேர்ந்தால் போதும்; செலவிற்குப்பணம் நான் தருகிறேன்" என்று அவளுக்குத் தைரியம் கூறி வழிச்செலவிற்குப் பணங்கொடுத் தனுப்பினேன்.

அவள்சென்ற ஒரு வாரத்திற்குள் எனக்குச் சேர வேண்டிய தொகையைக் குறையாமல் அனுப்பிவிட்டாள். ஆனால் அவள்புருடன் அகப்பட்டதும் அகப்படாததும் ஒன்றும் தெரியவில்லை.

பவான்ஸிங்.—அம் மனிதனை மறுபடி பார்த்தால் தெரிந்து கொள்வாயல்லவா ?

இரங்கம்மாள்.—ஆகா. தெரிந்துகொள்வேன். ஐயா! இப்போது நான் வெளியிட்ட சங்கதிகளால் ஒன்றும் கெடுதிவாராதே ?

பவான்ஸிங்.—கெடுதிக்குப் பதிலாய் நன்மை யுண்டாகும். அநீதமாய் கொலைக்குற்றம் சாட்டப்பட்டிருக்கும் ஒருவாலிபன் நிரபராதியென்று நிரூபிக்கப்படுவான். அவனுக்காக என்சிநேகிதர் ஒருவர் மெய்யான கொலையாளி

யைக் கண்டு பிடிக்கும்படிக்கு என்னைக் கேட்டுக்கொண்டார். அதற்காகவே நான் இதைப்பற்றி விசாரிக்க இவ்வளவுதூரம் வந்தேன். படுகொலை நடந்திருக்கிறது.

இரங்கம்மாள்.—ஐயோ, படுகொலையா?

பவான்ஸிங்.—ஆம். அந்தக்கன்னிகை அவனைத்தேடிக் கொண்டு இரத்னபுரியில் வந்திருந்தபோது, இம்மாதம் 15ஃ இரவு மிகவும் குரூரமாய்க் கொலைசெய்யப்பட்டாள்.

இதைக் கேட்டதே அம்மாது மிக்க துயரமடைந்து துடிதுடித்துப் பரிதபித்தாள்.

பவான்ஸிங்.—ஆ! இங்கிருக்கையில் அவனுக்கு ஏதாவது கடிதங்கள் வந்தனவா?

இரங்கம்மாள்.—ஒருநாள் ஒருகடிதம்வந்தது. தபால் முத்திரையால் அது இரங்காபுரத்திலிருந்து வந்ததென்று தெரிந்தது. மேல்விலாசம் ஒருஸ்திரீயின் கையெழுத்து. தபாற்காரன் அதை அவன் மனைவியிடம் கொடுக்க, அவள் அவனிடம் கொடுத்து இரங்காபுரத்திலிருந்து உமக்குக் கடிதம் எழுதுகிறவர்யார் என்று கேட்டாள். அச்சண்டாளன் கோபத்தோடு அக்கடிதத்தை வாங்கிக்கொண்டு தன் அறைக்குப்போய்விட்டான். அப்பெண் பாபம் அன்றெல்லாம் அழுதுகொண்டே யிருந்தாள்.

பவான்ஸிங்.—அக்கடிதம் ஒருஸ்திரீ யெழுதியதென்று அறிய வேறுகாரணம் உண்டோ?

இரங்கம்மாள்.—ஐயா! நான் அன்னியர் விஷயங்களில் எப்போதும் தலையிடுவதில்லை. ஒத்துக்கேட்கிறது முதலிய குற்றம் என்னிடத்தில் கிடையாது. இவன் அப்பெண்ணைச் செய்துகொண்டிருந்த சீர்கேட்டால் இவன் விஷயங்களைச் சற்று கவனிக்கவேண்டியிருந்தது. அக்கடிதம்வந்த சற்றுநேரம் பொறுத்து இவன் என்னையழைத்து, நான் ஸ்டேஷனுக்கு ஒரு தந்தி சமாசாரம் அனுப்ப

வேண்டும், நம்பிக்கையான ஆள் யாராவ திருக்கிறார்களா வென்று கேட்டான். நான் எனக்குத்தெரிந்த ஒரு சிறுவனை யழைத்துவந்து விட்டு, இவன்தான் இங்குவருகிறவர்கள் கடிதங்களைத் தபாலுக்குக் கொண்டுபோகிறவன் என்று கூறினேன். அவன் சிறுவனிடம் தந்தி சமாசாரந்தைக்கொடுத்து பணமும் கொடுத்தனுப்பினான். நான் கொல்லைவழியாய்ச்சென்று வீதியின் திருப்பத்தில் பையனைச்சந்தித்து கடிதத்தைவாங்கி பிரித்துப் பார்த்தேன். அதில் "அப்படியேயாகட்டும்" என்ற ஒரேவார்த்தையிருந்தது. விலாசம், "மனோன்மணியம்மாள் நெ. 13-புளியஞ்சோலை, இரங்காபுரம்" என்று எழுதியிருந்தது. அவன் அன்றுமாலை சென்றவனே; மறுபடிவரவேயில்லை" என்று கூறினாள்.

பவான்ஸிங் அந்த விலாசத்தைத் தன்புத்தகத்தில் குறித்துக்கொண்டு, அந்த ஸ்திரீயினிடம் கால்மணி நேரம் ஏதோ இரகசியமாய்ப் பேசிவிட்டு, முடிவில் "பத்திரம், எந்தசங்கதியும் யாருக்கும் வெளியிடாதே. குறித்த தினம் தப்பாமல் வந்துவிடு" என்று கூறிவிட்டு விடைபெற்றுக்கொண்டு உடனே இரத்னபுரிக்குப் புறப்பட்டான்.

பவான்ஸிங் நகரத்திற்குவந்ததே போஜனம் செய்து கொண்டு கோட்டை ரயில் ஸ்டேஷனுக்குச் சென்றான். அன்றும் மறுநாள்காலை பத்துமணிவரையிலும் சிரத்தையோடு பார்டுபட்டபிறகு தையநாயகியின் காங்கள்வைத்து அனுப்பப்பட்ட பெட்டியைப் பார்ஸல் ஆபீஸுக்குக் கொண்டுவந்து பார்ஸல்செய்த ஆளைக்கண்டுபிடித்தான். அவனோடும் பார்ஸல் ரயிடரோடும் பேசிவிட்டு அதன் பின்பு இரங்காபுரத்திற்குப் புறப்பட்டான். அது ஒரு பெரிய கிராமம். இரத்னபுரியிலிருந்து ஆறுமைல் தூரத்திலிருக்கிறது. அங்குசென்று மனோன்மணி யம்மாளைக்

கண்டுபேசிவிட்டு சில ஏற்பாடுகள் செய்துகொண்டு அன்றுமாலையே இரத்னபுரிவந்து சேர்ந்தான். அதோடு அவன் வேலை முடிந்தது.

* * * * * * * *

ஸெஷன் விசாரணைநாள் நெருங்கிவிட்டது. அதற்கிடையில் அடிக்கடி லாயர் கடம்பநாதரும் தேவராஜப் பிரபுவும் சிறைச்சாலைக்குச்சென்று குணசுந்தரனிடம் நெடுநேரம் பேசிவிட்டு அவனுக்குத் தைரியம் கூறிவிட்டு வந்துகொண்டிருந்தார்கள். விசாரணைநடக்க இரண்டுநாளிருக்கையில் லாயர் குணசுந்தரனைக் காணச்சென்றபோது குணசுந்தரன் அவரைக்கண்டதும்,

“என்றுமில்லாத சந்தோஷக்குறி இன்று உமது முகத்தில் விளங்குகிறது. பவான்ஸிங் ஏதாவது நல்ல சங்கதி கொண்டு வந்தாரோ?” என்றான்.

லாயர்.—“வாலிபனே! இன்று நம்பகமாய் உன் நிரபராதத்தன்மை ருசுப்படுத்தப்படும் என்று கூறவந்தேன். பவான்ஸிங் உண்மையைக் கண்டுபிடிக்காமல் வரமாட்டாரென்று நான் கூறவில்லையா? உண்மையான குற்றவாளியைத் தண்டிக்க எவ்வளவு ருசுவேண்டுமோ அவ்வளவும் கண்டு பிடித்தாயிற்று. முதலிருந்து கடைசிவரையில் வரிசையாய் சங்கிலிக் கோர்வைபோல் அவன் செய்கைகள் முழுதும் கோர்த்து வைத்திருக்கிறார். அவன் தப்ப வழியேயில்லை. நீ உன் முழுகௌரவத்தோடும் விடுதலையடையத் தடையேயில்லை” என்றார்.

இதைக்கேட்ட குணசுந்தரன் நெஞ்சு படபடத்தது. அன்றுதான் அவன் மனதில் தைரியம்பிறந்தது. “ஆ! எல்லாம் சரிதான். அவன் அகப்பட வேண்டுமே.” என்றான்.

லாயர்.—அவன் தப்பமாட்டான். இனியவன் ஓடி-

விடவும் முடியாது. இரண்டுபேர் இரவும் பகலும் அவன் மேல் கண்ணோக்கமா யிருக்கிறார்கள்.

குணசுந்தரன்.—" ஆ ! அப்படியானால் அவன்யார் ? பெயரைமட்டும் கூறும் " என்று ஆவலோடு கேட்டான்.

லாயர்.—குணசுந்தரம் ! சற்றுபொறு ; தக்ககாலத்தில் எல்லாம் வெளியாகும். இன்னம் இரண்டுநாள்பொறு. ஒன்று கூறுகிறேன். இச்சங்கதி பகிரங்கமாகும்போது நியாயசபைமுழுதும், ஏன்—ஊர்முழுதும், இதுவரையில் என்றும் உண்டாகாத அதிசயமும் துடிதுடிப்பும் உண்டாகும் என்பது உண்மை.

குணசுந்தரன்.—இவ்வளவு தீர்மானமாய் எல்லாம் முடிந்திருக்கையில் ஏன் விசாரணையை யுடனே வைத்துக்கொள்ளாமல் காலதாமதம் செய்யவேண்டும் ?

லாயர்.—" அப்படியல்ல, சட்டத்தின்படி சடங்குகளெல்லாம் செய்தே தீரவேண்டும்; மேலும் சிலசாக்ஷிகள் தூரத்திலிருந்து வரவேண்டும். இதில் எவ்வளவு அலைச்சலும் தொந்தரவும் நேரிட்டதென்பதை நீ அறியாய். இனி சந்தோஷமாயிரு. எள்ளளவு சந்தேகமும் கொள்ளாதே " என்று கூறிவிட்டுத் தன்வளவிற்குச்சென்றார்.

விசாரணையினன்றைக்கு சபையில் என்றுமில்லாத ஜனக்கூட்டமா யிருந்தது. உயர்ந்த அந்தஸ்தி லிருப்பவர்கள் அனேகர் வந்திருந்தார்கள்.

## முதல்நாள் விசாரணை.

குணசுந்தரன் குற்றவாளியின் கூண்டில்கொண்டுவந்து நிறுத்தப்பட்டதே, நியாயாதிபதி சட்டச்சடங்கின்படி பிரமாணிக்க முன்னிலையில் அவன்பெயர் முதலிய யாவும் கேட்டுக்கொண்டபின்,

" கடந்த, மார்ச்சுமாதம் 15ஷ வியாழக்கிழமை யிரவு

தச்சுவாடிவீதி இரண்டாம் குறுக்குத்தெருவு 16-வதுநெம்பர்வீட்டில் தையநாயகம் என்ற கன்னிகையை நீ கத்தியால் குத்திக்கொன்றதாய் உன்மேல் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. நீ குற்றவாளியா அல்லவா ?" என்றுகேட்டார்.

குணசுந்தரன் நேராய் நிமிர்ந்து நின்று நியாயாதிபதியின் முகத்தை நோக்கி, "பிரபுவே, நான் கடவுளறிய அக்குற்றத்தைச் செய்யவேயில்லை" யென்றான். அதன்மேல் நியாயாதிபதி துரைத்தன லாயரைநோக்கி "இனி நீர் உமது சாட்சிகளைக்கொண்டு இவன், குற்றவாளியென்று ருசுப்படுத்தும்" என்றார். அவ்வாறே லாயர் சாக்ஷிகளைக் கூப்பிட்டு ருசுப்படுத்த ஆரம்பித்தார்.

1. வது சாக்ஷி. கொலைநடந்த வீட்டுக்காரன்.

2. வது - அவ்வீட்டில் கொலைநடந்த அறைக்குப்பக்கத்து அறையில்வசிக்கும் ஒரு அன்னியநாட்டான்.

3-வது சாக்ஷி. மேற்படி இரண்டு சாக்ஷிகளோடுகூடச் சென்று கொலைநடந்த அறையின் கதவை முதலாகத் திறந்த போலீஸ் கான்ஸ்டெபில்.

இவர்கள் மூவராலும் இறந்தவள் தையநாயகியென்றும் அவள் குறித்ததினம் கொல்லப்பட்டிருந்தாளென்றும் ருசுசெய்யப்பட்டது.

அதன்பிறகு குணசுந்தரனை யக்குற்றத்தில் சம்மந்தப்படுத்துவதற்கு வேண்டிய சாக்ஷிகள் விசாரிக்கப்பட்டார்கள்.

4-வது சாக்ஷி. வண்டிக்காரன்.

இவன் குணசுந்தரனையும் தையநாயகியையும் அன்றிரவு பெரியவீதியிலிருந்து கொலைநடந்த வீட்டிற்கு ஏற்றிக்கொண்டுபோனதாகவும், வண்டியிலேறும்போது அவள் அழுதுகொண்டு துயரத்தோடு ஏறாமல் மயங்கியதாகவும்

குணசுந்தரன் அவளைத் துரிதப்படுத்தி ஏறச்செய்ததாகவும் கூறினன்.

5-வது சாக்ஷி. ஒரு போலீஸ்காரன்.

இவன் அவ்வீதியின்வழியே போகும்போது கொலை நடந்த வீட்டிற்கெதிரில் குணசுந்தரனும் தையநாயகியும் நின்று, வார்த்தையாடிக்கொண் டிருந்தார்களென்றும், அவள் அழுதுகொண் டிருந்தாளென்றும், இந்நேரத்தில் இவர்கள் ஏன் இங்கே இவ்வாறு நிற்கிறார்களென்று தான் வியப்படைந்ததாகவும் கூறினன்.

6-வது சாக்ஷி. ஹோட்டல் காவலன்.

இவன் குணசுந்தரன் அன்றிரவு பன்னிரண்டுமணிக்கு மேல் ஹோட்டலுக்கு வந்தபோது திகிற்பட்டவன்போல் முகம்வெளுத்து மிக்க கலவரப்பட்டவன்போல் காணப்பட்டானென்று கூறினன்.

7-வது கடைசி சாக்ஷி. பஞ்சநாதன்.

இவன், குணசுந்தரன் தையநாயகத்தின்மேல் காதல் கொண்டிருந்தானென்றும், அதைத் தடைசெய்யத் தான் தேசயாத்திரைபோக ஏற்பாடுசெய்ததாகவும், கெய்ரோவில் போயிருக்கும்போது அவன் இரத்னபுரிக்குத் திரும்புவதாய்க்கூறித் தன்னைமட்டும் கிழக்கு தேசங்களைப் பார்த்துவரும்படி யனுப்பிவிட்டு நவீனபுரிக்குச் சென்றான் என்றும், அவனுக்கும் அக்கன்னிகைக்கும் கடிதப் போக்கு வரவு உண்டென்றும், லக்கூரிலிருக்கையில் அவளிடமிருந்து ஒரு கடிதம் வந்ததாகவும், நவீனபுரியில் குணசுந்தரன் அக்கன்னிகையைச் சந்தித்து அவளோடு போஜனமருந்தி அவளை நாடகத்திற் கழைத்துச் சென்றதாய் அவனே தன்னிடம் கூறியதாகவும் கூறினன்.

அதன்பிறகு துரைத்தன லாயர் எழுந்து, நியாயாதிபதியை நோக்கிக் கீழ்க்கண்டபடி கூறினர்:—

"குணசுந்தரன் முதல் தையநாயகத்தைத் தன்னிடம் அமர்த்திக்கொண்டு, அவளைப் பார்த்து படம் எழுதியபின்னும் அனுவசியமாய் அவளை வேலையில் வைத்துக்கொண்டிருந்தான். அவன் நண்பனுன பஞ்சநாதன், அவன் அக்கன்னிகை மேல் காதல்கொண்டிருப்பதை யறிந்து அதை நிறுத்தச் சிரத்தை யெடுத்துக்கொண்டு தேசயாத்திரை போக ஏற்பாடு செய்தான். குற்றவாளி கெய்ரோவில் பஞ்சநாதனைப் பக்குவமாய் அனுப்பிவிட்டுத்தான் திரும்பி நவீனபுரிக்கு அப்பெண்ணைக் காணச்சென்றான். இதனால் குற்றவாளி அவளை நேசித்திருந்தானென்று நன்கு விளங்குகிறது. பிறகு இவன் இரத்னபுரிக்குத் திரும்பிவந்த பின் தேசூரில் ஒரு கன்னிகையை மணம்செய்ய ஏற்பாடு செய்துகொண்டான். தையநாயகம் இவனைத் தேடி மறுபடி இரத்னபுரிக்கு வந்துவிடவே, குற்றவாளி தன் கலியாணம் நடக்கப் பத்துநாள் இருக்கையில் அவளைச் சந்தித்து அவளோடு கூட அவள் வீட்டிற்குச் சென்றான். கொலை செய்ய உபயோகப்படுத்தப்பட்ட கத்தி அவன் சொந்தமென்றும், அது அவன் வீட்டிலேயே ஒளித்து வைக்கப்பட்டிருந்ததாகவும் ருசுவாயிற்று. தையநாயகத்தைக் கலியாணம் செய்துகொண்டிருந்தவன் இன்னுனென்று வெளி வாராதவரையில் குற்றவாளியே யவளை மணம்புரிந்திருந்து, இப்போது செய்துகொள்ளும் கலியாணத்திற்கு அவள் இடையூறு செய்வாளென்று பயந்தே அவளைக் கொலைசெய்துவிட்டதாய் அய்யமின்றி விளங்குகிறது" என்று வாதித்து முடித்தார்.

---

## 15-வது அத்தியாயம்

**இரண்டாவதுநாள் விசாரணை—அதிசய சம்பவம்—புதுச்சாக்ஷிகள்—விபரீத விஷயங்கள் வெளிவரல்—உண்மைக் குற்றவாளி கைதுசெய்யப்பட குணசுந்தரன் விடுதலை யடைகிறன்.**

மேல கண்டபடி துரைத் தன லாயர் தன்வாதத்தை முடித்ததே, சபையி லுள்ள அனைவரும் குணசுந்தரன் முடிந்தானென்றே எண் ணிக் கொண்டார்கள். அன்று அத்துடன் விசாரணை முடிந்தபடியால் குணசுந்தரன் மறுபடி சிறைச்சாலைக்குக் கொண்டுபோகப் பட்டான். கடம்பநாதர் கூறியவாற் ருல் அவன் உள்ளத்தில் தைரியமே யிருந்தாலும், அச்சம யம் அவன் முகம் வாட்டமடைந்திருந்தது.

மறுநாள் அவன் மறுபடி சிறைச்சாலையைவிட்டு நியா யஸ்தலத்திற்குப் புறப்படும்போது, தான் இருக்கும் அறையை உற்றுப் பார்த்து "ஆ! கடவுளே! இதைப் பார்க்கிறது இன்றே கடைசிநாளாய் வைப்பீரோ, உமது கருணை யெவ்வாறே! உம்மையே நம்பினேன்" என்று கடவுளைத் துதித்துக்கொண்டே புறப்பட்டான். சரியாய் வேளைக்கு நியாயாதிபதி, ஜூரர்கள், லாயர்கள் முதலிய யாவரும் ஆயத்தமாய் வந்துவிட்டார்கள். ஜனக்கூட் டம் முன் நாளிலும் அதிகமாயிருந்தது.

### 2-வது நாள் விசாரணை.

அன்று காலை பத்துமணிக்கெல்லாம் நியாயாதிபதி விசாரணையைத் தொடங்கினர்.

குற்றவாளியினுடைய லாயர் கடம்பநாதர் தன் சாட் சிகளை ஒவ்வொருவராய்க் கூப்பிட்டு விசாரிக்கத் தொடங் கினர்.

1-வது சாக்ஷி.—குணசுந்தரன் படம் எழுதிக்கொண்டிருந்த அறையின் சொந்தக்காரன். அவன் தையநாயகம் மிக்க அடக்கமான மரியாதையுடைய பெண்ணென்றும், குணசுந்தரன் அவளிடம் பேசும்போதும், அவளைப்பற்றி தன்னிடம் பேசும்போதும் சகோதர பாவனையாகவே நடந்துகொண்டானென்றும் கூறினன்.

கடம்பநாதர் நியாயாதிபதியை நோக்கி குற்றச்சாட்டில் 7-வது சாக்ஷியாகிய பஞ்சநாதன் என்பவரைத் தன் பக்ஷம் இரண்டொரு கேள்வி கேட்கவேண்டுமென்று கோரினர். நியாயாதிபதி யவ்வாறே அனுமதி கொடுக்கப் பஞ்சநாதன் மறுபடி சாட்சிக்கூண்டில் நிறுத்தப்பட்டான்.

லாயர்.—ஐயா ! நீர் எப்போது இரத்னபுரிக்கு வந்ததாய்க் கூறினீர் ?

பஞ்சநாதன்.—கொலை நடந்த தினம் காலை அதாவது மார்ச்சு மாதம் 15-ம் தேதி வியாழக்கிழமைதான் வந்தேன்.

லாயர்.—ஆம் ஆம். முன்னமே அப்படித்தான் கூறினீர். அது உண்மைதானே என்று நிச்சயமாய்த் தெரிந்துகொள்ள இன்னொருதரம் கேட்கிறேன். அது மெய்தானே ?

பஞ்சநாதன் சற்று கலவரமடைந்து மனக்குழப்பத்தோடு "ஆம்" என்றான்.

லாயர்.—சரி. குற்றவாளியின் வீட்டிலிருந்து அகப்பட்ட கத்தியை நீ முதல் முதல் எப்போது பார்த்தாய்?

பஞ்சநாதன்.—கெய்ரோவில் குற்றவாளி வாங்கிய போது பார்த்தேன்.

லாயர்.—அன்றுமுதல் இப்போது கொலைநடந்த பின் கோர்ட்டில்தானே அதை மறுபடி பார்த்தாய் ?

பஞ்சநாதன்.—ஆம்.

லாயர்.—இடையில் அக்கத்தியைப் பார்த்ததே யில்லையா ?

பஞ்சநாதன்.—பார்க்கவே யில்லை.

லாயர்.—ஏனெனில் நீ கூறியவைகள் உண்மையே யென்று ஸ்திரமாய்த் தெரிந்து கொள்வதற் காகத்தான் இப்போது கேட்டேன். மறுபடி கேட்கிறேன், இதெல்லாம் உண்மைதானே ?

பஞ்சநாதன்.—ஆம்.

லாயர்.—சரி. இவ்வளவுதான் உம்மைக் கேட்கவேண்டியது. நீர் கூண்டைவிட் டிறங்கலாம்.

பஞ்சநாதன், அப்பா சனி விட்டதென்று நிம்மதியடைந்து தன்னிடத்தில்போய் உட்கார்ந்துகொண்டான். உடனே யாரோ இரண்டுபேர் மெதுவாய்ச் சென்று அவன் இரண்டு பக்கத்திலும் சாடையாய் உட்கார்ந்தார்கள்.

3-வது சாக்ஷி.—சென்னூர் அப்புசாமி. அவன்கூறிய வாக்குமூலம்.

"நான் தபால்வண்டி யோட்டுகிறவன். பருதிபுரத்திலிருந்து இரத்னபுரிக்கு ஒரு மாதத்திற்குமுன் தபால்வண்டியை யோட்டிக்கொண்டு வந்தபோது, இப்போது சாக்ஷி கூறிய பஞ்சநாதர் அவ்வண்டியில் இரத்னபுரிக்கு வந்தார்" என்றான்.

லாயர்.—உனக்கு எப்படி அவரைப்பற்றி அவ்வளவு நன்றாய்க் கவனமிருக்கிறது ?

அப்புசாமி.—அன்று வண்டியில் வந்த ஒரு பிரயாணி என்னோடு சண்டையிட்டு என்மேல் மெயில் ஏஜென்டிடம் குறைகூறிக்கொண்டான். அதற்கு இந்தப் பஞ்சநாதர் சாக்ஷியாய் வந்தார்.

4-வது சாக்ஷி.—மேற்படி மெயில் வண்டியின் கார்ட். அவனும் பஞ்சநாதன் பிப்ரவரி மாதம் 5-ம் தேதியே இரத்னபுரிக்கு வந்ததை ருசுப்படுத்தினன்.

அப்போது குற்றவாளியின் லாயர் நியாயாதிபதியை நோக்கி,

"பிரபுக்களே! அந்தச் சாக்ஷியாகிய பஞ்சநாதன் பொய் சாக்ஷி கூறியிருக்கிறான் என்று நன்றாய் ருசுவான படியால் நான் கோர்ட்டார் முன்னிலையில் அவன்மேல் அக்குற்றத்தைச் சாட்டுகிறேன் என்றார்.

இதைக்கேட்டதே சபையோரனைவரும் திடுக்கிட்டுப் பஞ்சநாதனை யுற்று நோக்கினார்கள். எங்கும் ஒருவிதக் கிளர்ச்சி யுண்டாயிற்று. பஞ்சநாதன் முகம் வெளுத்து விட்டது. மிரண்டு மிரண்டு நாற்புறமும் விழித்தான்.

லாயர் உடனே ஜம்புலிங்கம் என்ற சாக்ஷியைக் கூப்பிட்டார்.

5-வது சாக்ஷி, ஜம்புலிங்கம் கூறியது.—

"நான் இரயில்வே ஸ்டேஷனிலிருந்து சிப்பங்கள் (பார்ஸல்) கொண்டுபோகும் கூலியாள். மார்ச்சு மாதம் 16௳ வெள்ளிக்கிழமை (கொலை நடந்த மறுநாள்) இரவு ஏழுமணிக்கு நான் கோட்டை ஸ்டேஷனுக்கு வெளியில் இருந்தேன். அப்போது இங்கே சாக்ஷி கூறிய பஞ்சநாதன் என்பவர் என்னைக்கண்டு உனக்கு நாலணு சம்பாதிக்கப் பிரியந்தானு வென்றார். நான் ஆம், என்ன செய்ய வேண்டும் என்றேன், அவர் ஒரு சிறுபெட்டியை யென்னிடம்கொடுத்து, "இதைக் கொண்டுபோய் பார்ஸல் ரயிடரிடம் கொடுத்து இதின்மேல் இருக்கும் விலாசத்திற்கு தேசூருக்கு அனுப்பிவிட்டு வரவேண்டும். இந்தா ஒரு ரூபா. பார்ஸல் கூலியைக் கட்டிவிட்டு மீதியைக் கொண்டு வா" என்றார். நான் அப்படியே கொண்டுபோய் பார்ஸ

லைக் கொடுத்துவிட்டு மீதி பத்தணு கொண்டுவந்து அவ ரிடம் கொடுக்கப்போனேன். அவர் நீயே யெடுத்துக் கொள் என்ருர் " என்ருன்.

லாயர் அந்த ஆளைக்காட்டு என்றுகேட்க, சாக்ஷி பஞ்ச நாதனைக் காட்டினுன். அதன்பிறகு பெட்டியை யின்னும் சில அதே அளவுள்ள பெட்டிகளோடு கலந்து வைத்துக் காட்டியபோது, அப்பெட்டியை எடுத்துக் கொடுத்தான். எப்படி அடையாளம் தெரிந்தது என்று கேட்டதற்கு, அப்பெட்டியின் பின்பக்கம் சிகப்பு மசியால் ஒரு கப்ப லைப்போல் எழுதியிருக்கிறதைக் காட்டினுன்.

இதைக் கேட்டபோது யாவரும் பிரமிப்படைந்து ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துக்கொண்டு மொண மொணவென்று பேசிக்கொண்டார்கள்.

பஞ்சநாதன் மெதுவாய் எழுந்து நழுவப்பார்த்தான். அப்போது அவன் பக்கத்திலிருந்த இருவரும் தோளைத் தொட்டு "எழுந்திருக்கவேண்டாம்" என்று அவன் செவி யிற் கூறினுர்கள். பஞ்சநாதன் அவர்கள் முகங்களை யுற்று நோக்கி, உடுப்பில்லாதிருக்கும் போலீஸ்காரர் என்று தெரிந்துகொண்டான். உடனே அவன் தேகம் நடுங்கி யது. நெஞ்சு உலர்ந்து விட்டது.

6-வது சாக்ஷி.—கோட்டை ஸ்டேஷனிலிருக்கும் பார் ஸல் ரயிடர். அவன் 5-வது சாக்ஷியாகிய ஜம்புலிங்கம் குறித்ததினம் தன்னிடம் அப்பெட்டியைக் கொண்டுவந்து பார்ஸல் செய்ததைப் பற்றிக் கூறினுன்.

7-வது சாக்ஷி.—பவான்ஸிங்.

பவான்ஸிங் சாக்ஷிக்கூண்டில் வந்து நின்றதே சபை முழுதும் ஒருவிதக் கிளர்ச்சியுண்டாயிற்று. எல்லாரும் மிக்க சாக்கிரதையாய்க் கவனத்தோடு அவனையே நோக் கிக் கொண்டிருந்தார்கள். ஏனெனில் இவன் பிரக்யாதி

பெற்ற துப்பறியும் ஆசாமியென்று யாவருக்கும் தெரியு மாதலால், இனி இக்கேஸில் ஏதோ அதிசயமான சங்கதி வெளிவரப் போகிறதென்று யாவருக்கும் வியப்பும் ஆவ லும் உண்டாயிற்று.

நியாயாதிபதி பவான்ஸிங்கை நோக்கி,

"பவான்ஸிங்! நீ இக்கேஸில் சிரத்தை யெடுத்துக் கொண்டதாய்த் தெரியவருகிறது. நவீனபுரியில் என்ன கண்டு பிடித்தாய்? யாவற்றையும் விபரமாய்க் கூறு" என்றான்.

பவான்ஸிங்.—குற்றவாளி இரத்னபுரிக்குத் திரும்பி வந்த மூன்றுவாரங்கள் கழித்து, பஞ்சநாதன் நவீனபுரிக் குச் சென்று தையநாயகத்தோடு கூட இருந்து பிப்ரவரி மாதம் 3-ம் தேதி அப்பெண்ணை யிட்டுக்கொண்டு வீரை புரம் சென்று ஒரு ஹோட்டலில் தங்கியிருந்து, சமீபத்தி லுள்ள ஒரு கிராமக் கோயிலில் சென்று அவளை மணம் செய்துகொண்டான். அங்கேயுள்ள நகை வர்த்தகராகிய இரவணப்பன் கம்பெனியாரிடம் ஒரு மோதிரம் வாங்கி அப்பெண்ணுக்குக் கொடுத்திருக்கிறான். அம்மோதிரமே இறந்தவளுடைய விரலில் இருந்தது. பிறகு அங்கிருந்து வந்து சேந்தனூருக்கருகிலுள்ள லால்குடியில் சுகஸ்தானம் என்ற வீட்டில் இருவரும் இரண்டு வாரங்களுக் கதிகமாய் வசித்திருக்கிறார்கள். அங்கு அப்பெண்ணை யிவன் அதிக கொடுமையாய் நடத்தி யிருக்கிறான். கடைசியில் ஒரு நாள் இரங்கா புரத்திலிருந்து இவனுக்கு ஒரு ஸ்திரீ எழுதிய கடிதம் இவனிடம் சேர்ந்த தினமே யிவன் அப் பெண்ணை நிராதரவாய் அங்கே விட்டுவிட்டு இரங்கா புரம் போய்விட்டான். அங்குள்ள ஒரு மாதை மணம் புரிந்து கொள்ளும்படி முயற்சி செய்து கொண்டிருந் தான். இவன் மனைவியாகிய தையநாயகம் சிலநாட்கள்

துயரத்தோடு வீணாய் இவனுக்காகக் காத்திருந்தாள். பிறகு அவ்வீட்டுக்காரி அவள்மேல் இரக்கம் கொண்டு புருடனைப்போய் தேட அனுமதி கொடுக்க, அக்கன்னிகை இவனைத் தேடிக்கொண்டு இரத்னபுரிக்கு வந்தாள். இவன் இரங்காபுரத்திலிருந்து இரத்தினபுரிக்கு அடிக்கடி வந்து கொண்டிருந்தவன், எப்படியோ அவளைக் கண்டு இருப்பிடத்தையும் தெரிந்து கொண்டான். கொலை நடந்த தினம் காலை இரங்காபுரத்திலிருந்து நகரத்திற்கு வந்து அன்றிரவு மூன்றுமணிக்கு இரங்காபுரம் திரும்பிப் போயிருக்கிறான். தையல நாயகத்தைக் கொன்றவன் இவனே. கத்தி இவனுடையதே. இவன் அதைக் குண சுந்தரன் அறையில் புத்தக பீரோவின் கீழ் மறைத்துவைத்தான். அவன் மேல் இப்பழியைப் போடவேணு மென்றே முதலிலிருந்து எண்ணியவன். இவனுக்கும் குண சுந்தரனுக்கும் மிக்க நேசமாகையால், அவள் குணசுந்தர னிடம் தன் கணவன் பெயர் இன்னதென்றும், தன் துயரத்தின் விவரத்தையும் கூற அஞ்சிப் பின்னால் கூறுவதாய்க் கூறிவிட்டாள். இப்போது நான் கூறிய விஷயங்களுக் கெல்லாம் சாக்ஷிகள் வந்திருக்கிறார்கள். கோர்ட்டார் அவர்களை யழைத்து விசாரித்தால் எல்லாம் ருசுவாகும்" என்று கூறினான்.

நியாயாதிபதி யுடனே ஒரு போலீஸ் அதிகாரியை விளித்து அவனிடம் ஏதோ கூறினார். அவன் நேராய்ப் பஞ்சநாதனிடம் சென்று "பஞ்சநாதனே! தையநாயகியைக் கொன்ற குற்றத்திற்காக அரசன் பெயரால் உன்னைக் கைது செய்கிறேன்" என்று கூறி அவனை யுடனே சோதித்து அவன் மடியிலிருந்த கெட்டித்த கைத்துப்பாக்கியை யெடுத்துக் கொண்டு அவனைச் சிறையாக்கிக் குற்றவாளியின் கூண்டில் நிறுத்தினான்.

நியாயாதிபதி குணசுந்தரனை நோக்கி.—“ குணசுந்தரனே, நீ அநியாயமாய் இத்தனைநாள் சிறையிலிருந்ததற்கும் மனோ வேதனை யனுபவித்ததற்கும் உண்மையாகவே நாம் மிக்க துயரப்படுகிறோம். ஆயினும் இதனால் உன் பெருமையும் கௌரவமும் எள்ளளவாவது குறைவு படாது. எள்ளளவு அய்யமுமின்றி நீ நிரபராதியென்று உன்னை விடுதலை செய்திருக்கிறோம் ” என்று கூறிவிட்டு கடம்பநாதரை நோக்கி,

“ இனி அச்சாக்ஷிகளை யழைத்து விசாரியும் ” என்றார்.

1-வது சாக்ஷி.—வீணாபுரத்தில் பஞ்சநாதனும் தைய நாயகியும் தங்கியிருந்த ஹோட்டலின் சொந்தக்காரன்.

இவனால் அவ்விருவரும அங்கு தங்கியிருந்ததும் கலியாணம் செய்து கொண்டதும் ருசுவாயிற்று.

2-வது சாக்ஷி.—கோயில் குருக்கள்.

இவர் அவர்களுக்குக் கலியாணம் கோயிலில் தான் நடத்தி வைத்ததைப்பற்றி சாக்ஷி கூறினார்.

3-வது சாக்ஷி.—இரவணப்பன் கம்பெனியின் முதலாளியாகிய இரவணப்பன்.

இவன் பஞ்சநாதனும் அவன்மனைவியும் தன்கடைக்கு வந்திருந்ததையும் மோதிரம் வாங்கியதையும் பற்றிக் கூறினான்.

4-வது சாக்ஷி.—இரங்கம்மாள்.

இவள் தான் லால்குடியிலிருக்கும் சுகஸ்தானம் என்ற வீட்டின் சொந்தக்காரியென்றும், பஞ்சநாதன் அண்ணாசாமிப் பிள்ளை யென்ற மாறுபெயரோடு தன் மனைவியுடன் அங்குவந்து இரண்டுவாரங்களுக் கதிகமாய் வசித்துக் கொண்டிருந்ததாகவும், மனைவியைக் குரூரமாய் நடத்தினதாகவும், ஒருநாள் இரங்காபுரத்திலிருந்து ஒரு கடிதம்

வர அன்றைக்கே மனைவியை விட்டுவிட்டு வந்துவிட்டதாக வும், பிறகு மனைவியவனைத் தேடிக்கொண்டு போனதாக வும் கூறினாள்.

5-வது சாக்ஷி.—மனோன்மணியம்மாள். அவள் கூறி யது :—

" நான் இரங்காபுரத்தில் வசிக்கிறேன். ஒரு வருடத் திற்கு முன் நானும் என் சிறியதாயும் தேசயாத்திரை சென்றிருந்தபோது, பருதிபுரத்தில் பஞ்சநாதம் பிள்ளை யைச் சந்தித்தோம். இவரும் எங்களோடுகூடவே சுமார் ஒருமாதம் யாத்திரை செய்தபடியால் மிக்க சிநேகித மாய் விட்டோம். பிறகு நாங்கள் வீடுவந்து சேர்ந்த பின்பு இவர் இரங்காபுரத்திற்கு வந்திருந்தார். எங்கள் வீட்டிலேயே யிருந்தார். இவர் வந்தது ஒருமாதத்திற்கு முந்தி. அப்போது தன்னை மணம்புரிந்து கொள்ளும்படி யென்னைக் கேட்டார். எனக்குத் தாய் தந்தை யில்லை. தகுந்த நெருக்கமான சுற்றத்தாருமில்லை. கொஞ்சம் சொத்துமட்டு மிருக்கிறது. அதாவது ஒருவீடு, நிலங் கள், தோட்டம் முதலியனவும், பாங்கியில் முப்பதினாயிரம் ரூபாயும் இருக்கிறது. இவரைப்பற்றி விசாரித்ததில் இவ ருக்கு சௌகார்களிடம் பலவிடங்களில் கடன்கள் இருப்ப தாய்த் தெரிந்தது. ஆயினும் யோக்கியராயிருந்து அக் கடன்கள் இவர் துர்நடத்தையா லுண்டானவைகளா யிரா திருந்தால், கலியாணமான வுடனே கடன்களை யெல்லாம் கொடுத்துவிடலா மென்றிருந்தேன்.

இவர் என்வீட்டி லிருக்கும்போது அடிக்கடி இரத்ன புரிக்கு வந்துகொண்டிருந்தார். இதுவுமன்றி என்னை யுடனே மணம்புரிந்து கொள்ளும்படி தொந்தரவு செய் தார். இதன்றி ஒருநாள் அதாவது மார்ச்சுமாதம் 13 அல்லது 14-ம் தேதி இவர் இரத்னபுரிக்குச் சென்று

திரும்பிவந்து எங்கள் வீட்டில் இவருக்கு விடப்பட்ட அறையிலிருந்தார். நான் அப்போது தோட்டத்திற்குச் சென்றேன். சென்றவள் வாயிற்படியண்டை பால்காரியைக் கண்டு அவளுக்குப் பணம் கொடுக்கவேண்டித் திரும்பி என் அறைக்குச் சென்றேன். அப்போது இவர் என் அறையில் நின்றுகொண்டு, ஒரு பூட்டின் வாய்ப்புறத்தில் ஒத்தி யெடுக்கப்பட்ட ஒரு மெழுக்குருண்டையை மேஜைமேல்வைத்து என் அறையிலிருந்த சாவிக்கொத்தை யெடுத்து அந்த அடையாளத்திற்குத் தகுந்த சாவி யிருக்கிறதாவென்று தேடிக் கொண்டிருந்தார். கடைசியில் ஒன்று அகப்பட்டது. "நகரத்தில் பாங்கியில் என் பெட்டியை வைத்திருக்கிறேன். அதன்சாவி காணமற் போய் விட்டது. அதற்காக ஒரு சாவி தேடுகிறேன்" என்று என்னிடம் கூறி அச்சாவியை யெடுத்துக்கொண்டு 15-ம் தேதி வியாழக்கிழமை காலை நகரத்திற்குச் சென்றார். இத்தனை நாள் சென்றால் மாலை வந்துவிடுகிறவர், அன்று இரவு 9-மணிக்கு நகரத்திலிருந்து திரும்பி வந்தார். இந்த இரண்டு மூன்று விஷயங்களால் எனக்கு இவர்மேல் சந்தேகம் உண்டாயிற்று. ஆகையால் நான் இவரை மணம்புரியச் சம்மதியாமலே காலதாமதம் செய்துகொண்டிருந்தேன்."

மனோன்மணியம்மாள் மேற்கூறிய விஷயங்களை யியம்பியதே, இவைகளையும் முன் இரங்கம்மாள் முதலியவர்கள் கூறியதையும் கேட்ட சபையோர் வியப்பும் பஞ்சநாதன் மேல் கோபமும் அடைந்தார்கள். குணசுந்தரன் இவை யாவும்கேட்டு அதிசயமும், பிரமையும், துயரமும், கோபமும் அடைந்து பதுமைபோல் அசைவற்றிருந்தான்.

லாயர் கடம்பநாதர் பார்ஸலில் வந்த அச்சிறு பெட்டியை யெடுத்து மனோன்மணியம்மாளுக்கு காட்டி "இப்பெட்டியை நீர் பார்த்திருக்கிறீரா?" என்று கேட்டார்.

மனோன்மணியம்மாள் அதைப்பார்த்ததும் அதிசயமடைந்து, “ ஆகா ! இது எப்படி இங்கேவந்தது ? நான் வீணாய் எங்கும் தேடினேனே. இது என் பெட்டி, நான் விஞபுரத்திலிருந்து சில சாமான்கள் வரவழைத்தேன். அச்சாமான்கள் இப்பெட்டியில் அடக்கம் செய்யப்பட்டு வந்தன. நான் இதை என் அறையில் மேஜைமேல் புத்தகங்களோடுகூட வைத்திருந்தேன். இந்த ஆள் சாவி எடுத்துக் கொண்டுவந்த தினம்கூட அது இருந்தது. வியாழக்கிழமை இரவு வந்தவன் மறுபடி தனக்கு ஒரு சிநேகிதன் வீட்டில் முக்கியமான வேலை யிருக்கிறதென்று கூறி மறுநாள் அதாவது மார்ச்சுமாதம் 16-ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை நகரத்திற்கு வந்துவிட்டான். அன்றுமுதல் இப்பெட்டி காணப்பட வில்லை. இவனே யெடுத்துக் கொண்டு வந்துவிட்டான். இப்பெட்டியின் பின்பக்கம் சிகப்பு மசியில் நான் வேடிக்கையாய் ஒரு கப்பல்போல எழுதியிருக்கிறேன். மேலும் எனக்குச் சாமானனுப்பிய கம்பெனியின் முத்திரையும் இதன்மேல் காணலாம் ” என்று கூறினாள்.

இதன்பிறகு 6 வது சாக்ஷியாக சின்னசாமி என்பவன் சாக்ஷிக்கூண்டில் நிறுத்தப்பட்டான். அவன் வாக்குமூலம் அடியில் வருமாறு ;—

“ நான் குணசுந்தரம் பிரபு அவர்கள் தோட்டக்காரன். கொலை நடந்த தினத்திற்கு இரண்டாவது நாள் சனிக்கிழமை இந்தப் பஞ்சநாதன் என்பவர் எஜமான் வீட்டில் வந்திருந்தார். அன்று சாயந்திரம் யாவரும் உலாவுவதற்காக வீதியின்வழியே சென்றுகொண் டிருந்தார்கள். நான் தோட்டத்திற்குச் சென்று அங்கே பழுத்து விழுந்திருந்த ஒரு தென்ன ஓலையை முடைய ஆரம்பித்தேன். நான் உட்கார்ந்தவிடம் ஒரு மண்மேடை.

அந்த மேண்டை எஜமானனுடைய வாசிக அறைக்கு நேராய் இருந்தால், அங்கிருந்து பார்த்தால் பெரிய சாளரத்தின் மூலமாய் அறையின் ஒருபாதி நன்றாய்த்தெரியும். அந்தப் பாதியில்தான் எஜமானனுடைய புஸ்தகபீரோ வைக்கப் பட்டிருக்கிறது. இந்த ஆள் அந்த பீரோவுக் கெதிரில் நின்றுகொண்டு சுற்றும் முற்றும் திரும்பித் திரும்பிப் பார்த்தார். இவர் மற்றவர்களோடுகூட உலவச்செல்லாமல் அங்கிருந்ததே எனக்கு வியப்பாயிருந்தது. அதோடு இவர் பார்த்தபார்வையால் ஏதோ தகாதகாரியத்தைச் செய்யப்போகிறவன் யாராவது பார்க்கிறார்களா வென்று முன்னாடி எச்சரிக்கையாய் பார்ப்பதுபோ லிருந்தது. எனக்குள் இவர் எதையோ திருடிக்கொள்ளப் பார்க்கிறார் என்றே நினைத்துக்கொண்டு இவரைப்பார்த்தபடி யிருந்தேன். இவர் அப்படி சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுத் தன்மடியிலிருந்து கடிதத்தில் சுற்றிய எதையோ யெடுக்கக் கடிதத்தைப் பிரித்தார். உள்ளே ஒரு கத்தியிருந்தது. இவர் சட்டென்று குனிந்து அந்த பீரோவின்கீழ் கையை நுழைத்து மறுபடி யெடுத்துக்கொண்டார்; அப்போது கத்தி கையிலில்லை. நான் இவர் வீட்டிலிருந்த கத்தியை யெடுத்து மறைத்துவைத்துக்கொண்டு, மறுபடி யோசித்து அங்கேயே வைத்துவிட்டாரென்று நினைத்துக் கொண்டேன். அதை யுடனே யாரிடமாவது கூறியிருப்பேன் ஆனால் எல்லாரும் ஏதோ மனச்சஞ்சலமுள்ளவர்கள்போல் ஒருமாதிரியாய்க் காணப்படவே, இதைப்பற்றி நான் பிரஸ்தாபிக்கவில்லை. மேலும் இவர் எஜமான் சினேகிதரானதால் இதை நாம் வெளியிற்கூறினால் நமக்கே கெடுதி வருமென்று, அதாவது எஜமானன் கோபிப்பார் என்று, பேசாமலிருந்து விட்டேன். அன்று போலீஸார் வந்து சோதனை செய்துவிட்டுச் சென்ற இரண்டாவது நாள்